# சென்னைப் பல்கலைக்கழக மொழிப்பாடத்திட்டத்தில் சங்க இலக்கியம் கற்பித்தல் முறைகள் (2000 முதல் 2010 வரை)

சென்னைப் பல்கலைக்கழக
முழுநேர முனைவர் (பிஎச்.டி.) பட்டப் பேற்றிற்காக
அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்
**வீ. அர்ச்சுணன்,** எம்.ஏ., எம்.எட்., எம்.ஃபில்.,
தமிழ்த்துறை
மாநிலக்கல்லூரி (தன்னாட்சி)
சென்னை–600 005

மேற்பார்வையாளர்
முனைவர் **ஜே.ஆர். இலட்சுமி**
எம்.ஏ., எம்.ஃபில்., எம்.எட்., பிஎச்.டி. (தமிழ்)
எம்.ஏ., (வரலாறு & சுற்றுலாவியல்) பிஎச்.டி., (கல்வியியல்)
தமிழ் இணைப்பேராசிரியர்
மாநிலக் கல்லூரி (தன்னாட்சி)
சென்னை–600 005






தமிழ்த்துறை
**மாநிலக் கல்லூரி (தன்னாட்சி)**
சென்னை - 600 005

**அக்டோபர் - 2012**

**முனைவர் ஜே. ஆர். இலட்சுமி,** எம்.ஏ., எம்.ஃபில்., எம்.எட்., பிஎச்.டி. (தமிழ்),
எம்.ஏ., (வரலாறு & சுற்றுலாவியல்) பிஎச்.டி., (கல்வியியல்)
இணைப்பேராசிரியர், தமிழ்த்துறை
மாநிலக் கல்லூரி (தன்னாட்சி)
சென்னை–600 005.

# மேற்பார்வையாளர் சான்றிதழ்

**திரு. வீ. அர்ச்சுணன்** அவர்கள் முழுநேர ஆய்வாளராக **“சென்னைப் பல்கலைக்கழக மொழிப்பாடத்திட்டத்தில் சங்க இலக்கியம் கற்பித்தல் முறைகள் (2000 முதல் 2010 வரை)”** என்னும் தலைப்பில் ஆய்வு மேற்கொண்டு எழுதியுள்ள இந்த ஆய்வேடு, சென்னை மாநிலக் கல்லூரித் தமிழ்த்துறையில், என் மேற்பார்வையில் நிகழ்த்தப்பெற்ற ஆய்வின் வடிவாக்கமாகும். இந்த ஆய்வேடு இவரது சொந்த முயற்சியில் உருவானது என்றும், இதற்குமுன் வேறு எந்தப் பட்டத்திற்கோ ஆய்வரங்கிற்கோ, இது அளிக்கப்பெறவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

ஜே. ஆர். இலட்சுமி

இடம்: சென்னை–5.

நாள்: 5-10-2012

**(ஜே.ஆர். இலட்சுமி)**

**மேற்பார்வையாளர்**

**முனைவர் ஜே. ஆர். இலட்சுமி**
எம்.ஏ., எம்.ஃபில்., எம்.எட்., பிஎச்.டி., (தமிழ்)
எம்.ஏ., (வரலாறு & சுற்றுலா). பிஎச்.டி (கல்வி)
பிஜிடிஜேஎம்சி, பிஜிடிஎப்எல், பிஜிடிசிஐ, பிஜிடிசிஎச், பிஜிடிஎஏ
இணைப் பேராசிரியர் உயர் தமிழியல் ஆராய்ச்சி நிலையம்
மாநிலக் கல்லூரி (தன்னாட்சி), சென்னை-5

**வீ. அர்ச்சுணன்,** எம்.ஏ., எம்.எட்., எம்.ஃபில்.,
முழுநேர முனைவர் பட்ட ஆய்வாளர்
தமிழ்த்துறை
மாநிலக் கல்லூரி (தன்னாட்சி)
சென்னை–600 005.

# ஆய்வாளர் உறுதிமொழி

**"சென்னைப் பல்கலைக்கழக மொழிப்பாடத் திட்டத்தில் சங்க இலக்கியம் கற்பித்தல் முறைகள் (2000 முதல் 2010 வரை)"** என்னும் பொருளில் முனைவர் பட்டத்திற்காகச் சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு அளிக்கப்பெறும் இந்த ஆய்வேடு என் சொந்த முயற்சியில் உருவானது என்றும், இதற்குமுன் வேறு எந்தப் பட்டப்பேற்றிற்கோ, ஆய்வரங்கிற்கோ அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

இடம்: சென்னை–5.
நாள்: 5. 10. 2012

**(வீ. அர்ச்சுணன்)**
ஆய்வாளர்

# நன்றியுரை

**"சென்னைப் பல்கலைக்கழக மொழிப் பாடத்திட்டத்தில் சங்க இலக்கியம் கற்பித்தல் முறைகள்"** என்னும் இந்த ஆய்வை மேற்கொள்ள அனுமதி அளித்த **சென்னைப் பல்கலைக்கழகத்திற்கும், மாநிலக் கல்லூரிக்கும்** என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

மாநிலக்கல்லூரி முன்னாள் முதல்வர் (பொறுப்பு) **முனைவர் மு. கலியபெருமாள்** அவர்களுக்கும், முதல்வர் (பொறுப்பு) **முனைவர் விஜயலஷ்மி சீனிவாசு** அவர்களுக்கும், முதல்வர் (பொறுப்பு) முனைவர் **ப. செ. இரகுராமன்** அவர்களுக்கும் தமிழ்த்துறைத் தலைவர் **முனைவர் ப. மகாலிங்கம்** அவர்களுக்கும் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த ஆய்விற்குப் பெரிதும் ஊக்கமளித்து, இவ்வாய்வு உலகத்திற்கு என்னை அறிமுகம் செய்து, பல வகையான அரிய புத்தகங்களை வாங்கி கொடுத்தும், சிறந்த கருத்துக்களை வழங்கியும், சீரிய முறையில் இவ்வாய்வினை முடிக்கப் பெரிதும் உதவிய தமிழ்த்துறை இணைப் பேராசிரியரும், நெறியாளருமான **முனைவர் ஜே.ஆர். இலட்சுமி** அவர்களுக்கு நன்றி கூறுவதில் நான் பெருமையடைகிறேன்.

என்னுடைய ஆய்வு சிறப்புற அமையக் கருத்துக்களை வழங்கி ஊக்குவித்த இணைப்பேராசிரியர்கள் **முனைவர் சு. வேலப்பன், முனைவர் கோ. கிருஷ்ணன், முனைவர் கே. அர்த்தநாரீசுவரன், முனைவர் ப. தாமரைக் கண்ணன், முனைவர் வீ. அசோகன், முனைவர் அர. ஜெயசந்திரன், முனைவர் மு. முத்துவேலு, முனைவர் இரா. சீனிவாசன், முனைவர் இரா. கண்ணன், முனைவர்**

எஃப். பாக்கியமேரி, முனைவர் கோ. வேலு, முனைவர் க. சேக்மீரான் அவர்களுக்கும், முனைவர் க. சேகர், முனைவர் இரெ. இராசபாண்டியன், முனைவர் சுப. நடராசன், முனைவர் மு. பழனி, முனைவர் ஏ. ஜம்புலிங்கம், முனைவர் ச. அந்தோணி டேவிட்நாதன், முனைவர் தாகூர் அவர்களுக்கும், திரு. உத்திராபதி, திரு. குமார், திரு. வேலு, திரு. குமார், திரு. பாலாஜி, தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் அனைவருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். தமிழ்த்துறை அலுவலக உதவியாளர் அண்ணன் **ம. சக்திவேல்** அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்விற்குக் கணக்கு சூத்திரங்களைத் தமிழ்மொழியில் மொழி பெயர்த்து வழங்கிய புள்ளியியல் துறைப் பேராசிரியரும், துறைத் தலைவருமான **முனைவர் வி. இந்துமதி** அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

களப்பணி செய்த போது எனக்குப் பலவகையில் உதவி செய்த **திருத்தனி அருள்மிகு சுப்பிரமணிய சாமி, அரசு கலைக்கல்லூரியின் முதல்வர்** அவர்களுக்கும், தமிழ்த்துறைத் தலைவர் **முனைவர் வை. இராமகிருஷ்ணன்** மற்றும் தமிழ்த்துறைப் பேராசிரியர்களுக்கும் என் நன்றியினை உரித்தாக்குகிறேன்.

**பொன்னேரி, உலகநாத நாராயணசாமி அரசு கல்லூரியின் முதல்வர்** மற்றும் தமிழ்த்துறைத்தலைவர் **முனைவர் ஆ.ஆ. பொன்முடி சுடரொளி** அவர்களுக்கும் மற்றும் தமிழ்த்துறைப் பேராசிரியர்களுக்கும் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**செங்கல்பட்டு, இராஜேஸ்வரி வேதாசலம் அரசு கலைக் கல்லூரியின் முதல்வர்** மற்றும் தமிழ்த்துறைத்தலைவர் முனைவர்

**ப.கி. கிள்ளிவளவன்** அவர்களுக்கும், முனைவர் **கா. செல்லதுரை** மற்றும் தமிழ்த்துறைப் பேராசிரியர்களுக்கும் என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**சென்னைப் பச்சையப்பன் கல்லூரியின் முதல்வர்** மற்றும் தமிழ்த்துறைத்தலைவர் முனைவர் **ப. அனுராதா** அவர்களுக்கும் தமிழ்த்துறைப் பேராசிரியர்களுக்கும் என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**சென்னை கிண்டி செல்லம்மாள் மகளிர் கல்லூரியின் முதல்வர்** அவர்களுக்கும் தமிழ்த்துறைத்தலைவர் முனைவர் **தமிழரசி** மற்றும் தமிழ்த்துறைப் பேராசிரியர் பெருமக்களுக்கு என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**சென்னை வண்ணாரப்பேட்டையில் உள்ள சர் தியாகராயா கல்லூரியின் முதல்வர்** மற்றும் தமிழ்த்துறைத் தலைவர் **முனைவர் ப. தனஞ்செயன்** மற்றும் **தமிழ்த்துறைப் பேராசிரியர் பெருமக்களுக்கு** என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சென்னை அடையாரில் உள்ள **டாக்டர் எம்.ஜி.ஆர் ஜானகி மகளிர் கல்லூரியின் முதல்வர்** அவர்களுக்கும், தமிழ்த்துறைத் தலைவர் **முனைவர் அபிதாசபாபதி** அவர்களுக்கும் மற்றும் **தமிழ்த்துறைப்பேராசிரியர்களுக்கும்** நன்றியினை உரித்தாக்குகின்றேன்.

மீஞ்சூர் **ஸ்ரீசந்திரபிரபு ஜெயின் கல்லூரியின் முதல்வர்** மற்றும் தமிழ்த்துறைத்தலைவர் **முனைவர் மோ. வசந்தகுமார்** அவர்களுக்கும், தமிழ்த்துறைப் பேராசிரியர்களுக்கும் என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

பட்டாபிராமில் உள்ள **ஜெயா கலை மற்றும்** அறிவியல் **கல்லூரியின் முதல்வர்** அவர்களுக்கும், தமிழ்த்துறைத்தலைவர் **முனைவர் சாமி பாலையா** அவர்களுக்கும், தமிழ்த்துறைப் பேராசிரியர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றேன். கல்வியியலில் பலவகையான ஆலோசனைகளை வழங்கி எனக்கு ஊக்கம் அளித்த **என்.கே.டி. கல்வியியல் கல்லூரியின் தமிழ்ப் பேராசிரியை திருமதி அன்னபூரணி** அவர்களுக்கு என் நன்றி உரித்தாக்குகின்றேன்.

கல்வியியல் ஆய்விற்கு அனைத்து வகையில் உறுதுணையாக இருந்த முனைவர் பட்ட ஆய்வாளர் **திரு. தே. சாமிவேல்** அவர்களுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இவ்வாய்விற்கு ஆங்கில மொழியில் உள்ள சார்பு இலக்கியங்களைத் தமிழ்மொழியில், மொழி பெயர்ப்பு செய்து கொடுத்த **தங்கை விஜி** அவர்களுக்கு என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என் தாய்க்கு அடுத்தப்படியாக என்னை தத்தெடுத்த **கோடம்பாக்கம் விடுதிக்கு** என் நெஞ்சார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என் ஆய்விற்கு உறுதுணையாக இருந்த **கன்னிமாரா நூலகம், மெரினா வளாக நூலகம், கோட்டூர்புரத்தில் உள்ள அண்ணா நூற்றாண்டு நூலகர்களுக்கும்** என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

என்னை இவ்வுலகிற்கு அறிமுகப்படுத்திய **என் பெற்றோர்களுக்கு** என் நெஞ்சார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன். கல்லூரி அளவிற்கு அனுப்பி என்னை அழகு பார்த்த என் மாமா **திரு. அ. இரங்கநாதன்** அவர்களுக்கும், என்னுடன் பிறந்து இறைவனிடம்

சேர்ந்த என் அண்ணன் இறைவர் **வீ. குணசேகரன்** அவர்களுக்கும் என் செம்மாந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றேன். என்னுடன் பிறந்த என் **அண்ணன்களுக்கும்** என் நெஞ்சார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இவ்வாய்விற்கு என்னை ஊக்கப்படுத்திய என் **அன்பு மனைவி அ. இந்திராகாந்திக்கு** என் மனப்பூர்வமான நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்வேட்டினைச் சிறப்புற ஒளி அச்சு செய்து கொடுத்த **டுடே கிராஃபிக்ஸ்** உரிமையாளர் **திரு. ரெ. பாபு** அவர்களுக்கும், **திருமதி. ஷீலா** அவர்களுக்கும் மற்றும் பணிக்குழுவினருக்கும் என் நன்றி.

என்னுடைய ஆய்வின் முன்னோடிகளுக்கும், இந்த ஆய்வு சிறப்புடன் முழுமை பெற உதவிய நல்ல உள்ளங்கள் அனைவருக்கும் எனது பணிவான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**(வீ. அர்ச்சுணன்)**

# பொருளடக்கம்

# *இயல் - 1*

# கற்பித்தல் கோட்பாடு

## இயல் - 2

## சார்பிலக்கியங்கள்



## இயல் - 3

## ஆய்வுநெறிமுறைகள்

## *இயல் - 4*

## புள்ளியியல் – பகுத்தாய்தலும் விளக்குதலும்



## *இயல் - 5*

## தொகுப்பாய்வுகளின் முடிவுகள்

# அட்டவணைகளின் விவரங்கள்

# வரைபடம்

# அறிமுகவியல்

## INTRODUCTION

### முன்னுரை

தொன்மையும் வளமும் மிக்கத் தமிழ்மொழியைத் தாய்மொழியாகப் பெற்றமை எண்ணி நாம் பெருமிதம் கொள்ளலாம். தமிழ்மொழி மீது காலங்காலமாக நாம் கொண்டுள்ள தணியாத அன்பும் ஆர்வமும் இதன் குன்றா இளமையாலும் வற்றாவளத்தாலும் மதிப்பிடப் பெறுவதாகும். ஒண்டமிழ், செந்தமிழ், கன்னித்தமிழ், தண்டமிழ், தீந்தமிழ், நறுந்தமிழ், பைந்தமிழ் போன்ற பல்வேறு சிறப்படைகளால் குறிக்கப்பெறும் தமிழ் அன்றும் இன்றும் தமிழர் தம் வாழ்வோடும், வளமோடும் வளமோடும் பிணைந்ததாகும்.

*"யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழி போல்*
*இனிதாவ தெங்கும் காணோம்"* (பாரதியார்)

என்று தமிழ்மொழியைச் சிறப்பித்துக் கூறுகிறார் பாரதி.

*"தமிழுக்கும் அமுதென்றுபேர் - அந்தத்*
*தமிழின்பத் தமிழெங்கள் உயிருக்குநேர்"* (பாரதிதாசன்)

### கல்வியின் சிறப்பு

*"கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு*
*மாடல்ல மற்றை யவை"* (குறள் 400)

என்ற வள்ளுவர் வாக்கினாலும்,

*"கற்கை நன்றே கற்கை நன்றே*
*பிச்சை புகினும் கற்கை நன்றே"* (வெற்றி வேற்கை 35)

என்ற வெற்றி வேற்கை அடிகளாலும்,

*“அறம் பொருள் இன்பம் வீடும் பயக்கும்*
*புறங்கடை நல்லிசையும் நாட்டும் - உறும் கவல் ஒன்று*
*உற்றுழியும் கைகொடுக்கும் கல்வியின் ஊங்கு இல்லை*
*சிற்றுயிர்க்கு உற்ற துணை”* (நீதிநெறி விளக்கம்–1)

எனும் நீதிநெறி விளக்கப் பாடலாலும் கல்வியின் பெருமையையும், மக்கள் கல்விக்குக் கொடுத்த சிறப்பினையும் நன்கு உணரலாம்.

## தாய்மொழிக்கல்வி

அரும்பெட்டகமாகப் போற்றப்படும் தாய்மொழிக்கு கல்வியில் தனியிடம் உண்டு. கல்வியின் தொடக்க நிலைகளில் தாய்மொழியே பயிற்று மொழியாக இருத்தல் வேண்டும் என்பதில் கல்வியாளர்களிடையே எந்த வேறுபாடும் கிடையாது. காந்தி, தாகூர் போன்றோரும் தாய்மொழிக்கல்வியே சிறந்தது எனக் கருதினர். தமிழ்நாட்டில் அனைத்துக் கல்லூரிகளில் தமிழ்வழி படிக்கும் மாணவர்கள் எண்ணிக்கை அதிகமாக உள்ளது. மேலும் கல்லூரி மாணவர்களுக்கு சங்கப்பாடல்களைப் பாடத்திட்டத்தில் அதிகம் இடம்பெற செய்தலின் மூலம் சங்கப் பாடலின் முக்கியத்துவத்தினையும், பழந்தமிழர்களின் பண்பாட்டினையும், இன்றைய நவீன காலத்திற்கு அழைத்து வருதல் வேண்டும்.

## கல்வி பெறும் நிலையில் தாய்மொழியின் இன்றியமையாமை

ஒரு குழந்தையானது பிறந்தது முதல் இறப்பு வரை பிறரிடம் பேச, பழக, படிக்கப் பயன்படுத்தும் மொழி தாய்மொழியாகும். தாய்மொழியே இயல்பூக்கங்களை வெளிப்படுத்தும். மனித வாழ்க்கையில் மொழியின் முக்கியத்துவத்தினை உணர்த்த வந்த அறிஞர் பாலர்டு (Ballard) அவர்கள். “எண்ணங்களும் எண்ணங்களை வெளிப்படுத்துகின்ற பேச்சுகளும் ஒன்றோடொன்று மிக நெருங்கிய தொடர்புடையவை என்றும் இவை இரண்டும் ஒன்றாகவே அழியக்கூடியவை” என்றும் கூறுகின்றார். எனவேதான் குழந்தைகளின் மொழி வளர்ச்சிக்குப் பள்ளி /

கல்லூரிகளில் தாய்மொழி பயிற்சியளித்தலே மிகச்சிறந்த வழி என்றும், மனித பண்பாட்டிற்கு அதுவே சிறந்ததொரு கருவி என்றும் குறிப்பிடுகின்றார்.

சுருங்கக்கூறின், மாணவர்களின் சிந்தனை ஊற்றை மேம்படுத்துவதற்கு தாய்மொழியே சிறந்த கருவி எனலாம்.

## பண்டையோர் கண்ட பயிற்றுமுறை

பண்டைக்காலங்களில் பல பள்ளிகள் இருந்திருக்க வேண்டும். பண்டைய நாட்களில் கல்விக்கழகங்கள் பல இருந்தன என்பதற்கும் பழைய நூல்களில் குறிப்புகள் காணப்படுகின்றன.

*"கற்கை நன்றே கற்கை நன்றே*
*பிச்சை புகினும் கற்கை நன்றே"* (புறம் 183)

*"கற்க கசடறக் கற்பவை கற்றபின்*
*நிற்க அதற்குத் தக"* (குறள் 391)

என்பன போன்ற பழங்கால, இடைக்காலப் புலவர் கூற்றுகள் கல்வி கற்கப்பட்டதன் உண்மையைக் கண்டறியலாம். நம் முன்னோர்கள் கல்விக்கு முக்கியத்துவத்தினை அளித்துள்ளனர் என்பதனையும் அறியலாம்.

பண்டைய காலத்தில் கற்பித்தல் முறைகள் காணப்படுகின்றன. தொல்காப்பிய பாயிர உரையில் நச்சினார்க்கினியர் எடுத்துக்காட்டும் மேற்கோள் பாடல் பாடங் கேட்டல் முறைகளைக் கீழ்வருமாறு காணலாம்.

*"கோடல் மரபு கூறுங் காலைப்*
*பொழுதொடு சென்று வழிபடல் முனியான்*
*முன்னும் பின்னும் இரவினும் பகலினும்*
*அகலா னாகி அன்பொடு கெழீஇக்*
*குணத்தொடு பழகிக் குறிப்பின் வழிநின்று"*

(நச்சினார்க்கினியர் பாயிர உரைபகுதி)

இதனைக் காணும் போது அக்காலத்து ஆசிரியரோடு மாணாக்கர் உடனுறைந்து நெருங்கிப் பழகுவர் என்பதனையும் ஆசிரியர் ஒவ்வொருவரையும் நன்கறிந்து அவரவருடைய இயல்பு, செயல், ஒழுக்கம், திறன்களைக் கண்டுணர்ந்து வைத்துத் தீயச் செயல்களை அவ்வப்போது போக்கவும், நல்ல செயல்களை அவர்களிடத்தில் ஊக்குவித்தனர் என்பதையும் உய்த்துணரலாம். இது பற்றிய பல செய்திகளைத் தொல்காப்பிய பாயிர நச்சினார்க்கினியர் மேற்கோள்களிலிருந்தும், தொல் காப்பியத்திலிருந்தும், நன்னூல் பொதுப்பாயிர நூற்பாக்களிலிருந்தும் அறிந்துக் கொள்ளலாம்.

கற்பித்தல்முறையைக் குறித்து நச்சினார்க்கினியர்காட்டும்.மேற்கண்ட பாடல்

*“ஈதல் இயல்பே இயல்புறக் கிளப்பின்*
*பொழிப்பே அகலம் நுட்பம் எச்சமெனப்*
*பழிப்பில் பல்லுரை பயின்ற நாவினன்*
*புகழ்ந்த மதியிற் பொருந்தும் ஓரையில்*
*திகழ்ந்த அறிவினன் தெய்வம் வாழ்த்திக்*
*கொள்வோன் உணர்வகை அறிந்தவன் கொள்வரக்*
*கொடுத்தல் மரபெனக் கூறினர் புலவர்”*

(நச்சினார்க்கினியர் பாயிர உரைபகுதி)

நன்னூலாசிரியரும் பாடம் சொல்லுதலைப் பற்றி கீழ்வருமாறு உரைப்பர்.

*“ஈதல் இயல்பே இயம்பும் காலைக்*
*காலமும் இடனும் வாலிதின் நோக்கிச்*
*சிறந்துழி இருந்துதன் தெய்வம் வாழ்த்தி*
*உரைக்கப் படும்பொருள் உள்ளத் தமைத்து*
*விரையான் வெகுளான் விரும்பி முகமலர்ந்து*
*கொள்வோன் கொள்வகை அறிந்துஅவன் உளங்கொளக்*
*கோட்டமில் மனத்தின்நூல் கொடுத்தல் என்ப”*

(நன்னூல்–36)

'காலமும் கடனும்' என்பதைத் தான் இக்காலத்தார். 'தகுதி சூழ்நிலை' (Proper, Environment) என்று கூறுவர். உரைக்கப்படும் பொருள் உள்ளத்தமைத்தல் என்பது பாட ஆயத்தத்தைக் குறிக்கும். 'கொள்வோன் கொள்வகை அறிந்து என்பது ஹெர்பார்ட் கூறும் 'மனத்தைத் தயாரித்தல் (Preparation) என்ற படியில் அடங்குகின்றது என நன்னூலாசிரியர் கற்பித்தல் முறையை விளக்கியுள்ளார்.

இவ்வாறாக இருந்த நிலைமாறி பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து கல்வியாளர்கள் உளவியலடிப்படையில் கற்போரை மையமாகக் கொண்டு இருத்தலே உண்மைக் கல்வியாகும் எனும் கருத்தினை உலகினுக்குத் தந்தனர். இதன் அடிப்படையில் பயிற்றுமுறையில் பல புதுமைகள் ஏற்பட்டன.

## கல்வியில் புதுமை

பண்டைய காலம் முதல் இன்றைய நவீன காலம் வரை கல்வித்துறையில் வியக்கத்தக்க மாற்றங்கள் நிகழ்ந்த வண்ணமாக இருக்கின்றன. குருகுலத்தில் ஆசிரியரை மையமாகக் கொண்டு விளங்கிய கல்வி பின்னர் பாடப்பொருளை மையமாகக் கொண்டு அமைந்தது. இன்றைய நூற்றாண்டில் மாணவர்களை மையமாகக் கொண்டு கல்விமுறை திகழ்கின்றது.

ஆசிரியர்களுக்குக் கற்பித்தல் துணைக் கருவிகள் பெரிதும் துணைச் செய்கின்றன. இன்றைய காலத்தில் கல்வி தொழில் நுட்பத்தில் பல மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன என்பதை உலகம் அறியும். கல்வியியல் தொழில் நுட்பத்தால் கற்றல்– கற்பித்தல் எளிதாகிறது. பள்ளிகள், கல்லூரிகள், பல்கலைக்கழகங்களில் கற்பித்தலில் அதிநவீன மாற்றம் பெறும்.

## கல்வி நுட்பவியலின் வரையறை

**ஃபின்:** கற்றலை மேம்படுத்துவதற்காகக் கற்பித்தலில் இயந்திரங்களைப் பயன்படுத்தும் நுட்பவியலே, கல்வி நுட்பவியல்.

**ஸ்கின்னர், காக்னே:** கற்பித்தலில் அறிவியல் கோட்பாடுகளைப் பயன்படுத்துதலே கல்வி நுட்பவியல்.

**அன்வின்:** புதிய உத்திகள், புதிய ஆற்றல்கள் இவற்றைக் கல்விக்கும், கல்விப் பயிற்று முறைக்கும் எவ்வாறு பயன்படுத்தலாம் என்று விளக்குவதே கல்வி நுட்பவியல் ஆகும்.

**ஜி.ஓ. லெயித்:** கல்வி நுட்பவியல் என்பது கற்றலையும் கற்றல்சூழ்நிலையையும் மேம்படுத்தி திறமையாகவும், தாக்கமுடையதாகவும் கற்பித்தலையும் கற்றலையும் வளமுடையதாக்கும் அறிவியல் பயன்பாடாகும்.

**எஸ்.எஸ். குல்கானி:** கல்வி நுட்பவியல் என்பது கல்விச் செயல்முறை, தொழில் நுட்பம், விதிகளின் பயன்பாடு, அறிவியலுடைய சமீபத்திய கண்டுபிடிப்புகள் என்ற முறையில் வரையறுக்கப்படுகின்றன.

**டபிள்யூ. கேரிச்மாண்ட்:** கற்பித்தலின் நோக்கத்தைச் சிறந்த கற்பித்தல் முறையில் கொடுப்பதற்கு வடிவமைக்கப்படும் கற்றல் சூழ்நிலையைச் சார்ந்திருப்பதே கல்வி நுட்பவியல் ஆகும்.

**எஸ்.கே. மித்ரா:** கல்வியின் உண்மையான நோக்கத்தை அடைவதற்கு பல்வேறு வழிமுறைகளில் அறிவியல் உத்திகளைப் பயன்படுத்துவது கல்வி நுட்பவியல் ஆகும்.

## கல்வித் தொழில் நுட்பவியலின் பயன்கள்

1. கற்பித்தலை வளமைப்படுத்தவும், உயிரூட்டவும் செய்கிறது.
2. மாணவர்களிடையே கற்கும் ஆர்வத்தை தூண்டுகிறது.
3. பாடப்பொருளை எளிதில் புரிந்து கொள்ளவும், நினைவில் நிறுத்தவும் உதவுகிறது.
4. மாணவர்களின் கவனத்தைக் கவர்ந்திடவும், நிலைநிறுத்தவும் செய்கின்றது.

5. பாடப்பொருளை அதிக அளவில் கற்றிடவும், கற்றவற்றை நீண்டகாலம் நினைவில் வைத்துக் கொள்ளவும் உதவுகிறது.
6. மாணவர்கள் எளிதில் அணுகிக் கற்க இயலாத நிகழ்வுகள், பொருட்கள் ஆகியவற்றை மாணவரிடம் காட்ட முடிகிறது.
7. குறிப்பாக மாணவர்களின் தனியாள் வேற்றுமைகளையும் கற்கும் வேகத்தையும் கருத்தில் கொண்டு அதற்கேற்ற வகையில் செயல்புரிகிறது.

தமிழர்களின் அரும்பெட்டகமாக விளங்கும் பாட்டும், தொகையும், பண்டைய தமிழர்களின் வாழ்வியலை விளக்குகின்றன. சங்க இலக்கியப் பாடல்களை இன்றைய கல்லூரி மாணவர்களுக்கு நவீன கற்பித்தல் துணைக்கருவிகளைக் கொண்டு கற்பித்தலை மேற்கொள்ளுதல் சிறப்பாகும். இவ்வாய்வு வருங்கால சந்ததியர்களுக்கு சங்கப்பாடலின் முக்கியத்துவத்தை உணர்த்த இயலும்.

## ஆய்வின் நோக்கங்கள்

- சங்க இலக்கியத்தின் முக்கியத்துவத்தினை உணர்த்த அறிவுறுத்தல்.
- சென்னைப் பல்கலைக்கழகத்தின் கீழ் இயங்கும் தன்னாட்சி கல்லூரிகளை விடுவித்து பிற கல்லூரிகளில் வினாநிரல் அடிப்படையில் சங்க இலக்கியம் கற்பித்தலை ஆராய்தல்.
- அரசு, அரசு உதவி பெறும் கல்லூரிகள், தனியார் கல்லூரிகளை வகைப்படுத்துதல்.
- கற்பித்தலின் போது மாணவர்களின் மனநிலையை ஆராய்தல்.
- கற்பித்தல் துணைக்கருவிகளின் முக்கியத்துவத்தினை விளக்குதல்.
- நூல்வழி கற்பித்தலோடு துணைக்கருவி மூலம் கற்பித்தலையும் எடுத்துக்காட்டுதல்.
- சங்கப்பாடலின் முக்கியத்துவத்தை மாணவர்களுக்கு உணர்த்துதல்.
- மூன்று வகையான கல்லூரிகளின் கற்பித்தல் வேறுபாடுகளை கண்டறிதல்.

- பழந்தமிழர்களின் பண்பாட்டை மாணவர்களுக்கு உணர்த்துதல்.
- உலக மொழிகளை வடதமிழ் மொழியின் சிறப்பினை விளக்குதல்.

## ஆய்வு எல்லை

சென்னைப் பல்கலைக்கழகக் கட்டுப்பாட்டில் இயங்கும் தன்னாட்சி கல்லூரிகளைத் தவிர்த்துப் பிற கல்லூரிகளில் சங்கப் பாடல்களைக் கற்பிக்கும் முறைகளை ஆய்வு செய்து அரசு கல்லூரிகள் (600 மாணவர்கள்), தனியார் கல்லூரிகள் (600 மாணவர்கள்), அரசு உதவி பெறும் கல்லூரிகள் (600 மாணவர்கள்) என வகைப்படுத்தி, சங்கப்பாடல்களைக் கற்பித்தல் முறைகள் வினா நிரல் மூலமாகக் கள ஆய்வினை மேற்கொண்டு புள்ளியியல் அடிப்படையில் ஆராய்ந்து கண்டறிதல். சங்கப்பாடல்களை மாணவர்களுக்கு எவ்வாறு கற்பிக்க வேண்டும் என்ற சாத்தியக் கூறுகளின் பரிந்துரைகளை அளித்தல்.

## ஆய்வு அணுகுமுறைகள்

பழந்தமிழர்களின் பண்பாட்டைக் கல்லூரி மாணவர்களுக்கு உணர்த்துதல். தமிழ்மொழி வளத்தை அதிகரித்தல். சங்க இலக்கியத்தின் முக்கியத்துவத்தை மாணவர்களுக்கு அறியச் செய்தல். உலக மொழிகளை விடத் தமிழ்மொழியின் தொன்மையை அறியச் செய்தல். பாட்டும், தொகையுமான செவ்வியல் இலக்கியத் தன்மைகளை மாணவர்களுக்கு உணர்த்துதல். இந்த ஆய்வு கல்வியல் நெறிமுறைப்படி நிகழ்த்தப்பட்டுள்ளன.

## கருதுகோள்கள் (HYPOTHESES)

- சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்மொழிப் பாடத்திட்டத்தில் கற்றலில் மாணவர்களுக்கும் மாணவியர்களுக்கும் இடையே வேறுபாடு நிலவுகின்றன.
- அரசு கல்லூரி, அரசு உதவி பெறும் கல்லூரி, சுயநிதிக் கல்லூரிகளில் கற்பித்தல் முறையில் வேறுபாடுகள் காணப்படுகின்றது.

- கல்லூரிகளில் ஆசிரியர், மாணவர்களிடையே கற்பித்தல் மற்றும் கற்றலில் வேறுபாடுகள் காணப்படுகின்றன.
- கல்லூரி மாணவர்களுக்குச் சங்க இலக்கிய செவ்வியல் தன்மைகளைப் பற்றி ஆசிரியர்கள் பெரும்பாலும் சொல்லுவதில்லை.
- சங்கப்பாடல்களில் உள்ள மூலப்பொருள்களைப் புரிந்துக் கொள்ள சங்க இலக்கிய அகராதி தேவைப்படுகின்றது.
- சங்கப்பாடலை ஆசிரியர்கள் முறையாக மாணவர்களுக்கு நடத்துவதில்லை.
- கல்லூரிகளில் கற்றல்–கற்பித்தல் துணைக்கருவிகளை ஆசிரியர்கள் பயன்படுத்துவதில்லை.
- ஆசிரியர்களுக்குக் கட்டாயம் கணினி அறிவு தேவைப்படுகிறது.
- கிராமப்புற, நகர்ப்புற மாணவர்களிடையே கற்றலில் வேறுபாடுகள் காணப்படுகின்றன.
- மூன்று வகையான கல்லூரிகளிடையே கற்பித்தல் முறைகளில் வேறுபாடு காணப்படுகிறது.

## ஆய்வுப் பகுப்பு

**"சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்மொழிப் பாடத்திட்டத்தில் சங்க இலக்கியம் கற்பித்தல் முறைகள் (2000 முதல் 2010 வரை)"** என்னும் இவ்வாய்வு ஐந்து இயல்களைக் கொண்டது. கற்பித்தல் கருப்பொருளாக அமைந்துள்ளதால் கல்வி ஆய்வு நெறிமுறைப்படி ஆய்வு செய்தால் செம்மையாக அமையும் என்பதனால் கல்வியியல் நெறிமுறைப்படி இவ்வாய்வு நிகழ்த்தப்பட்டுள்ளது.

**அறிமுகவியல்**

**இயல் 1 கற்பித்தல் கோட்பாடுகள்**

**இயல் 2 சார்பிலக்கியங்கள்**

## அறிமுகவியல்

சங்க காலம் முதல் இன்றுவரை கற்பித்தலில் பல மாற்றங்கள் நிகழ்ந்துக் கொண்டே வருகின்றன. உலக நாடுகள் கற்றல் – கற்பித்தலைச் செம்மைப்படுத்தி வருகின்றன. தமிழர்களின் அரும்பெட்டகமாகச் சங்கப்பாடல்கள் திகழ்கின்றன. பழந்தமிழர்களின் வாழ்வியல் கோட்பாடுகளை இன்றைய கல்லூரி மாணவர்களுக்கு விளக்குதல் மற்றும் வருங்கால சந்ததியர்களுக்குப் பயன்படும் வகையில் இவ்வாய்வு அமைந்துள்ளது. ஆய்வின் நோக்கங்கள், ஆய்வின் எல்லை, ஆய்வு அணுகுமுறைகள், கருதுகோள், ஆய்வுப் பகுப்புகள் போன்றவை விளக்கப்பட்டுள்ளன.

## இயல் ஒன்று : கற்பித்தல் கோட்பாடுகள்

முன்னுரை, கற்பித்தலின் விளக்கங்கள், அறிஞர்களின் கருத்துகள், கற்பித்தலின் உட்கூறுகள், கற்பித்தலின் செயல்முறைகள், இலக்குகள் மற்றும் நோக்கங்கள், ஆசிரியர்களின் செயல்பாடுகள், கற்பித்தலின் உளவியல் கோட்பாடுகள், ஐம்புலன் பயிற்சி மற்றும் உணர்தல் கோட்பாடுகள், சுயமாகக் கற்கும் பண்பை வளர்க்கும் கோட்பாடுகள், சிறப்பாகக் கற்பித்தலுக்கான அடையாளங்கள், ஆசிரியரின் உளவியல் பணிகள், நுண்ணிலைக் கற்பித்தல் முறைகள், கற்பித்தலின் அடிப்படைத்திறன்கள் முதலியவை விரிவாக விளக்கப்பட்டுள்ளன.

## இயல் இரண்டு : சார்பு இலக்கியங்கள்

முன்னுரை, தொடர் ஆய்வுக்கல்வி, மேலை நாட்டு அறிஞர்களின் கருத்துக்களும், இந்திய அறிஞர்களின் கருத்துக்களும், இவ்வியலில் விரிவாக விளக்கப்பட்டுள்ளன.

## இயல் மூன்று : ஆய்வு நெறிமுறைகள்

முன்னுரை, கல்லூரிகளின் அட்டவணை, ஆய்வுச்சிக்கல்கள், செயல்முறை விளக்கங்கள், நோக்கங்கள், கருதுகோள்கள், ஆய்வு வடிவமைப்பு, ஆய்வுமுறை, ஆய்வுப் பகுப்பாய்வு, நம்பகத்தன்மை, ஏற்புத்தன்மை, மாதிரிக் கூறுகள், கருவி பற்றிய விளக்கங்கள், கணிப்புக் குறிநேர்மைத்தகவு, புள்ளியியல் நுணுக்கங்கள், கல்லூரிகளிடையே உள்ள கற்பித்தல் வேறுபாடுகள், மாணவ, மாணவியர்களுக்கு உள்ள கற்றல் மனப்பான்மை வேறுபாடுகள் கணித வாய்ப்பாடுகள் விளக்கப்பட்டுள்ளன.

## இயல் நான்கு : புள்ளியியல் - பகுத்தாய்தலும் விளக்குதலும்

முன்னுரை, விரிவான பகுப்பாய்வு, கருதுகோள்கள், வினாநிரல், மாதிரிக்கூறுகள், அனுமானம், அனுமானப் பகுப்பாய்வுகள் மாணவர்களின் கருத்துகளும், ஆசிரியர்களிடம் நேர்காணலில் கேட்கப்பட்ட வினாநிரல்களும் ஆகியவை விரிவாக விளக்கப்பட்டுள்ளன.

## இயல் ஐந்து : தொகுப்பாய்வுகளின் முடிவுகள்

முன்னுரை, முதன்மைக் கண்டுபிடிப்புகள், பரிந்துரைகள், வருங்கால ஆய்விற்கான ஆலோசனைகள், முடிவுகள் இவ்வியலில் விரிவாக விளக்கப்பட்டுள்ளது.

**“சென்னைப் பல்கலைக்கழகத் மொழிப் பாடத்திட்டத்தில் சங்க இலக்கியம் கற்பித்தல் முறைகள்”** ஆராய்ச்சி செய்யப்பட்டுள்ளது. ஒவ்வொரு இயலிலும் ஆய்வின் தெளிந்துணர்ந்த முடிவுகளைத் தொகுத்து வழங்கிட இவ்வாய்வு முனைந்துள்ளது.

## *இயல் - 1*

# கற்பித்தல் கோட்பாடுகள்

### 1.1 முன்னுரை

சங்க காலம் முதல் இன்றைய நவீன காலம் வரை கல்விமுறையில் கற்பித்தல் பல பரிணாம வளர்ச்சியினைப் பெற்றுள்ளது. உலக நாடுகள் பல்வேறு வழிகளில் கற்பித்தல் உத்திகளையும், நவீன கற்பித்தல் துணைக் கருவிகளைக் கொண்டும் கல்லூரி வகுப்பறைகளைச் செம்மைப்படுத்தி வருகின்றன.

மொழி கற்பித்தல் என்னும் தொடர் மொழியைக் கற்பித்தல், மொழியில் கற்பித்தல், மொழியைப் பற்றிக் கற்பித்தல் என்னும் மூவகைப் பொருளை உணர்த்தவல்லது. கற்பித்தலில் ஒரு பாடமாகவும் ஓர் ஊடகமாகவும் இயங்கும் ஆற்றல், மொழிக்கு இருக்கிறது. மொழியைப் பற்றிக் கற்பித்தலை ஒரு பாடமாகவும் கருத வழி உண்டு. எனினும் மொழி கற்பித்தல் என்னும் தொடர், மொழியைக் கற்பித்தல் என்னும் பொருளையே முதன்மையாகக் கொண்டு இன்று விளங்குகிறது.

கற்பித்தல் என்பது பொது நிலை; மொழி கற்பித்தல் என்பது அதனுள் அடங்கும் ஒரு சிறப்பு நிலை; கற்பித்தல் என்பது கற்கும் பொருளுக்கேற்பப் பல திறப்படும். அந்நிலையில் மொழி கற்பித்தல் என்பது கற்பித்தலின் ஒரு கூறாகக் காட்சி அளிக்கும். பொதுநிலையில் நிற்கும் கற்பித்தல் கோட்பாடுகளை வகைப்படுத்திக் காட்டி அவ்வகைகளுடன் மொழி கற்பித்தல் நோக்கமாகும்.

கற்பித்தலை நோக்குவதைப் போலவே மொழி கற்பித்தலையும் பல வகைகளில் நோக்கலாம். மொழி கற்பித்தலை ஓர் அறிவியலாக நோக்குவது ஒரு வகை. ஒரு தொழில் நுட்பமாகத் திறனாகக் காண்பது இன்னொரு வகை; ஒரு தொழிலாகவோ ஒரு கைவினையாகவோ பார்ப்பது மற்றொரு வகை; கலையாக மதிப்பது பிறிதொரு வகை. இத்தகைய பலவகை நோக்குகளுக்கேற்பக் கற்பிக்கும்

அடிப்படைத் திறன்களும் ஆசிரியரைப் பயிற்றுவிக்க உதவும் பலவகை அணுகுமுறைகளும் வேறுபட வாய்ப்புண்டு.

கற்பித்தல் கோட்பாடுகளை இக்காலக் கல்வியியல் அறிஞர்கள் மூவகையாகப் பகுத்துக் காண்பர். அவை வருமாறு:

1. அறிவியல் – ஆய்வு அடிப்படையில் கருத்துருக் கொண்டவை. (Science - Research Conceptions)
2. கோட்பாடு – தத்துவம் அடிப்படையில் கருத்துருக்கொண்டவை. (Theory - Philosophy Conceptions)
3. கலை – கைவினை அடிப்படையில் கருத்துருக் கொண்டவை (Art-Craft Conceptions (Zahorik:1986)

## 1.2 கற்பித்தலின் விளக்கம்

கற்பித்தல் (Teaching), பயிற்றுவித்தல் (Education) கல்வி ஆகிய சொற்கள் கிட்டத்தட்ட ஒரே பொருளையே குறிக்கின்றன. கற்பித்தல் என்பது பிறருக்குக் கூறுதல், விளக்குதல் என்றும் பயிற்றுவித்தல் என்பது எடுத்துக்கூறி விளக்கிப் பயிற்சியும் அளித்தல் என்றும் மொழி அறிஞர்கள் குறிப்பிடுகிறார்கள். கற்பித்தல் என்பது ஒருவர், இன்னொருவர் கற்றுக் கொள்வதற்குத் துணை புரியும் கலை எனக் குறிப்பிடலாம்.

கற்பித்தல் பள்ளி, கல்லூரிகளில் முக்கியத்துவம் பெறுகின்றது. கற்பித்தல் மாணவர்களை மையமாகவே கொண்டு நிகழ்கின்றது. கற்பித்தல் நகமும், சதையும் போன்றது. உடலும், உயிரும் போன்றது. ஒரு விதை நன்றாக முளைக்க வேண்டுமென்றால் மண், ஒளி, ஈரம் இவை மூன்றும் அமைதல் வேண்டும். அதே போன்று ஆசிரியர், மாணவர்கள், பள்ளிச்சூழல், கல்லூரிச்சூழல் ஆகிய நான்கில் ஒன்று சரியில்லையென்றாலும் வகுப்பறையில் கற்பித்தல் வெற்றி பெறாது.

தமிழர்களின் அறிவுப் பெட்டகமாகத் திகழும் சங்க இலக்கியங்கள் தமிழ் இலக்கியங்களில் நிலைத்த புகழுக்குரியன; சங்க கலாச்சாரத்தை உலகிற்கு உணர்த்தும் சான்றாகச் சங்கப் பாடல்கள் அமைந்துள்ளன. சங்ககால மக்களின் வாழ்வியல், தமிழர்களுக்கு வாழ வழிகாட்டும் இலக்கிய ஆவணமாகச் சங்கப் பாடல்கள் அமைந்திருக்கின்றன.

கற்பித்தல் பற்றிய அறிஞர்கள் கருத்து பின்வருமாறு:

1. மோரிசன் (Morison)
2. ஸ்மித் (B.O.Smith)
3. அமிடன் (Amidom) மற்றும் ஹெண்டர் (Hnunter)

## 1.3 மோரிசன் (Morison)

“குறைந்த அளவே பண்பட்ட ஒருவரின் கல்வித் தரத்தை மேம்படுத்த அவருக்கும் நன்கு பண்பட்ட ஒருவருக்கும் இடையிலுள்ள நெருங்கிய தொடர்பே கற்பித்தல்” என மோரிசன் கூறுகின்றார்.

## 1.4 ஸ்மித் (B.O. Smith)

கற்பித்தலைப் பல அறிஞர் பெருமக்கள் பல கண்ணோட்டத்தில் குறிப்பிடுகின்றனர், ஆனால் பி. ஒ. ஸ்மித் அவர்கள், “கற்பித்தல் என்பது பல செயல்களின் ஒழுங்கு முறையையே குறிக்கும். இது காரியகர்த்தா (ஆசிரியர்) சூழல் ஆகிய இருவகைக் காரணிகளை உள்ளடக்கியது”.[1] முடிவில் பார்க்கும் போது இருவகைக் காரணங்களுள் ஒன்றான காரியகர்த்தா மற்றொரு காரணியான சூழ்நிலை மீது ஆதிக்கம் செலுத்துவதில்லை எனக் குறிப்பிடுகின்றார்.

## 1.5 அமிடன் (Amidom) மற்றும் ஹெண்டர் (Hunter)

அமிடன் மற்றும் ஹெண்டர் இருவரும் ஒரே கற்பித்தல் முறையைக் கூறுகின்றார்கள். "கற்பித்தல் என்பது ஆசிரியர்களுக்கும் மாணவர்களுக்கும் இடையில் நடக்கும் ஒருங்கிணைந்த செயல்முறையைக் குறிக்கும்".[2] ஆசிரியர் மாணவர்களுக்குப் பாடப்பகுதிகளை எளிமையான முறையிலும், தெளிவாகவும் கற்பித்தல் வேண்டும்.

## 1.6 கற்பித்தல் - ஒரு செயல் முறை

ஆசிரியர்கள் மாணவர்களுக்கு எளிமையாகப் புரியும் வகையில் கற்பித்தலை மேற்கொள்ள வேண்டும் "தகவல்களை வழங்குதலும், அறிவுத்திறனைக் கொடுத்தலும் கற்பித்தலாகக் கருதப்படுகிறது. கற்பித்தல் பணி, கல்விக் கொள்கைக்குப் பொருந்தாது".[3] மாணவனும், ஆசிரியரும், பாடப்பொருளும் முக்கியமானவை, கற்பித்தல் என்பது இரு துருவச் செயல்முறை என மதிக்கப்படுகின்றது. இதில் மாணவரும், ஆசிரியரும் இரு துருவங்கள். ஆசிரியர் மாணவர்கள் உறவு என்பது உன்னதப் பண்பினைக் கொண்டதாகும்.

மாணவர்களை மையமாகக் கொண்டுதான் கற்பித்தல் நிகழ்கின்றது. ஆனால் மாணவர்கள் மீது அதிகக் கவனம் செலுத்துதல் வேண்டும். மாணவர்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதே ஆசிரியர் தன் கடமையாகக் கருத வேண்டும். வகுப்பறையில் கற்பித்தல் செம்மையாக அமைய நவீனத் துணைக்கருவிகளைக் கொண்டு ஆசிரியர் கற்பித்தலை மேற்கொள்ள வேண்டும்.

கற்பித்தலில் ஆசிரியர், மாணவர் முக்கியத்துவம் பெறுகின்றனர். பாடப்பொருள்கள் முக்கியத்துவம் பெறுகின்றன. கற்பித்தலின் மூலமாக ஆசிரியர், மாணவர்களையும், பாடப் பொருளையும் ஒருங்கிணைக்க முடிகின்றது.

## 1.7 கற்பித்தலின் கோட்பாடுகள்

கற்பித்தல் முறை சில அடிப்படைக் கோட்பாடுகளைக் கொண்டுள்ளது. அக்கொள்கைகளின் பயன்பாடு கற்பித்தலின் வெற்றிக்கு உறுதுணையாக அமைகின்றது. கற்பித்தலுக்கான இரண்டு கோட்பாடுகளை ஆசிரியர்கள் பெற்றிருக்க வேண்டும். அவை.

i) பொதுவானக் கோட்பாடு, ii) உளவியல் கோட்பாடு".[4]

மேற்கண்ட இரண்டு கோட்பாடுகளை ஆசிரியர் பெற்றிருந்தால் நல்லாசிரியர் ஆவார் என அமிடன் (Amodon) மற்றும் ஹெண்டர் (Hunter) கூறுகின்றார்கள்.

## 1.8 கற்பித்தலின் பொதுவான கோட்பாடுகள்

* "திட்ட வட்டமான இலக்கு மற்றும் நோக்கங்கள்
* திட்ட மிடல் கோட்பாடு
* நெகிழ்வுடைமைக் கோட்பாடு
* செயல் கோட்பாடு (அ) செயல் வழக்காற்றல் கோட்பாடு
* தனிநபர் வேறுபாட்டுக் கோட்பாடு
* தேர்ந்தெடுத்தல் கோட்பாடு
* பிரித்தல் கோட்பாடு
* வாழ்க்கையோடு தொடர்பையும், இணைப்பையும் ஏற்படுத்தும் கோட்பாடு,
* வகைக் கோட்பாடு
* ஜனநாயகக் கோ..ட்பாடு
* திருப்புதல் கோட்பாடு"[5]

மேற்கண்ட பன்னிரண்டும் கற்பித்தலின் பொதுவான கோட்பாடுகளாகும்.

### 1.8.1 திட்டவட்டமான இலக்கு மற்றும் நோக்கங்கள்

ஒவ்வொரு பாடமும் சில திட்டவட்டமான இலக்குகளையும், நோக்கங்களையும் பெற்றிருக்க வேண்டும். இலக்கு, நோக்கங்கள் ஆசிரியரையும், மாணவரையும், ஒரே பாதையில் அழைத்துச் செல்லுதல் வேண்டும்.

தமிழ் மொழிப்பாடத்தில் வல்லவராகத் திகழ்வதற்கு மாணவர்களின் நோக்கங்களைத் திட்டமிடுவதற்கும், நிறைவேற்றுவதற்கும் மதிப்பிடுவதற்கும், சிறந்த கற்பித்தலில் ஆசிரியர் ஆற்றல் பெற்றவராகத் திகழ வேண்டும்.

தாய்மொழியை மாணவர்கள் கற்கும் பொழுது தன்னை முழுமையாக ஈடுபடுத்திக் கொள்ள வேண்டும். தாய்மொழியில் உள்ள நுணுக்கங்களைக் கற்றுத் தெளிவு பெற வேண்டும். குறிக்கோள் என்பது நெடுந்தூரக் கற்றல் இலக்கைக் குறிக்கும் தொடர்ச்சியான சங்கிலி போன்று, கற்பித்தல் இலக்கை அடைய முடியும்.

### 1.8.2 திட்டமிடல் கோட்பாடு

எந்தச் செயலை மேற்கொண்டாலும் திட்டமிடலுக்கு முக்கியத்துவம் வழங்கல் வேண்டும். திட்டமிடல் கோட்பாட்டின் வாயிலாக ஆசிரியர் வகுப்பறைக் கற்பித்தலில் சிறந்து விளங்க முடியும். எளிமையாகவும், செம்மையாகவும் மாணவர்களுக்குப் புரியும் வகையில் திட்டமிட்டு அதன்படியே கற்பித்தலை மேற்கொள்ள வேண்டும். திட்டமிட்டுக் கற்பித்தலின் வாயிலாகப் பல சிக்கல்களைத் தீர்க்க முடியும்.

ஆசிரியர் பாடத்தைக் கற்பிக்கும் பொருட்டுப் பாடத்திற்கான நோக்கங்களை அமைத்தல், பாடப்பொருளின் தன்மையைத் தேர்ந்தெடுத்தல் வேண்டும். ஆசிரியர் வகுப்பறைக் கற்பித்தலை மேற்கொள்ளும் பொருட்டு அனுபவங்களையும், பொருத்தமான கற்பித்தல் துணைக் கருவிகளையும் பயன்படுத்த வேண்டும்.

### 1.8.3 செயல்கோட்பாடு (அ) செயல் வழிக் கற்றல் கோட்பாடு

ஆசிரியர் வகுப்பறைக் கற்பித்தலின் வாயிலாக மாணவர்களிடம் பொதிந்துக் கிடக்கும் படைப்பாற்றலை வெளிக்கொணரச் செய்தல் வேண்டும். மாணவர்களின் கற்பனையாற்றலை வளர்த்துக் கொள்ளும் வகையில் ஆசிரியர் வாய்ப்பினை ஏற்படுத்தித் தருதல் வேண்டும். இதனால் மாணவர்களின் படைப்பாற்றலை ஊக்கப்படுத்தும் பொருட்டு கவிதை, கட்டுரை, சிறுகதை, பயண இலக்கியங்கள் போன்றவற்றில் திறமைகளை வெளிக்கொணர ஆசிரியர் வாய்ப்பினை ஏற்படுத்தித் தருதல் வேண்டும்.

### 1.8.4 ஆற்றலுடையவரே ஆசிரியர்

அறுவகைச் சமய நூல்கள் பலவற்றையும் உணர்ந்து தவறு நீக்கியொழுகும் ஒழுக்கமுடையனாய், பிறர் கூறும் மறுப்புரைகளை மாற்றி நிலை நிறுத்தவல்ல ஆற்றல் உடையவனே ஆசிரியனாவான் என்பதனை,

***“ஆறு வர்தந்த நூலு மறிந்துணர்வு பற்றி***
***மறுவரவு மாறான நீக்கி - மறுவரவின்***
***மாசாரியனா மறுதலைச் சொல் மாற்றுதலே***
***ஆசாரியன தமைவு”*** [6]

எனக் கணிமேதாவியார் ஆசிரியருக்குரிய திறன்களையும், தனித் தன்மைகளையும் குறிப்பிடுகின்றார்.

### 1.8.5 தனிநபர் வேறுபாட்டுக் கோட்பாடு

பள்ளி, கல்லூரி வகுப்புகளில் மீள்திறன் மிகு மாணவர்கள் இருப்பார்கள் என்று ஆசிரியர் எதிர்பார்த்தல் கூடாது. கல்வி நிலையங்களுக்கு வரும் மாணவர்கள் பல்வேறு பிரச்சனைகளில் இருந்து வருகின்றார்கள். பொருளாதாரப் பிரச்சனை, குடும்பத்தில் வறுமை, தன் பிள்ளைகளின் உணர்வுகளை மதிக்காத பெற்றோர்கள்,

சரியான வழி காட்டுதல் இன்மை, ஆலோசனை இன்மை, நல்ல நண்பர்கள் இல்லாமை மேற்கண்ட காரணங்களால் மன உளைச்சலுக்கு ஆட்பட்டுப் பாதிக்கப் படுகின்றார்கள். "நுண்ணறிவுத்திறன், மனப்பான்மை, ஆர்வம், மறைதிறன் மற்றும் தேவைகள் போன்றவற்றில் வேறுபடுகின்றார்கள்"[7] கலைத்திட்டத்தைத் திட்டமிடும் போதும் மற்றும் வகுப்பறை செயல்பாடுகளை அமைக்கும் போதும் மாணவர்களின் மனநிலைகளைக் கருத்தில் கொள்ள வேண்டும்.

### 1.8.6 தேர்ந்தெடுத்தல் கோட்பாடு

அறிவு என்பது அனைவருக்கும் ஒரே மாதிரியாக அமைந்து விடுவதில்லை. மனிதனுக்கு மனிதன் மாறுபடும். அறிவு கடலைப் போன்று பரந்து இருக்கும் அறிவு மாற்றத்தால் அபாரமான மாற்றம் ஏற்படும். குவிச்சிந்தனையும், விரிசிந்தனையும் ஏற்படுத்தும். "அறிவு என்பது மிகவும் பரந்த சிக்கலான ஒன்றாகும். நம்மால் எல்லாவற்றையும் மாணவர்களுக்குக் கற்றுத் தர முடியாது. ஆகையால் பல்வேறு நிலையான பல்வேறு வகைப்பட்ட தகவல்களும், அறிவுக் களஞ்சியத்தினுள்ளும், மிகச்சிறந்தவற்றைத் தேர்ந்தெடுத்துக் கலைத்திட்டத்தையும், பாடப் பொருளையும் அமைத்தல் வேண்டும்".[8]

### 1.8.7 பிரித்தல் கோட்பாடு

ஆசிரியர் ஒரு பாடத்தைச் செம்மையான முறையில் சிறு சிறு அலகுகளாகப் பிரித்துக் கொள்ள வேண்டும். மாணவர்களுக்குத் தெளிவாகப் புரியும் வகையில் பாடப் பொருள் அமைய வேண்டும். ஓர் அலகு முடிந்தவுடன் அடுத்து என்ன வரும் என்று எதிர்பார்க்குமாறு ஆசிரியர் ஆர்வமூட்ட வேண்டும். அடுத்த பாடத்தைப் படிக்கும் வகையில் தூண்டுதல் வேண்டும்.

### 1.8.8 வாழ்க்கையோடு தொடர்பையும், இணைப்பையும் ஏற்படுத்தும் கோட்பாடு

மாணவர்களுக்கு வெறும் ஏட்டுக் கல்வியினை மட்டும் வழங்காமல், வாழ்க்கையோடு தொடர்புடைய கல்வியினை அமைத்துத் தருதல் வேண்டும். மாணவர்கள் நல்ல அறிவினைப் பெறும் பொருட்டுக் கற்றல் கற்பித்தலில் மாற்றம் ஏற்படுத்த வேண்டும்.

### 1.8.9 வகைக் கோட்பாடு

ஆசிரியர் கற்பித்தலை வகைப்படுத்திக் கொள்ள வேண்டும். வகுப்பறைக் கற்பித்தலைச் சிறப்பாக நிகழ்த்தினால் மாணவர்களுக்குப் பயன் ஏற்படும் என்பதனை ஆசிரியர் கருத்தில் கொள்ள வேண்டும்.

கற்பித்தலைச் சிறப்புறச் செய்வதற்கு நவீன துணைக் கருவிகளைப் பயன்படுத்த வேண்டும். இதனால் கற்பவரின் கவனம் ஈர்க்கப்படும். நீண்ட நேரம் கற்றலைச் சலிப்படையச் செய்யாமல் தொடர்ந்து ஆர்வமுடன் கற்றல் நிகழும்.

### 1.8.10 ஜனநாயகக் கோட்பாடு

பெற்றோர்களுக்கு அடுத்த படியாக இருப்பவர் ஆசிரியர் ஆவார். ஆசிரியர் மாணவர்களைத் தன் பிள்ளை போன்று நல்வழிப்படுத்துதல் வேண்டும். ஆசிரியர் தன் கருத்துக்களை மாணவர்கள் மீது திணித்தல் கூடாது. மாணவர்களுக்கு ஒரு முன் மாதிரியாகத் திகழ வேண்டும். நல் வழிகாட்டுபவராகவும், அறிவுரை வழங்குபவராகவும் இருத்தலே நல்லாசிரியரின் தன்மையாகும்.

பேராசிரியர் ஹூமாயூன் கபீர் (Humayun Kabir) என்பவரின் கருத்துப்படி "ஆசிரியர்கள் என்பவர்கள் ஒரு நாட்டின் தலையெழுத்தை நிர்ணயிக்கக் கூடியவர்கள்"[9] என்று குறிப்பிட்டுள்ளார்.

ஆசிரியர்கள் மாணவர்களின் மனத்தில் புதைந்து இருக்கின்ற படைப்பாற்றலை வெளிக் கொண்டு வருதல் வேண்டும். சுயசிந்தனையும் முற்போக்குச் சிந்தனையும், சுயமரியாதையோடு சமுதாயத்தில் வாழ்வதற்குரிய வழி முறைகளையும் ஆசிரியர்கள் ஏற்படுத்தித் தருதல் வேண்டும். "ஆசிரியப் பணியே அறப்பணி, அதிலும் அற்புதப் பணி"[10] என்பது பொதுக் கருத்தாகும்.

## 1.8.11 திருப்புதல் கோட்பாடு

ஆசிரியர் வகுப்பறைக் கற்பித்தலை நிகழ்த்தும் போது மாணவர்கள் பாடக்கருத்தினை எப்படிப் புரிந்து கொள்கின்றார்கள்; கற்பித்தலை எந்த வகையில் உள்வாங்கிக் கொள்கின்றார்கள் என்பதை ஆசிரியர் நெறிப்படுத்தல் வேண்டும்.

ஒரு முறை படித்துவிட்டால் அறிவில் சிறந்து விளங்கமுடியாது; திரும்பத் திரும்பச் சொல்லுதலை ஆசிரியர் மேற்கொள்ள வேண்டும். பாடத்தில் வேறு ஐயங்கள் உள்ளனவா என்பதை ஆசிரியர் கேட்டறிதல் வேண்டும். ஆசிரியர் நடத்திய பாடத்தினைச் சுயமதிப்பீடு செய்ய வேண்டும். கற்பித்தப் பாடத்தை மறுமுறையும் பார்க்கச் செய்தல் வேண்டும்.

## 1.9 தொடர்ச்சியான அன்றாடக் கோட்பாடு

ஆசிரியர் பாடத்தினைக் கற்பிக்கும் போது வெளியிடும் தகவல்கள் நிகழ்காலத்தோடு தொடர்புடையதாக இருத்தல் வேண்டும். வெறும் ஏட்டுக்கல்வியினை மட்டும் ஆசிரியர் அளித்தால் எந்தப் பயனும் இல்லை.

வெளிநாட்டுச் செய்திகள், உள்நாட்டுச் செய்திகள், பொருளாதார நிலைகள் ஆகிடவற்றைப் பற்றி அன்றாட நிகழ்வோடு தொடர்புபடுத்திச் சொல்லுதல் வேண்டும்.

## 1.10 கற்பித்தலின் உளவியல் கோட்பாடுகள்

- உளவியலின் விளக்கம்
- கற்பித்தல் உளவியல்
- சில முக்கிய உளவியல் கோட்பாடுகள்
- ஆர்வம் மற்றும் ஊக்கப்படுத்துதல் கோட்பாடு
- பயிற்சி மற்றும் மீண்டும் செய்தல் கோட்பாடு
- ஓய்வு மற்றும் கேளிக்கை கோட்பாடு
- கருத்துகள் அறிதல் மற்றும் வலுப்படுத்துதல் கோட்பாடு
- கருணை மற்றும் ஒத்துழைப்புக் கோட்பாடு
- ஐம்புலன் பயிற்சி மற்றும் உணர்தல் கோட்பாடு
- குழுக் கற்பித்தலின் நோக்கம்
- சுயமாகக் கற்கும் பண்பை வளர்க்கும் கோட்பாடு
- குழு இயக்கத்தைப் பயன்படுத்தும் கோட்பாடு
- சுயமாக கற்றும் பண்பை வளர்க்கும் கோட்பாடு
- சுய வெளிப்பாடு மற்றும் படைப்பாற்றலை வளர்க்கும் கோட்பாடு
- குறைதவிர் கற்பித்தல் கோட்பாடு

### 1.10.1 உளவியலின் விளக்கம்

மனிதனின் 'ஆன்மா', 'மனம்' ஆகியவற்றைப் பற்றி ஆராய்வதே உளவியல் ஆகும். "மனிதச் செயல்களை உற்று நோக்கி முறையாக ஆராய்ந்து அதன் மூலம் அவை எங்ஙனம் அகத்தே நிகழும் சிந்தனை ஓட்டங்களுடன் தொடர்பு

கொண்டுள்ளன என்றும், சுற்றுச் சூழலில் ஏற்படும் நிகழ்வுகளால் எவ்வாறு பாதிக்கப்படுகின்றன என்றும் விளக்குவதே உளவியலாகும்''.[11] ஒரு தனிமனிதனின் ஒட்டுமொத்த அக, புறச் செயல்பாடுகளைப் பற்றி ஆராய்வதே உளவியல் ஆகும்.

மனிதனின் மனநிலை மூன்று நிலைகளில் இயங்குகின்றது. அவை சிந்தித்தல், உணர்தல், புறச் செயல்களைத் தூண்டுதல். ஒரு மாணவன், தான் சிந்தித்தல் மூலமாக எப்படிச் செயலாற்ற வேண்டுமென உணருகின்றான். இதன் அடிப்படையில் அவனுடைய புறச் செயல்கள் வெளிப்படுகின்றன.

### 1.10.2 கற்பித்தல் உளவியல்

வகுப்பறை கற்பித்தலின் போது மாணவர்களின் உளவியலை ஆசிரியர் தெரிந்து வைத்திருத்தல் என்பது இன்றியமையாத செயலாகும். கற்றல் செம்மைப் பெறச் செய்வதில் உளவியல் பெரும் அங்கமாகத் திகழ்கின்றது. ''பாடப்பொருள் கொள்கையிலிருந்தும் கற்றல் மற்றும் கற்பித்தலுடன் தொடர்புடைய நீண்ட அனுபவத்தை அடிப்படையாகக் கொண்டே சோதனை முடிவுகளிலிருந்தும் உளவியல் கோட்பாடுகள் உருவாக்கப்படுகின்றன''[12] எனக் கூறுகின்றார்கள்.

### 1.10.3 சில முக்கிய உளவியல் கோட்பாடுகள்

* ''ஆர்வம் மற்றும் ஊக்கப்படுத்துதல் கோட்பாடு
* பயிற்சி மற்றும் மீண்டும் செய்தல் கோட்பாடு
* ஓய்வு மற்றும் கேளிக்கைக் கோட்பாடு
* கருத்துகள் அறிதல் மற்றும் வலுப்படுத்துதல் கோட்பாடு
* கருணை மற்றும் ஒத்துழைப்புக் கோட்பாடு
* ஐம்புலன் பயிற்சி மற்றும் உணர்தல் கோட்பாடு
* குழு இயக்கத்தைப் பயன்படுத்தும் கோட்பாடு
* சுயமாகக் கற்கும் பண்பை வளர்க்கும் கோட்பாடு

* சுயவெளிப்பாடு மற்றும் படைப்பாற்றலை வளர்க்கும் கோட்பாடு

* குறைதவிர் கற்பித்தல் கோட்பாடு[13]

## 1.10.4 ஆர்வம் மற்றும் ஊக்கப்படுத்துதல் கோட்பாடு

கற்றல், கற்பித்தலில் ஆர்வம், ஊக்கப்படுத்துதலும் என்பது உந்துதல் சக்தியாகும். ஊக்கப்படுத்துதல் என்பது தனி மனிதனுடைய ஆளுமையை வெளிக் கொணரும் சக்தியாகும். ஒருவர் தன்னுடைய நடத்தையில் மாற்றங்களை ஏற்கும் போதுதான் அவருடைய நடத்தையில் விரும்பத்தக்க புதுமைகளை அடைய முடியும்.

*“பெரும ! விருந்தொடு கைதூவா எம்மையும் உள்ளாய்*
*பெருந் தெருவில் கொண்டாடி ஞாயர் பயிற்ற,*
*திருந்துபு நீ கற்ற சொற்கள் யாம் கேட்ப,*
*மருந்து ஓவா நெஞ்சிற்கு அமிழ்தம் அயின்றற்றா,*
*பெருந்தகாய் கூறு, சில”*[14]

(கலித்தொகை, 81)

மனித வாழ்க்கையிலும், நடத்தையிலும் பல மாற்றங்கள் நிகழ்ந்து கொண்டே இருக்கின்றன. இதனால் எண்ணற்ற தேவைகளை நிறைவேற்றிக் கொள்ள வேண்டியிருக்கின்றன. ‘‘இத்தகைய ஒழுங்கு செய்யப்பட்ட மாற்றமே வாழ்க்கையின் உயர்நிலைக்கு உன்னதப் படி’’.[15]

## 1.10.5 பயிற்சி மற்றும் மீண்டும் செய்தல் கோட்பாடு

*“சித்திரமும் கைப்பழக்கம்*
*செந்தமிழும் நாப்பழக்கம்”*

(பழமொழி)

ஒரு செயலைத் திரும்பத்திரும்பச் செய்தால் செம்மையாக அமையும் என்பது நம் முன்னோர் கூற்றாகும். அறிவு, திறன், மனப்பான்மை போன்றவற்றைப் பெறுவதற்கு பல தரப்பட்ட பயிற்சிகள் தேவைப்படுகின்றன. ஆசிரியர்கள்

கற்பித்தலை மேற்கொள்ளும் போது ஒரு பாடத்தைத் திரும்பத் திரும்ப வாசித்தலை மேற்கொள்ள வேண்டும். மாணவர்களையும் வகுப்பறையில் வாய்விட்டுப் படிக்கச் செய்தலும், எழுதச் செய்தலும் வேண்டும். வாய்விட்டுப் படித்தல் மூலமாக மன அழுத்தம் இல்லாமல் இருப்பார்கள். இதனால் கற்றல் திறன் அதிகரிக்கும் வகுப்பறை கற்பித்தலும் சிறப்படையும்.

மாணவர்களுக்குப் படைப்பாற்றலைத் தூண்டும் வகையில் ஆசிரியர் நல்ல பயிற்சிகளை மேற்கொள்ள வேண்டும். அதன் பயனாக மாணவர்களுக்குக் கற்பனை ஆற்றலும், படைப்பாற்றலும் வளரும்.

### 1.10.6 ஓய்வு மற்றும் கேளிக்கை கோட்பாடு

மாணவர்கள் கற்றலின் போது பல விதமான கவனக் குறைபாடுகள் ஏற்படுகின்றன. இக்குறைபாட்டினை உளவியல் அறிஞர்கள் கவனச் சிதைவு எனக் குறிப்பிடுகின்றனர். இதன் விளைவாக 'ஆளுமை' வளர்ச்சி அடையாமை, மன அழுத்தம் போன்ற சிக்கலான நிலைகள் ஏற்படுகின்றன என்பது பல உளவியல் அறிஞர்களின் கருத்தாகும். உளவியல் அடிப்படையிலும், பல பயிற்சிகள் மூலமாகவும், சோதனை மூலபாகவும், மேற்கண்ட சிக்கல்கள் இல்லாமல் செய்யலாம் என உளவியல் அறிஞர்கள் கூறியுள்ளனர். "தவறான கற்றல் குறைகளை மாற்றியமைத்தல், வலுவூட்டிகளைப் பயன்படுத்துதல், எதார்த்தமான இலக்குகளை நிர்ணயித்தல், தன்னம்பிக்கையை வளர்த்தல் போன்ற உத்திகளைப் பயன்படுத்தி, மாணவர்கள் தேக்க நிலையைக் கடந்து முன்னேற்றத்தைப் பெற்றிட ஆசிரியர்கள் உதவ முடியும் என உளவியல் அறிஞர் தார்ண்டைக்கின்"[16] குறிப்பிடுகிறார்.

### 1.10.7 கருத்துகள் அறிதல் மற்றும் வலுப்படுத்துதல் கோட்பாடு

மாணவர்கள் வகுப்பறைக் கற்றலை எவ்வகையில் புரிந்துள்ளார்கள் என்று ஆசிரியர்கள் அறிய வேண்டும். கற்பித்தலைப் பற்றி ஆசிரியர்கள் மாணவர்களின்

கருத்துக்களைக் கேட்டல் வேண்டும். இதன் பயனாக வகுப்பறைக் கற்பித்தல் மேன்மைப்படும். வகுப்பறைக் கற்பித்தல் சிறப்படைய ஆசிரியர்கள் கற்பித்தலைத் தக்க முறையில் கையாள வேண்டும்.

ஆசிரியர்கள் கற்பித்தல் வலுப்பெறும் வகையில் மாணவர்களைப் பாராட்டுதல், பரிசு வழங்குதல், தரம் பிரித்தல், சான்றளித்தல் போன்றவற்றின் வாயிலாக மாணவர்களை ஆர்வமூட்டச் செய்தலின் பயனாக வகுப்பறை கற்பித்தல் சிறப்பாக அமையும். மாணவர்களுக்கு நீண்ட நாளாக நினைவில் இருக்கக் கூடிய அனுபவமாகக் கற்றல், மாற்றம் அடைகின்றது. சிறந்த கற்றல் மூலமாக மாணவர்களிடையே நடத்தை மாற்றத்தைக் காண முடியும்.

## 1.10.8 கருணை மற்றும் ஒத்துழைப்புக் கோட்பாடு

மாணவர்களை நல்ல நெறிப்படுத்தியும், வாழ்க்கையில் வரும் பிரச்சனைகளை எப்படி எதிர்கொள்வது என்பது பற்றி நல்வழிகாட்டியாகவும் அறிவுரை பகர்பவராகவும் ஆசிரியர் விளங்க வேண்டும். மாணவர்களின் வாழ்வில் ஒரு ஏணிப்படியாகவும் முன் மாதிரியாகவும் திகழ வேண்டும்.

பெற்றோருக்கு அடுத்தபடியாக முக்கியத்துவம் பெறுபவர் ஆசிரியர். இதனை 'மாதா, பிதா, குரு, தெய்வம்' என்று வழங்கும் மரபுத்தொடர் விளக்கும். தெய்வத்திற்கு முன்னே ஆசிரியர் முக்கியத்துவம் பெறுகின்றார். ஒவ்வொரு மாணவர்களுக்கும் தெய்வத்தைக் காட்டிலும் ஆசிரியர்தான் முதலிடம் பெறுகின்றார். ஆசிரியர் செம்மையாகக் கற்பித்தலின் வாயிலாகத் திறன்மிக்க மாணவர்களாக ஆக்கச் செய்வதே தன் நோக்கமாகக் கருத வேண்டும்.

மாணவர்களுக்கு எளிமையாகப் புரியும் வகையிலும் மாணவர்களின் மனநிலைக்கு ஏற்றவாறும் கற்பித்தலை ஆசிரியர் மேற்கொள்ள வேண்டும். "கல்வி நிலையங்களில் கற்பிக்கும் குழுவினரும், தனியாகக் கற்பிப்போரும் தாங்கள்

தேர்ந்தெடுத்து உண்டாக்கும் மாதிரிகள் வழியாகப் பள்ளி, கல்லூரிகளில் வகுப்பறை உயிரோட்டமுள்ள நிலையை ஏற்படுத்துகின்றனர் எனக் கல்வியியல் நிபுணர் ப்ரூஸ்.ஆர். ஜாய்ஸ் கூறியுள்ளார்''.[17]

## 1.10.9 ஐம்புலன் பயிற்சி மற்றும் உணர்தல் கோட்பாடு

புலன்களே அறிவுக் களஞ்சியத்தின் நுழைவு வாயிலாகும். மனிதன் இவ்வெளி உலகத்தின் செய்திகளைத் தனது புலன் உறுப்புகள் மூலம் தான் பெறுகின்றான். நாம் பார்ப்பதன் மூலம், கேட்பதன் மூலம், நுகர்தல் மூலம், சுவைத்தல் மூலம், வெளி உலகச் செய்திகளை அறிந்து கொள்கின்றோம். இந்த நிலையில் உலகில் உள்ள செய்திகளைப் பற்றித் தெரிந்து கொள்ள உதவுவது புலன் உறுப்புகளே ஆகும்.

''சில ஆசிரியர்கள் ஒன்று சேர்ந்து முறையாக நோக்கத்தைப் பகிர்ந்து திட்டமிட்டுப் பல வகுப்பு மாணவர்களுக்குக் கற்பிக்கின்ற எந்த ஒரு கற்பித்தல் முறையும் குழுக் கற்பித்தல் எனப்படும்'' என்று ஹரல்டு எஸ். டேவிட் (Harold S. David)''[18] கூறுகின்றார்.

## 1.10.10 குழு கற்பித்தலின் நோக்கம்

அதிக அளவில் உள்ள மாணவர்களுக்கு ஒரு சிறந்த கல்வியை அளிக்க குழு கற்பித்தல் துணை செய்கின்றது.

* ஓர் ஆசிரியர் குழுவைப் பயன்படுத்திக் கற்பித்தலில் வளர்ச்சியைக் காண வேண்டும் என்பதே இதன் நோக்கமாகும்.
* இது ஆசிரியர்களின் தனிப்பட்ட திறன்களையும், ஆர்வத்தையும், கற்பித்தல் திறனையும், நேரத்தையும் சக்தியையும் சிறப்பாகப் பயன்படுத்திக் கொள்கின்றது.

* இது சிறப்பான திட்டமிடலையும் சிறந்த கற்பித்தலையும் நிச்சயப்படுத்துகின்றது.
* பாடத்திட்டம், கருவிகள், துணைக் கருவிகள் போன்றவற்றைப் பயன்படுத்தி ஊக்குவித்தலையும் சிறந்த கற்பித்தல் சூழ்நிலைகளையும் நிச்சயமாக உருவாக்குகின்றது.
* ஆசிரியர்களின் திறமைகளுக்கேற்பக் கற்பித்தலில் பல விதங்கள் பயன்படுத்தப் படுவதை இம்முறை அதிகரிக்கின்றது.

### 1.10.11 சுயமாகக் கற்கும் பண்பை வளர்க்கும் கோட்பாடு

மாணவர்கள் சுயமாகச் சிந்தித்தல், சுயமாகக் கற்றல் என்பது தலைசிறந்த ஆசிரியரின் வகுப்பறைக் கற்பித்தலின் வெளிப்பாடாகும். "பார்வைப்புலன் – கண்கள் – பார்வைத் தூண்டல்கள் – பார்வை உணர்வு கேட்டல் புலன் – காதுகள் – கேட்டல் தூண்டல்கள் – கேட்டல் உணர்வு நுகர்வுப்புலன் – மூக்கு – வாசனைத் தூண்டல்கள் – வாசனை உணர்வு சுவைப்புலன் – நாக்கு – சுவைத் தூண்டல்கள் – சுவை உணர்வு தொடு உணர்வுப் புலன் – தோல் – தொடுதல் தூண்டல்கள் – தொடு உணர்வு"[19] ஆகும்.

புலன்களின் செயல்பாடு பொருத்தமானதாகவும், சிறப்பானதாகவும், இருந்தால் உற்று நோக்குதல், வேறுபடுத்துதல், கண்டறிதல், பொதுமைப் படுத்துதல் மற்றும் பயன்படுத்துதல் ஆகிய முறைகள் எழுச்சியூட்டும் வகையில் அமையும். நம் புலன் உறுப்புகளின் வாயிலாக நாம் அறியும் தனிப்பட்ட பண்புகள் புலன் உணர்வுகள் எனப்படும்.

### 1.10.12 குழு இயக்கத்தைப் பயன்படுத்தும் கோட்பாடு

ஆசிரியரின் குழு இயக்கத்தின் பயனாகக் கற்றல் முறை சிறப்படையும் என்பது பலரின் கருத்தாகும். குழு உணர்வின் காரணமாக ஒரு தனி நபர் தன் குழு சிந்திப்பதைப் போல் சிந்திக்கிறார். தன் குழு உணர்வதையே தானும் உணர்கிறார்.

தன் குழு செய்வதையே தானும் செய்கிறார். குழு வழிக் கற்றல் என்பது கற்பித்தலை எளிமையாக்கும்.

குழு கற்றல் மூலமாகக் குழுவில் தலைவருக்கும், உறுப்பினருக்கும் இடையில் நல்ல பண்பு நிலை உருவாகின்றது. குழு கற்றல் மூலமாக நல்ல கற்பித்தல் முறை நிகழ்ந்து கொண்டே இருக்கும். குழு கற்றல் மூலமாக மாணவர்களுக்கு நல்ல சிந்தித்தல், பொதுப் பிரச்சினைகளை ஆராய்தல், கற்பனைத் திறனை வளர்த்தல், படைப்பாற்றலை வளர்த்துக் கொள்ளுதல் சமுதாயத்தைப் பற்றித் தெரிந்து கொள்ளல் போன்ற நிகழ்வுகள் நடைபெற்றுக் கொண்டே இருக்கும்.

''இரண்டுக்கு மேற்பட்ட வகுப்புகளை ஒன்று சேர்த்து இரண்டுக்கு, மேற்பட்ட ஆசிரியர்கள் ஒன்று கூடி ஒற்றுமையுடன் செயல்பட்டு, தங்களிடம் உள்ளதிறமைகளை வெளிக் கொணரத் திட்டமிட்டு, கற்பித்து, மதிப்பீடு செய்யும் முறை குழு கற்பித்தல்''[20] என்று லாயிட்டிரம்ப் (J. Lloyed Trump) கூறுகின்றார்.

### 1.10.13 சுயமாகக் கற்கும் முறைகள்

தலைசிறந்த ஆசிரியர், மாணவர்கள் சுயமாகப் படிக்கும் திறன், சிந்திக்கும் திறன், தனித்துச் செயல்படும் திறன், சுயமாகக் கற்கும் திறன் போன்றவற்றை வளர்க்க முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும்.

மாணவர்கள் ஆசிரியர்களிடம் கற்கும் போது எவ்வாறு நெறிகளைப் பின்பற்ற வேண்டுமென்று நன்னூலார் குறிப்பிடுகின்றார். இதனை,

*"நூல் பயில் இயல்பே நுவலின் வழக்கறிதல்*
*பாடம் போற்றல் கேட்டவை நினைத்தல்*
*ஆசாற் சார்ந்தவை அமைவரக் கேட்டல்*
*அம்மாண்புடையோர் தம்மொடு பயிறல்*

*வினாதல் வினாயவை விடுத்தல் என்றிவை*
*கடனாக் கொளினே மடம் நனி இகக்கும்"*

எனும் நூற்பாவின் வழி உணர்த்துகிறார்.

நன்னூலார் கூறிய இலக்கண நெறிகளைக் கற்கும் மாணவர்கள் பின்பற்றினால் பாடப் பொருளில் ஆழ்ந்த புலமைப் பெற்றுத் திகழ்வதன் மூலம் சிறப்படைய முடியும்.

ஆசிரியர் மாணவர்களைப் பாட நூல்களை மட்டும் படிக்கச் செய்யாமல் அறிவுக் களஞ்சியமான அறிவார்ந்த புத்தகங்களைப் படிக்கச் செய்வதன் மூலம் மாணவர்களுக்கு உயரிய சிந்தனை அருவி போன்று ஊற்றுப் பெருக்கெடுக்கும். இதன் மூலம் அறிவைப் பெறுவதற்குரிய வழிகளை அறிந்து கொள்வார்கள்.

## 1.10.14 சுய வெளிப்பாடு மற்றும் படைப்பாற்றலை வளர்க்கும் கோட்பாடு

சிறந்த ஆசிரியரின் கற்பித்தல் என்பது கற்கும் மாணவர்களுக்குப் பல படைப்பாற்றலை வளர்க்க வழிவகை செய்வதாகும். படைப்பாற்றல் மூலம் சுய வெளிப்பாட்டிற்கான தகுதிகளை வெளிக் கொணர வேண்டும்.

நாட்டில் உள்ள பொதுவான சிக்கல்களைப் பற்றியும் கல்வித்துறையில் ஏற்படும் புதுமைகளைப் பற்றியும் தெரிந்திருந்தால் சுய வெளிப்பாட்டிற்கு அதுவே வழி வகுக்கும். "தாமே கற்பதன் மூலம் பல சிறப்பம்சங்களை மாணவர்கள் கற்றுக் கொள்கின்றனர். பிறரின் செயல்களில் இருந்தும் வழிகாட்டுதலில் இருந்தும் தானே கற்றல் ஏற்படுகின்றது".[21]

## 1.10.15 குறைதவிர் கற்பித்தல் கோட்பாடு

கற்கும் போது மீள்திறன் மிகு மாணவர்கள் வகுப்பறையில் இருப்பார்கள் என்று ஆசிரியர் எதிர்பார்த்தல் கூடாது. கவனக்குறைவான (அ) கவனச்சிதைவு

மாணவர்களும், கவனக்குலைப்பான் மாணவர்களும் வகுப்பறையில் இருப்பார்கள் என்பதனை ஆசிரியர் கவனத்தில் கொள்ள வேண்டும். நன்னூலார் மாணவர்களின் வகைகளைப் பின்வருமாறு கூறுகின்றார்.

*"அன்னம் ஆவே மண்ணொடு கிளியே*
*இல்லிக் குடம் ஆடு எருமை நெய்யரி*
*அன்னர் தலைஇடை கடை மாணாக்கர்"* 22

## 1.11 சிறப்பான கற்பித்தலுக்கான அடையாளங்கள்

வகுப்பறை கற்பித்தல் சிறப்பாக அமைய வேண்டும் என்றால் அதற்கான அடையாளங்களை முழுமையாகக் கையாள வேண்டும்.

ஜெரால்டு A யோகம் (Gerald A Yoakam) மற்றும் இராபர்டீஸ் G. சிம்சன் ஆகிய இருவரும் சிறந்த கற்பித்தலுக்கான அடையாளங்களாகக் கீழ் வருவனவற்றைக் குறிப்பிட்டுள்ளார்கள்.

* ''சிறந்த கற்பித்தலே நன்கு திட்டமிடப்பட்டது.
* சிறந்த கற்பித்தலில் அன்பும், கருணையும் இருக்கும்.
* சிறந்த கற்பித்தல் ஒத்துழைப்பையும், ஆலோசனைகளையும் வழங்கும்.
* சிறந்த கற்பித்தல் ஊக்கப்படுத்தும் விதத்தில் அமையும்.
* சிறந்த கற்பித்தல் ஜனநாயக ரீதியிலானது.
* சிறந்த கற்பித்தல் என்பது கற்றலை வழிநடத்துவதற்கான திறன்களை உள்ளடக்கியது.
* சிறந்த கற்பித்தல் மாணவர்களிடையே சுயசிந்தனையையும், தைரியமாக வெளிப்படுத்தும் திறனையும் வளர்க்கிறது.
* சிறந்த கற்பித்தல் என்பது பிரச்சினைகளைக் கண்டறிவது மட்டுமல்லாமல் அவற்றிற்கான தீர்வுகளையும் வழங்குவது.

* சிறந்த கற்பித்தலில் மாணவர்களின் முந்தைய அனுபவங்கள், பயன்படுத்தப்படுகின்றன''.[23]

## 1.12 கல்வி உளவியலின் முக்கியக் கூறுகள்

வகுப்பறைக் கற்பித்தலில் கல்வி உளவியல் முக்கிய கருத்துக்களை வலியுறுத்துகிறது.

*''மாணவர்*
*கற்பிக்கும் முறை*
*கற்கும் சூழல்''*[24]

மேற்கண்ட மூன்றும் தனித்தனியானவை அல்ல ஒன்றோடொன்று தொடர்புடையவை. இத்தொடர்பேக் கல்வி உளவியல் எனலாம். ஆசிரியர் வகுப்பறைக் கற்பித்தலை மேற்கொள்ளும் போது மாணவர்களின் வயது, பாலினம், ஊக்கமுடைமை, அறிவாண்மை, ஆளுமை போன்றவற்றுக்கு ஏற்ப கற்பிக்கும் சூழல், கற்பித்தல், முறைகளை மாற்றம் செய்து இன்றைய நவீன கற்பித்தலை மேற்கொள்ள வேண்டுமென கல்வி உளவியல் வலியுறுத்துகிறது.

மாணவன் சிறப்பாகக் கற்க வேண்டுமானால் கற்பனையாற்றலை வளர்க்கும் முறையையும், படைப்பாற்றலை வளர்க்கும் முறையையும், கற்றலில் மேன்மைப்படுத்த வேண்டும். கற்பித்தல் வாயிலாக ஒரு மாணவன் பல கற்றல் செயல்களில் ஈடுபடுகின்றான். ''தூண்டல் துலங்கல் வழியே கற்றல், வேறுபடுத்திக் கற்றல், மொழி வழியே கற்றல், கருத்துரு கற்றல், கோட்பாடு கற்றல், சிக்கல் தீர்வு காணல், ஆக்க வழிப் படைப்பு''[25] போன்ற பல கற்றல் வழியாக ஆசிரியர் திறமையை மாணவர் வெளிக் கொணர்கின்றார்.

## 1.13 காக்னேயின் கற்றல் முறைகள்

* ‘‘காக்னேயின் கற்றல் பாதை
* காக்னே வழங்கிய அடுக்கிக் கற்றலைக் கற்றல்
* சிக்கல் – தீர்வு கற்றல்
* விதியினைக் கற்றல்
* வேறுபடுத்திக் கற்றல்
* சொல் இணைத்துக் கற்றல்
* தொடர் செயல் கற்றல்
* தூண்டல் துலங்கல் கற்றல்
* குறியீட்டுக் கற்றல்
* கற்றல் சூழலில் வலுவூட்டம்
* புகழுரையும், இகழுரையும்’’ [26]

என்பன காக்னேயின் கற்றல் முறைகளாகும்.

## 1.14 ஆசிரியரின் உளவியல் பணிகள்

பள்ளி, கல்லூரி வகுப்புகளிலும் ஒழுக்க நிலை நாட்டுதல், பாடம் கற்பித்தல் போன்ற வழக்கமான பணிகளோடு இன்று சில புதுமையான உளவியல் பணிகளை ஆசிரியர் ஏற்றுச் செய்திடல் வேண்டும். அவை,

* ‘‘கற்றலை எளிமையாக்குபவர்
* மாணவர்களின் சிக்கலுக்கு வழிகாட்டுபவர், அறிவுரை வழங்குபவர்
* ஆசிரியர் தொழிலின் உறுப்பினர்
* சமூக உறவை மேம்படுத்துபவர்
* சிறந்த முடிவுகளை மேற்கொள்பவர்’’ [27]

கல்வி உளவியல், கற்பித்தலுக்குத் தேவையான திறன்களை ஆசிரியரிடம் வளர்க்கிறது. கற்பித்தலின் மீது நல்ல மனப்பான்மையை, வளர்த்திட உதவுகின்றது. மாணவர்கள் தம் வாழ்க்கையில் வளர்ச்சி பெறவும், முன்னேற்றம் அடையவும் வழிவகை செய்கிறது. சிக்கலான கற்பித்தலைத் தீர்க்கவும் உதவுகின்றது. தலைசிறந்த ஆசிரியர்களாக விளங்குவதற்கு அடிப்படையாக அமைகின்றது. இதன் மூலமாகச் சிறந்த மாணவர்களை உருவாக்க முடியும்.

## 1.15 வகுப்பறை ஆசிரியருக்குக் கல்வி உளவியல் அறிவு தேவைப்படுவதற்கான காரணங்கள்

வகுப்பறையில் கற்பித்தல் மேன்மையாக அமைய வேண்டுமென்றால் ஆசிரியர் மாணவர்களின் மனநிலைக்கு ஏற்றவாறு கற்பித்தலை மேற்கொள்ள வேண்டும். ஆசிரியர்கள் அடிப்படையான உளவியலைப் புரிந்து வைத்திருத்தல் என்பது முக்கியமாகும். அதற்கான கல்வி உளவியல் அறிவை ஆசிரியர் பெற்றிருத்தல் அவசியமாகிறது.

“ஒரு மருத்துவர் தன் நோயாளிக்குச் சிகிச்சையைத் தொடங்குவதற்கு முன் அவரைப் பற்றி முழுமையான விவரங்களை எந்த அளவுக்குத் தெரிந்து வைத்திருக்க வேண்டுமோ அந்த அளவுக்குக் கற்பிப்பதற்கு முன் ஆசிரியர் தன் மாணவர்களின் இயல்புகளைத் தெரிந்து வைத்திருக்க வேண்டும். குழந்தைகள் குழவிப் பருவம், பிள்ளைப் பருவம், குமரப் பருவம் ஆகியவைகளைக் கடக்கும் போது அந்தந்த பருவத்திற்கான இயல்புகளை அறிந்து அவற்றைக் கற்பித்தல் முறைகளில் பயன்படுத்தி, தேர்வு செய்யப்பட்ட கல்வி இலக்குகளை அடையும் வண்ணம் மாணவர் நடத்தையை உருவாக்கக் கல்வி உளவியல்”[28] ஆசிரியருக்கு உதவுகிறது.

## 1.16 நுண்ணிலைக் கற்பித்தல் (Micro Teaching)

*"ஆயுதம் செய்வோம் நல்ல காகிதம் செய்வோம்*
*ஆலைகள் வைப்போம் கல்விச்சாலைகள் வைப்போம்*
*ஓயுதல் செய்யோம் தலைசாயுதல் செய்யோம்*
*உண்மைகள் சொல்வோம் பல வண்மைகள் செய்வோம்"* [29]

(பாரதியார்)

நுண்ணிலைக் கற்பித்தல் என்பது சில கற்பித்தல் திறன்களின் தொகுதி என்பதனை அறியலாம். அதாவது கற்பித்தலைச் சில திறன்களாகப் பாகுபடுத்திக் கொள்ளலாம். எல்லாத் திறன்களையும், உடனடியாக ஒன்று சேரப் பயன்படுத்தாமல் ஒவ்வொரு திறனிலும் தனித்தனியாய் பயிற்சி அளிப்பதே நுண்ணிலைக் கற்பித்தல் ஆகும்.

கற்பித்தலில் அறிமுகம் செய்தல், செய்து காட்டுதல், எடுத்துக் காட்டுதுதல், கருதுகோள் அமைத்தல், எடுத்துக் கூறல், உறுதிப்படுத்தல், சீர்தூக்கிக் காட்டுதல், விளக்குதல், வினாக்கேட்டல், விவரித்தல் போன்ற பல குறிப்பான செயல்கள் உள்ளன. இவை கற்பித்தல் திறன்கள் ஆகும்.

## 1.17 கற்பித்தல் திறன்கள்

நுண்ணியல் கற்பித்தலின் முன்னோடிகளான ஆலன், ராயன் (Alan and Ryan) என்பவர்கள் பதினான்கு திறன்களை வரிசைப்படுத்தியுள்ளார்கள். பேராசிரியர் பாசி (Passi) அவர்கள் பதின்மூன்று திறன்களைக் குறிப்பிட்டுள்ளார். "பரோடா பல்கலைக்கழகம் இருபத்தொரு திறன்களை அடையாளம் கண்டு விளக்கம் தந்துள்ளது. ஆஸ்திரேலியா போன்ற நாடுகள் நூற்றுக்கும் மேற்பட்ட திறன்களை வகைப்படுத்தியுள்ளன". [30]

## 1.18 நுண்நிலைக் கற்பித்தலில் உள்ள சில திறன்கள் பற்றிப் பேராசிரியர் பாசி குறிப்பிடும் திறன்கள்

* கற்பித்தல் நோக்கங்களைக் குறிப்பிடும் திறன்

  (Skill of Writing Instructional Objectives)

* சரளமாக வினாக்கள் கேட்கும் திறன்

  (Skill of Fluency in Questioning)

* பாடம் தொடங்கும் திறன்

  (Skill of Introducing a lesson)

* விளக்குதல் திறன்

  (Skill of Explaining)

* எடுத்துக்காட்டுகளுடன் விளக்கும் திறன்

  (Skill of Illustrating with Examples)

* கிளர் வினாத்திறன்

  (Skill of Probing Questions)

* மௌனமும் மொழிச்சார்பற்ற குறிகளும் பயன்படுத்தும் திறன்

  (Skill of silence and non-verbal cues)

* வலுவூட்டிகளைப் பயன்படுத்தும் திறன்

  (Skill of Reinforcement)

* பல்வகைத் தூண்டல்களைப் பயன்படுத்தும் திறன்

  (Skill of Stimulus Variation)

* கரும்பலகையைப் பயன்படுத்தும் திறன்

  (Skill of using blackboard)

* முடித்தல், மதிப்பீடல், நிர்வகிக்கும் திறன்கள்

  (Closure Evaluation and Manageriat skills)

* பாடம் முடிக்கும் திறன்

  (Skill of Closure)

* கவனிக்கும் நடத்தைகளை உணர்திறன்

  (Skill of Recognizing attending behavariour)

## 1.19 பேராசிரியர்கள் ஆலன் - ராயன் கூறும் திறன்கள்

* பல்வகைத் தூண்டல்களைப் பயன்படுத்தும் திறன்

  (Skill of Stimulus Variation)

* பாடம் தொடங்கும் திறன்

  (Set Introduction)

* பாடம் முடிக்கும் திறன்

  (Skill of Closure)

* மௌனமும் மொழிச்சார்பற்ற குறிகளும்

  (Silence and non-verbal cues)

* மாணவர் பங்கேற்பை வலுவூட்டுதல்

  (Re-in-forcement of student participation)

* வினாக் கேட்டலில் சரளமுடைமை

  (Fluency in asking question)

* கிளர் வினாத்திறன்

  (Skill of probing questions)

* உயர்நிலை வினாக்கள்

  (Higher Order questions)

* விரிசிந்தனையைத் தூண்டும் வினாக்கள்

  (Divergent questions)

* கவனிக்கும் நடத்தைகள் அறியும் திறன்

  (Illustrations and use of examples)

* எடுத்துக்காட்டுகளைப் பயன்படுத்தும் திறன்

  (Illustrations and use of examples)

* சொற்பொழிவுத்திறன்

  (Skill of speech)

* திட்டமிட்டு மீண்டும் கூறும் திறன்

  (Skill of Planned Repetition)

* செய்தி இணைப்பு நிறைவு பெறல்

  (Completeness of Communication)

## 1.20 கற்பித்தல் திறன்கள்

* பாடங்களுக்கு எவ்வாறு கற்பித்தல் நோக்கங்களைத் தயாரிப்பது.

  (Instructional Objectives)

* பாடங்களை எவ்வாறு வகுப்பில் தொடங்குவது

  (Set induction)

* எவ்வாறு பாடங்களை முடிப்பது

  (Closure)

* மாணவர்களைக் கட்டுப்பாட்டுக்குள் வைப்பது

  (Student Management)

* எப்படி மாணவர்களிடம் வினா கேட்பது

  (Questioning Techniques)

* பாடப்பகுதிகளை விளக்குவது

  (Explaing the lessons)

* பல்வகைத் தூண்டல்கள் மூலம் மாணவர்களது கவனத்தை நிலை நிறுத்துவது

  (Stimulus Variations)

* வலுவூட்டிகள் மூலம் கற்றல் நிகழ்வில் ஈடுபட வைப்பது

  (Reinforcement)

* கரும்பலகையைப் பயன்படுத்துவது

  (Use of Black board)

* எடுத்துக்காட்டுகள் மூலம் விளக்குவது

  (Illustrating with examples)

* சைகைகளையும் அமைதியையும் பயன்படுத்துவது

  (Silence and non-verbal cause)

மேற்கண்ட திறன்களின் மூலமாக வகுப்பறை;க கற்பித்தலைச் சிறப்படையச் செய்யலாம்.

## 1.21 கற்பித்தலின் அடிப்படைத் திறன்கள்

பொதுவாக மொழியைக் கற்பிப்பதற்கு முதற்படியாகச் சில அடிப்படைத் திறன்கள் தேவைப்படுகின்றன. முக்கியமாகப் பள்ளி, கல்லூரி மாணவர்களுக்கு அடிப்படைத் திறன்கள் இன்றியமையாததாகவே இருக்கின்றன.

* கேட்டல் திறன்
* பேசுதல் திறன்
* படித்தல் திறன்
* எழுதுதல் திறன்[31]

## 1.21.1 கேட்டல் திறன்

'கற்றலின் கேட்டலே நன்று' என்று கேள்விச் செல்வத்தை நம் முன்னோர் போற்றினர். நான்கு திறனில் கேட்டல் திறனே முதன்மையாகும்.

*"கற்றிலன் ஆயினும் கேட்க அஃதொருவற்கு*
*ஒற்கத்தின் ஊற்றாம் துணை"* [32]

(குறள்.414)

என்று கேட்டலின் சிறப்பினைப் பற்றித் தெய்வப்புலவர் குறிப்பிட்டுள்ளார்.

*"கேட்பினும் கேளாத் தகையவே கேள்வியால்*
*தோட்கப் படாத செவி"* [33]

(குறள்.418)

படித்த சான்றோர்கள் பேசுகின்ற பேச்சைப் படிக்காதவர் தன் செவிப்புலன் வழியாகத் தெளிவுடன் கேட்டலே சிறந்தது என்கின்ற கருத்தை வள்ளுவப் பெருந்தகை வலியுறுத்துகின்றார்.

கதை, கட்டுரை, வானொலி, தொலைக்காட்சி, உரையாடுதல், பட்டிமன்றம், விவாதம் போன்றவற்றைக் கேட்கின்றோம். கேட்டல் என்றும் இன்றியமையாததாகிறது. எனவே தற்காலத்தை ஒரு கேட்டல் யுகம் எனச் சிலர் கூறுகின்றனர்.

*"செல்வத்துள் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம்*
*செல்வத்துள் எல்லாம் தலை"* [34]

(குறள்.411)

என்னும் குறளின் மூலம் செவிச் செல்வத்தை விடச் சிறந்த செல்வம் வேறு இல்லை எனத் திருவள்ளுவர் கேட்டலின் சிறப்பைக் கூறுகின்றார்.

### 1.21.2 கேட்டல் திறனை வளர்க்கும் வழிவகைகள்

கேட்டல் நிகழ்வு சரியான முறையில் நிகழ்ந்தால் தான் மாணவர்கள் கேட்கும் பொழுதும், எழுதும்பொழுதும் சரியான ஒலிப்பு முறையோடு எழுதுவார்கள். கேட்டலை இருவகையாகப் பிரிக்கலாம் (i) 'பேசுதலைக் கேட்டல்', (ii) 'படித்தலைக் கேட்டல்'.

கேட்டல் திறன் நிகழ்வதற்குப் பிறரது பேச்சு இன்றியமையாததாகும். முற்போக்குச் சிந்தனை படைத்த சிந்தனையாளர்களையும், இலக்கியப் பேச்சாளர்களையும் வரவழைத்து, மாணவர்களிடம் பேச வைத்தால் கேட்கும் திறன் மேலும் வளர்ச்சியடையும்.

### 1.21.3 பேசுதலைக் கேட்டறிதல்

மாணவர்களுக்கு ஆர்வமூட்டும் வகையில் பொதுவான ஒரு தலைப்பில் பேச வைத்து அத்தலைப்பை நன்றாகக் கேட்கும்படிச் செய்து பின்னர் சிறுசிறு வினாக்களைக் கேட்கச் செய்தல் வேண்டும்.

வகுப்பறையில் எல்லா மாணவர்களும் பேசும் திறனைப் பெற்றிருப்பார்கள் என்பதை ஆசிரியர் எதிர்பார்த்தல் கூடாது. போட்டியின் போது தயங்கும் மாணவர்களை ஆசிரியர் அனைத்துப் போட்டிகளில் பங்கேற்கச் செய்வதே ஒரு சிறந்த முயற்சியாகும்.

### 1.21.4 படித்தலைக் கேட்டறிதல்

கேட்டல் ஆர்வத்தை வளர்க்கும் வகையில், ஆசிரியர் மாணவர்களுக்குச் சிறந்த வாய்ப்பினை ஏற்படுத்தித் தருதல் வேண்டும். பாடப் புத்தகத்தில் உள்ள செய்யுள் பகுதியையோ அல்லது உரைநடைப் பகுதியையோ சிறப்பாகப் படிக்கும் மாணவனைப் படிக்கச் செய்து அதனை சக மாணவர்களைக் கேட்கச் செய்வதே கேட்டலின் சிறப்பாகும்.

நடைமுறை வாழ்க்கைக்கு ஏற்றாற் போல் சிறுகதை, நாவல், கவிதைகளைப் படிக்கச் செய்து அதில் இருந்து சிறு சிறு வினாக்களைக் கேட்டலின் மூலம் மாணவர்கள் கேட்டதைத் தேர்ந்தறிதலாகும்.

## 1.21.5 கேட்டலின் வழிக்கற்றல்

கேட்டல், பேசுதல் என்பது ஒலியை அடிப்படையாகக் கொண்ட திறன்களாகும். படித்தல், எழுதுதல் ஆகிய இரண்டும் வரி வடிவத்தைப் பெற்ற திறன்களாகும். கேட்டலும், எழுதுதலும், நடந்து முடிந்த செய்திகளையும், நடக்கின்ற செய்திகளையும் நாம் அறிந்து கொள்ள உறுதுணையாக இருக்கின்றன. மாணவர்களின் தன்மையை மயிலை நாதர் விளக்கம் தந்துள்ளார். “மாணாக்கர் பாடம் கேட்கும் இயல்பு எனக் குறிப்பிட்டுள்ளார். இவை எல்லாம் உரை எழுதி நூல்களைப் படிப்பதை விடப் பிறரிடமிருந்து கேட்டுப் பயின்ற முறை அக்காலத்தில் மிகுதியாக இருந்தது”[35] என்பதைக் காட்டுகின்றன.

## 1.21.6 கேட்டல் பழக்கத் திறனை வளர்த்தல்

பாடப் புத்தகத்தில் உள்ள செய்திகள் மட்டும் அன்றி அறிஞர் பெருமக்கள் ஆற்றுகின்ற சொற்பொழிவுகள், முற்போக்குச் சிந்தனை வாதிகளின் பேச்சைக் கேட்டல் என்பது சாலச் சிறந்ததாகும். இதனால் கேட்டல் பழக்கம் அதிகரிக்கும். பண்டைக் காலக் குருகுலக் கல்வி முறையில் கேட்டல் பழக்கம் அதிகமாகவே இருந்துள்ளது என்பது வரலாற்றுச் சான்றாகும்.

“மதுரை ஆலவாயிற் பெருமானடிகளால் செய்யப்பட்ட நூற்கு நக்கீரனாரால் உரை கண்டு குருபர சுவாமியால் கேட்கப்பட்டது”[36] இறையனார் அகப்பொருள் உரை பல தலைமுறைகளாக வாய்மொழியாக வந்தது என்பதற்கு அவ்வுரையிலேயே அகச்சான்று உண்டு.

### 1.21.7 வானொலி கேட்டல்

வானொலி நிகழ்ச்சிகள் மாணவர்களுக்கு மிகவும் பயன்தரக்கூடிய வகையில் அமைந்துள்ளன ஆனால் இன்றைய காலக்கட்டத்தில் வானொலியை 100 விழுக்காட்டில் 5 விழுக்காடு தான் கேட்கின்றார்கள்.

வானொலி கேட்பதன் மூலமாக நம் மனத்தில் இருக்கின்ற திறமைகளை வெளிக் கொண்டு வரமுடியும். கேட்கும் பொழுது அது சிறப்பாக அமையும். சொல்லுக்குச் சொல் ஏற்றத்தாழ்வுகளைக் கவனமாகக் கேட்டல் வேண்டும். ல, ள, ற, ர ஒலிப்பு முறைகளை எடுத்துக்காட்டி பயிற்சிகள் தருவதன் மூலம் கேட்டல் திறன் வளரும்.

### 1.21.8 பேசுதல் திறன்

பேசுதல் திறன், கேட்டலைத் தொடர்ந்தும் கேட்டலின் விளைவாலும் உருவானது. பேசுதல் திறன் என்பது சிறந்த கலையாகும் என அனைவராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது. பேசுதலுக்கு வாய்மொழிப் பயிற்சியே அடிப்படையாகும்.

“நாவசைத்தால் நாடசையும், உலகம் அசையும். வாயுள்ள பிள்ளை பிழைக்கும்”[37] என்ற பழமொழிகளின் வாயிலாகப் பேச்சாற்றல் மிக்கவர்களே தலைசிறந்தவர்கள் என்று போற்றப்படுகிறார்கள்.

### 1.21.9 பேசுதல் திறன் பயிற்சின் நோக்கங்கள்

* திருத்தமாகப் பேசுதல்
* தெளிவுடன் பேசுதல்
* அச்சம் கூச்சமின்றிப் பேசுதல்
* உணர்வு வெளிப்படுமாறு பேசுதல்
* பிழையின்றிப் பேசுதல்
* கொச்சைச் சொற்களை நீக்கிப் பேசுதல்

* வட்டார வழக்கை நீக்கிப் பேசுதல்

மேற்கண்டவாறு பிழைகள் இல்லாமல் பேசுவது சிறப்பைத் தரும்.

## 1.21.10 படித்தல் திறன் குறிக்கோள்கள்

பேசுதல் திறனுக்கு அடுத்த படியாக அமைவது படித்தல் திறன். மொழிப் பாடங்களில் முக்கியப் பிரிவு படித்தல் திறனாகும். 'ஓதுவதொழியேல்' என்று ஔவையார் படித்தலின் சிறப்பினைக் குறிப்பிடுகிறார். எழுதுகின்ற எழுத்தையோ, அல்லது அச்சிட்ட எழுத்துகளையோ கண்ணால் பார்த்து உச்சரிப்பதே படித்தல் ஆகும்.

படித்தல் திறனைச் செம்மைப்படுத்த வேண்டும் என்றால் படித்தலின் போது உள்ளம், கண், காது, மூக்கு, நாக்கு, குரல், உறுப்புகள் ஆகியவை ஒருங்கிணைந்து செயல் படவேண்டும்.

## 1.21.11 படித்தல் திறனின் குறிக்கோள்கள்

* "குரல் ஏற்றத் தாழ்வுகளை உண்டாக்கிப் பொருளுணர்ச்சியை வெளிப்படுத்துதல்
* படித்தல் பொருளைத் தானும் உணர்ந்து பிறரையும் உணரச் செய்தல்
* சொல்லின் பொருளைச் சிந்தித்தறிந்து உணரச் செய்தல்
* சொற்களஞ்சியத்தைப் பெருக்க உதவுதல்
* பயன்பாட்டுள்ள சமுதாய வாழ்க்கைக்கு வித்திடுதல்
* பிறமொழிச் சொற்களை அறியச் செய்தல்
* நிறுத்தற்குறிகளைப் பயன்படுத்தும் முறையை அறியச் செய்தல்"[38]

மேற்கண்ட குறிக்கோள்களைப் பயன்படுத்திப் படித்தல் திறனை இன்னும் செம்மைப் பெறச் செய்யலாம்.

### 1.21.12 எழுதுதல் திறன் வளர்க்கும் வழி வகைகள்

மாணவர்களுக்கு எழுதுதல் திறன் என்பது முக்கியமானதாகும். ஆசிரியர் மாணவர்களுக்கு எழுத்துப் பயிற்சி மிகுதியாகவே வழங்க வேண்டும்.

* ''வரியொற்றி எழுதுதல்
* பார்த்து எழுதுதல்
* சொல்வதை எழுதுதல்
* தானே எழுதுதல்''[39]

### 1.21.13 வரியொற்றி எழுதுதல்

கையெழுத்துச் சிறக்க வேண்டுமென்றால் வரியொற்றி எழுதுதல் சிறந்த பயிற்சியாகும். பள்ளிப் படிப்பினை முடித்து விட்டுக் கல்லூரிப் படிப்பினைத் தொடங்குவதற்கு வரும் மாணவர்கள் எதிர்காலமே கல்லூரியில்தான் தொடங்குகின்றது. பல துறையில் சிறந்து விளங்குவதற்குக் கையெழுத்தும் ஒரு முக்கியமான திறனாகும்.

கல்லூரியில்தான் மாணவர்களுக்குப் படைப்பாற்றல் வளருகிறது. பருவம் இந்நிலையில்தான் எழுதுதல் திறன் முக்கியத்துவம் பெறுகின்றது.

### 1.21.14 பார்த்து எழுதுதல்

ஆசிரியர் மாணவர்களுக்குப் பார்த்து எழுதும் பயிற்சியினை அளித்தல் வேண்டும். இது விரைவாக எழுதுவதற்கும், மனதில் நிறுத்துவதற்கும் மாணவர்களுக்கு வகை செய்கின்றது. ஆசிரியர் பாடம் தொடர்பான பல அரிய செய்திகளைக் கரும் பலகையில் எழுதிப் பின்னர் மாணவர்களைத் தங்கள் குறிப்பேட்டில் பார்த்து எழுதச் சொல்லல் வேண்டும். பார்த்து எழுதுவதன் மூலம் கையெழுத்துத் தெளிவாக அமையும்,

* வேகமாக எழுதுவதற்கு நல்ல பயிற்சியளிக்கின்றது.

* மாணவர்கள் சொற்களைப் பார்த்து வரிசையை உணரத் தெளிவாய் வழி வகுக்கின்றது.
* அருமையான சொற்றொடர்கள், மரபுத் தொடர்கள் ஆகியவற்றை எழுதிப் பழக உதவுகின்றது.
* கவனக்குறைவுள்ள மாணவர்கள் பிழையுடன் எழுதுவார்கள். அவர்களை இனம் கண்டு கவனக்குறைவைத் திருத்த வாய்ப்பு கிடைக்கிறது.
* சிறிய சொற்களின் எழுத்துக் கூட்டலை நன்கறிய உதவுகின்றது.
* நிறுத்தற் குறிகளோடு எழுதிப் பழகுவதால் ஏற்ற இடங்களில் நிறுத்தற்குறியிட்டு எழுதும் பயிற்சி கிடைக்கும்.

### 1.21.15 சொல்வதை எழுதுதல்

வகுப்பறையில் மாணவர்களுக்கு கவனச்சிதைவு ஏற்படாதவாறு ஆசிரியர் எழுதும் பயிற்சியை மாணவர்களுக்கு அளித்தல் வேண்டும். சொல்லுவதை எழுதுதல் மூலமாக மாணவர்களுக்கு நினைவாற்றல் வளரும். மீள்திறன் மிக்க மாணவரை ஏற்கனவே நடத்தி முடிக்கப்பட்ட பாடத்தைப் படிக்கச் சொல்லிப் பிற மாணவர்களை எழுதச் செய்தல். ஒரு தொடரை முழுமையாகப் படிக்கச் செய்த பின் மாணவர்களைக் கேட்டு எழுதச் செய்தலே ஆசிரியரின் கடமையாகும்.

ஒரு தொடரை மாணவர்கள் எழுதி முடித்த பிறகுதான் அடுத்தத் தொடருக்குச் செல்லுதல் வேண்டும். முன் எழுதச் சொன்ன தொடர் முழுமை பெறாமலே இருக்கும் போது அடுத்தத் தொடரைப் படிக்கச் செய்தல் கூடாது. மாணவர்களுக்குக் குழப்பம் ஏற்பட்டு விடும்.

### 1.21.16 தானே எழுதுதல்

ஒரு கூட்டில் தாய்க்குருவி தன் குஞ்சுக்குத் தேவையான அனைத்தும் செய்யும். குஞ்சு தானாகவே பறக்க முயற்சி செயதால் தாய்க்குருவி கண்டு

கொள்ளாது. அதே போன்று ஆசிரியர் தன் மாணவர்களுக்கு அனைத்துப் பயிற்சியினைக் கொடுத்தப் பிறகு தானே எந்தச் செயலையும் செய்ய முடியும் என்ற தெளிவு வந்த பிறகு ஆசிரியர் மாணவர்களின் திறனுக்கு ஏற்றவாறு வழி விட்டு விடுவார்.

கல்லூரி மாணவர்களுக்குப் படைப்பாற்றலை வளர்க்கும் வகையில் தானே எழுதுதல் திறன் அமைந்துள்ளது. கல்லூரி மாணவர்களுக்குச் சொற்களின் தன்மையைப் பற்றி ஆசிரியர் தெளிவுப் படுத்த வேண்டும். தானே எழுதும் திறன் வாயிலாகப் பள்ளி, கல்லூரி மாணவர்களுக்குப் பல வகையான படைப்பாற்றல் வளரும்.

## 1.22 தொகுப்புரை

இவ்வியலில் கற்பித்தலில் அறிஞர் பெருமக்களின் கருத்துக்கள் இடம் பெற்றன. கற்பித்தபின் உளவியலின் கோட்பாடுகள் விளக்கப்பட்டன. கற்பித்தலின் அடையாளங்கள் மற்றும் நுண்நிலைக் கற்பித்தலில் பாசி, பேராசிரியர் ஆலன் – ராயன் கூறும் விளக்கங்கள் இடம் பெற்றன. கற்பித்தலின் நான்கு அடிப்படைத் திறன்கள் இடம் பெற்றன. மேற்கண்ட அனைத்தும் கற்பித்தல் கோட்பாட்டுக்கு முக்கியத்துவம் பெறுகின்றன.

---

**சுருக்கக் குறியீட்டு விளக்கம் :**

ப. – பக்கம்

மேலது – மேலே குறிப்பிட்ட படி

# அடிக்குறிப்புகள்

1. என். இராஜேஸ்வரி, கலைத்திட்டச் செயல்பாட்டின் கோட்பாடுகள், ப.40.
2. மேலது, ப.40.
3. மேலது, ப.40.
4. மேலது, ப.41.
5. மேலது, ப.42.
6. மு. கோவிந்தராசன், திறன்மிகு கற்பித்தல், ப.11.
7. என். இராஜேஸ்வரி, கலைத்திட்டச் செயல்பாட்டின் கோட்பாடுகள், ப.44.
8. மேலது, ப.44.
9. அ. மீனாட்சிசுந்தரம், ஆசிரியர் கல்வி, ப.1.
10. மேலது, ப.13.
11. கி. நாகராசன், கல்வி உளவியல், ப.1.
12. மேலது, ப.2.
13. என். இராஜேஸ்வரி காலத்திட்டச் செயல்பாட்டின் செயல்பாடுகள், ப.45.
14. டாக்டர் பாஞ். இராமலிங்கம், கல்வியும் உளவியலும், ப.37.
15. மேலது, ப.37.
16. சி. நாகராஜன், கல்வி உளவியல், ப.234.
17. டாக்டர் க. ராஜம்மாள், ராஜகோபால், கற்பித்தல் மாதிரிகள் ஓர் அணுகுமுறை, ப.6.
18. கி. நாகராஜன், கல்வி உளவியல், ப.169.
19. அ. மீனாட்சிசுந்தரம், ஆசிரியர் கல்வி, ப.187.
20. மேலது, ப.188.
21. பாஞ். இராமலிங்கம், கல்வியும் உளவியலும், ப.49.

22. மேலது, ப.50.

23. என். இராஜேஸ்வரி, கலைத்திட்டச் செயல்பாட்டில் கோட்பாடுகள், ப.49.

24. பாஞ். இராமலிங்கம், கல்வியும் உளவியலும், ப.50.

25. மேலது, ப.50.

26. மேலது, ப.53.

27. மேலது, ப.53.

28. கி. நாகராஜன், கல்வி உளவியல், ப.28.

29. பாஞ். இராமலிங்கம், கல்வியும் உளவியலும், ப.53.

30. கி. நாகராஜன், கல்வி உளவியல், ப.28.

31. க.வே. கிருபானந்தம், கணினி கற்பிக்கும் முறைகள், தாள் 1, ப.51.

32. மு. வரதராசனார், திருக்குறள் தெளிவுரை, ப.87.

33. மேலது, ப.87.

34. மேலது, ப.87.

35. வி.கணபதி, நற்றமிழ் கற்பிக்கும் முறைகள், ப.71.

36. இரா. செயபால், அகநானூறு, ப.25.

37. மேலது, ப.26.

38. தமிழ்மொழி கற்றல், தமிழ்நாடுப் பாடநூல் கழகம், வளநூல் முதலாமாண்டு, ப.57.

39. மேலது, ப.57.

# இயல் - 2

# சார்பிலக்கியங்கள்

# REVIEW OF LITERATURE

## 2.1 முன்னுரை

ஆய்விற்கு நேர்முக அல்லது மறைமுகத் தொடர்புடைய அனைத்துச் செய்திகளையும், சான்றுகளையும், தருகின்ற ஆய்வுரைகள், ஆய்வுக் கட்டுரைகள், இதழ்கள், நூல்கள் போன்ற அனைத்தும் சார்பிலக்கியங்கள் எனப்படும். சார்பிலக்கியங்கள் புதிய ஆய்வுக்கு உரமாக அமையும். ஆய்விற்கான முழுப்பார்வையை நல்கி ஆய்வைச் செம்மையாக முடிக்க சார்பிலக்கியம் தேவை. வளர்ச்சி பெற்று வந்துள்ள அறிவே வரவிருக்கும் புதுமை வெளிப்பாட்டுக்கு உதவும்.

சார்பிலக்கியத்தின் தேவையான ஆய்வை மேற்கொள்ளும் ஒருவர் இதுவரை அத்துறையில் செய்யப்பெற்றுள்ள ஆய்வு வளர்ச்சியை அறிந்தால் தாம் மேற்கொள்ளும் ஆய்விற்கு முழுப்பார்வை கிடைக்கப்பெறுவர். புதிய பொருளைக் கண்டறிய மேற்கொள்ளும் ஆராய்ச்சியாளர்கள், ஆராய்ச்சி தொடர்புடைய துறைகளை ஆராயக்கூடியவராக இருக்க வேண்டும். முன்னறிவோடு ஆய்வாளர் தம் முயற்சியும் அறிவும் இணையும் போதுதான் ஆய்வு வளர்ச்சி சரியான திசையில் இயங்குவதோடு மட்டுமல்லாமல் புத்தறிவும் கிட்டும்.

சார்பிலக்கியங்கள் தரும் அறிவு கூட்டறிவாகும். தான் மேற்கொள்ள இருக்கும் ஆராய்ச்சியைப் பற்றிய முன்னறிவு பெறவும், பெற்றவரின் ஆராய்ச்சிகளில் இருந்து தமது ஆராய்ச்சியை வேறுபடுத்திக் காட்டவும், தம் ஆராய்ச்சி தொடர்பான முன்னாள் ஆராய்ச்சி பற்றிய கண்ணோட்டம் சாலச்சிறந்தது ஆகும்.

இந்த இயலில் ஆய்வாளர் மேற்கொண்ட ஆய்வுத் தொடர்பாக, ஏற்கனவே மேற்கொள்ளப்பட்ட ஆய்வுகள் குறித்துக் கூறப்பட்டுள்ளது.

## 2.2 மேலைநாட்டுச் சார்பிலக்கியங்கள் (Foreign Study)

### ஜோன் அமொஸ் ஜொமினியஸ் (1592-1670)

இவர் கல்வியின் முப்பெரும் நோக்கங்களை வலியுறுத்திய இலட்சியவாதி ஆவார். அந்த நோக்கங்களை அடைவதற்குத் தாய்மொழியே ஏற்புடையது என்பதைத் திட்டவட்டமாகக் குறிப்பிட்டார். அவர் குறிப்பிட்ட முப்பெரும் கல்விநோக்கங்களும் வருமாறு:

1. வாழ்க்கையில் வெற்றி பெறுவதற்குரிய அறிவைப் பெற்றுக் கொடுத்தல்.
2. அறம் மற்றும் ஒழுக்கம் சார்ந்த மேம்பாடுகளுக்குரிய அறிவை வழங்குதல்.
3. மனிதரிடையே தெய்வீக ஈடுபாட்டை ஏற்படுத்துதல்.

மேற்கூறியவை தாய்மொழிக் கல்வியினால் சாத்தியப்படக்கூடியவை என அவர் குறிப்பிட்டுள்ளார். பன்னிரண்டு வயதுக்குப் பின்னரே இலத்தீன் போன்ற பிறமொழிகளைக் கற்பிக்க வேண்டும் என்பது அவரது கருத்தாக அமைந்தது. நடைமுறைப் பயனுடையதாகக் கல்வி அமைவதற்கும், தன்னிலை சார்ந்த அனுபவங்களை வளர்ப்பதற்கும், புற அழுத்தங்களின்றி இயக்கப்படுவதற்கும், சமத்துவமாக வழங்கப்படுவதற்கும் தாய்மொழியே பயிற்றுமொழியாக இருத்தலின் இன்றியமையாமை இவரால் வலியுறுத்தப்பட்டுள்ளது.

### ரூசோ (1712-1778)

இவர், எதிர்மறைக்கல்வியை (Negative Education) வலியுறுத்தினார். எதிர்மறைக் கல்வி என்பது சுயகல்வி அல்லது தற்கல்வி ஆகின்றது. தற்கல்வி தாய்மொழியை அடிப்படையாகக் கொண்டதும், உடலின் புலன்சார் உறுப்புக்களைத் தழுவியது மாகின்றது. சிறாரை உடல்நலமுள்ளவர்களாகவும், தன்னிறைவு மிக்கவர்களாகவும் வளர்த்தெடுக்கும் செயற்பாட்டில் தாய்மொழிக்கும் பதிவேடு வேறெதுவுமில்லை என்பது இயற்பண்புவாதிகளின் முடிபு.

## கேர்பேர்ட் ஸ்பென்சர் (1820-1903) கல்வி

1861ஆம் ஆண்டிலே வெளியிட்ட 'கல்வி' என்ற நூலிலே கல்விசார் நோக்கங்களைப் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்.

1. தன்னைத்தானே பாதுகாத்துப் பராமரித்துக் கொள்ளல்.
2. வாழ்க்கைக்குரிய பொருளீட்டிக் கொள்ளல்.
3. பயனுள்ள பெற்றோராகத் தொழிற்படல்.
4. நல்ல பிரசையாகத் தொழிற்படல்.
5. நல்ல பொழுது போக்கை உருவாக்கிக் கொள்ளும் திறன்களை வளர்த்துக் கொள்ளல்.

மேற்கூறிய இலக்குகளை அடைவதற்குரிய கற்பித்தல் செயல்முறையானது தெரிந்ததிலிருந்து தெரியாதவற்றை நோக்கிச் செல்வதாகவும், எளிதிலிருந்து சிக்கலை நோக்கிச் செல்வதாகவும் அமைக்கப்படல் வேண்டும் என வலியுறுத்தும் பொழுது தாய்மொழியின் தேவையும் முக்கியத்துவமும் மேலேழுச்சியும் பெறுகின்றன.

## ஜோன்டூயி (1859-1952)

பயன்வாதக் கல்விச் செயல் முறைகளை வலியுறுத்தியவர்களுள் ஜோன்டூயா அவர்களும் முக்கியமானவர். அவரால் தெறித்தல் சிந்தனையின் முக்கியத்துவமும், பிரச்சனை விடுவித்தல் தேவையும் வலியுறுத்தப்படும் பொழுது, தாய்மொழிக்கல்வி இயல்பாகவே வலுப்பெறத் தொடங்குகின்றது. பிரச்சனையை இனங்காணல், பிரச்சனை தொடர்பான தெளிவு கொள்ளல் தீர்வுக்குரிய கருதுகோளை உருவாக்குதல், ஒப்புநோக்கி உறுதிப்பாடு கொள்ளல், கருதுகோளின் பொருத்தப் பாட்டை இனங்காணல் முதலிய கல்விச் செயற்பாடுகளிலே தாய்மொழியின் சாத்தியப்பாடே ஒப்பீட்டில் முக்கியத்துவம் பெறுகின்றது.

## பேர்ட்டன் ரசல் (1872-1970) தாய்மொழிக் கல்வியும் கற்பித்தல் கலையும்

அறிவு சமூக முன்னேற்றத்துக்குப் பயன்படல் வேண்டும் என்பதும் பயன் கொள்வாதத்தின் நோக்காகும். அறிவு சமூகத்துக்குப் பயன்படல்வேண்டும் என வலியுறுத்தும் பொழுதும் சனநாயக மரபுகள் கல்வியால் முன்னெடுக்கப்படுதலை ஊக்குவிக்கும் பொழுதும், தாய்மொழியின் முக்கியத்துவம் மேலெழச் செய்யப்படுகின்றது என்று கல்வியில் பயன் கொள்வாதத்தை வலியுறுத்தினார். மனிதரின் ஆக்கமலர்ச்சி கல்வியால் வெளிக்கொண்டு வரப்படுதலின் தேவையை குறிப்பிட்டுள்ளார். உளவியல் அடிப்படையில் ஆக்கத்திறன் வெளிப்பாட்டுக்கும் தாய்மொழிக்கும் நேரடியான இணைப்பு இருத்தல் மீள வலியுறுத்தத்தக்கது.

சிறாரிடத்து நான்கு வகையான விருப்புக்கள் உள்ளதாகப் பயன் கொள்வதைக் கல்வியிலே குறிப்பிடப்பட்டுள்ளது. அவை,

1. பேசுதல்.
2. தேடுதல் அல்லது கண்டறிதல்.
3. ஆக்கமலர்ச்சி வெளிப்பாடு.
4. கலை வெளிப்பாடுகள்.

இவை அனைத்தும் தாய்மொழியோடு இணைந்த செயற்பாடுகள் என்பதை மனங்கொள்ளல் வேண்டும்.

## டன்கன்-ஜானி (1987)

1987 இல் எழுதிய கையேட்டில் இரண்டாம் மொழிக் கற்பித்தலுக்கான நுட்பங்களைக் குறிப்பிட்டு உள்ளார். ஒவ்வொரு அத்தியாயத்திலும் நுட்பத்தைப் பற்றிய சிறிய விளக்கம், அதன் தன்மை, திறன்கள், பயன்பாட்டுகளுக்கானக் கருத்துகள், ஆலோசனைகள் அளிக்கப்பட்டு இருந்தன. இக்கையேட்டில்

மொழித்திறன்களான கேட்டல், பேசுதல், வாசித்தல், எழுதுதலை மேம்படுத்த பின்வரும் நுட்பங்கள் பயனுள்ளதாகக் குறிப்பிடப்பட்டன. அவை தலைக்கு மேல் பட வீழ்த்தி, நடுப்பட வீழ்த்தி, படச்சுருள், பட வீழ்த்தி, ஔிநாடா பதிவுக்கருவி, படப்பதிவு புகைப்படக்கருவி, ஒலிநாடா பதிவு செய்கருவி, இசைத்தட்டுகள், மொழி ஆய்வகம், தொலைப்பேசி பயன்பாட்டு பயிற்சியாளர், நுண்கணினி ஆகும்.

## கென்னடி-ஜெரால்டைன் (1989)

1989இல் எழுதிய கட்டுரையில் கணினியினைக் கொண்டு மொழிக் கற்றலினால் கணினியோடு இணைத்தொடர்பு கற்றல் நடைபெறுகிறது. இதனால் இவ்வகை மொழிக் கற்றலில் ஆர்வம் அதிகரித்து வருகிறது எனக் குறிப்பிட்டு உள்ளது. கணினித் துணைக்கொண்டு மொழிக் கற்றலில் ஆசிரியருக்குப் பதிலாகக் கணினி பயன்படுத்தப்படுகிறது. மாணவர்கள் தாமாகவே மொழியினைக் கற்கின்றனர் எனக் கணினி துணையுடன் மொழிக்கற்றலைப் பற்றி காலந்தொட்டு அனைவரும் கருதினாலும் இக்கட்டுரை கணினித் துணைக்கொண்டு மொழிக் கற்பித்தலினால் ஆசிரியரின் கற்பிக்கும் திறன் எவ்வாறு வளர்ச்சியடைகிறது என எழுதியுள்ளார். கணினித் துணைக்கொண்டு மொழிக் கற்பித்தலினால் மொழித்திறன்களை வளர்த்து, உடனடியாக மீள்பார்வை செய்யமுடியும். தனிநபர் வேறுபாடுக்கிணங்க மொழியினைக் கற்றுக்கொள்ள முடியும் என்று கூறியுள்ளார்.

## இன்கிரஹாம்-புரூஸ், எமரி-கிரிஸ் (1991)

கணினித் துணைக்கொண்டு மொழிக் கற்பித்தலில் இடைத்தொடர்பு ஊடக அணுகுமுறையானது இங்கிலாந்தில் உயர்கல்வி மொழிக் கற்பித்தலில் எவ்வாறு பயன்படுத்தப்படுகிறது என்பதனை விவரித்து உள்ளார். நுண்கணினியின் பயன்பாடு, மென்பொருள் பாடத்திட்டங்கள் திரை வடிவமைப்பு, மனித–கணினி இடைத்தொடர்பு, கற்பவரைக் கட்டுப் படுத்துவதில் உள்ள பிரச்சனைகளை இக்கட்டுரை விளக்குகிறது.

### வெட்செல்-கீத் (1991)

1991ஆம் ஆண்டு எழுதிய கட்டுரையில் கணினி சார்ந்த மொழி அடையாளங்காணல், பாடப்பொருள்களின் மூலம் எதிர்கால வன்பொருள், மென்பொருளின் தன்மைகளை ஊகிக்கின்றனர். இக்கட்டுரையானது கணினியில் ஒளி, பேச்சு பயன்பாட்டுத் துணைக்கொண்டு மொழிக் கற்பித்தலை ஆரம்பநிலை, இடைநிலைப் பள்ளிகளில் எவ்வாறு திறம்பட மேற்கொள்ளலாம் எனவும், உடல் ஊனமுற்றோரைக் கருத்தில் கொண்டு கணினியின் பொத்தான்களில் செய்யக்கூடிய மாற்றங்களைப் பற்றியும் எழுதி உள்ளார்.

### ஃபிங்கல்-லீராய் (1991)

இவர்கள் எழுதிய புத்தகத்தில் ஆரம்பநிலை, கல்லூரிப் புத்தகத்தில் ஆரம்ப நிலை, கல்லூரி அளவில் கல்வி நுட்பத்தினைப் பற்றிய பாடத்தினை எவ்வாறு பயன்படுத்துவது எனக்குறிப்பிடப்பட்டுள்ளது. இப்புத்தகத்தில் பாடப்பொருள் கணினி துறையில் சிலர் எழுதிய கட்டுரைகள், மாணவர்களுக்கான செயல்பாடுகள் பற்றி எழுதப்பட்டுள்ளது. மேலும் இதில்,

1. கல்வி நுட்பத்தின் தோற்றம்.
2. கணினி கல்வியறிவாற்றலுக்கான வரையரைகள், அதனை எவ்வாறு அடைய வேண்டும்.
3. கல்வி நுட்பத்தை மொழிக் கற்பித்தல், அறிவியல், பிராந்திய மொழிக் கற்றல், சமூக அறிவியல், கணிதம் கற்றலுக்கு எவ்வாறு பயன்படுத்த வேண்டும்.
4. வன்பொருள், மென்பொருள் பற்றிய அடிப்படைத் தகவல்.
5. வளர்ந்து வரும் நுட்பங்களைப் பற்றிய தகவல்.
6. எதிர்காலத்தில் இத்துறையில் வரப்போகின்ற வளர்ச்சிகள் பற்றி குறிப்பிடப்பட்டு உள்ளது.

### வில்லெட்ஸ்-கேரன் (1992)

வில்லெட்ஸ்–கேரன் எழுதிய கட்டுரையில் கல்வி நுட்பத்தில் கணினியினைக் கொண்டு வகுப்பறைக்கு உள்ளும் வெளியும் எவ்வாறு இரண்டாம் மொழிக் கற்பித்தலைத் திறம்படச் செய்யலாம் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. அதில் கணினியில் பிற நுட்பங்களோடு இணைத்துத் தகவல் பரிமாற்றம், ஒளி, ஒலி துணைக்கொண்டு உரையாடல், தொலைதூரக் கணினி சேவை, உள்ளூர் சேவைகள் கொண்டு மொழி கற்பித்தலை மேம்பட செய்யலாம் எனவும் கணினி, கணினி சேவைகள் மூலமாக மொழித் திறன்களான வாசித்தல், எழுதுதல், திறன்களை ஊக்குவிக்கலாம் எனவும் கணினியில் ஒளி, ஒலி வசதிகளைச் சேர்ப்பதன் மூலமாக மாணவர்களிடையே கேட்டல் திறனை மேம்படுத்தலாம் எனவும், கணினியில் வெவ்வேறு நுட்பங்களைப் பயன்படுத்தி மொழி ஆற்றல், எழுதும், பேசும், கேட்கும், வாசிக்கும் திறன்கள், பண்பாடு விழிப்புணர்வை உண்டாக்கி சோதிக்கலாம் எனவும் குறிப்பிடப்பட்டுள்ளது.

மூன்றாவது அத்தியாயத்தில் மொழிக் கற்பித்தலுக்கென உள்ள வன்பொருள், மென்பொருள் பற்றிய விவரம் அளிக்கப்பட்டு உள்ளது. நான்காவது அத்தியாயத்தில் கணினியின் பயன்பாடுகள் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. ஐந்தாவது அத்தியாயத்தில் தகவல் நுட்பத்தைக் கொண்டு பின்வரும் காலங்களில் நவீன மொழிக் கற்பித்தல் எவ்வாறு நடைபெறும் என்பதனைப் பற்றிய குறிப்பு அளிக்கப்பட்டுள்ளது.

### லியோ, ஹிசென்-ஜின் (1992)

1992 இல் கல்வி நுட்பத்தினைக் கொண்டு இரண்டாம் மொழிக் கற்பித்தலைப் பற்றி எழுதியுள்ளனர். இரண்டாம் மொழிக் கற்றல் மாதிரிகள், அவை தொடர்பான ஆய்வுகளைப் பற்றி இக்கட்டுரையில் எழுதியுள்ளனர். கல்வி நுட்பத்தில் மூன்று அடிப்படை ஆராய்ச்சிகளாகக் கேள்விக் கேட்டலின் மூலம் கற்றல், கற்பித்தல்

வடிவத்திற்கான அமைப்பு அணுகுமுறை, கணினி வழி கற்றலுக்கான பாடத்திட்டப் பயன்பாடுப் பற்றி மேற்கொள்ளப்பட்டு இணைத்தொடர்பு திரையின் கோட்பாடு, பழக்கம், கற்பித்தல் வடிவத்தின் கல்வித் தளங்களைப் பற்றி விவரிக்கப்பட்டுள்ளது.

தாய்லாந்து நாட்டு தேசிய சியாக்ஷோ ஊஹா (Tsiag Hua) பல்கலைக்கழகத்தில் மேற்கொள்ளப்பட்டச் செயல்திட்ட முடிவுகளைக் கொண்டு ஆங்கிலத்தினை இரண்டாம் மொழியாகக் கற்பித்தலுக்கான இடைத்தொடர்பு திரை பாடத்திட்டத்தினை உருவாக்கும் முறை விவரிக்கப்பட்டுள்ளது. இதனை வகுப்பறையில் பயன்படுத்தும் முறை, பாடப்பொருளை மதிப்பிடும் முறை பற்றியும் குறிப்பிடப்பட்டுள்ளது.

## கேல்ம்-ஓர்லாண்டோ (1992)

கேல்ம்–ஓர்லாண்டோ என்பவர் பள்ளிகளில் பாரசீக மாணவர்கள் கணினிச் சேவைகளைக் கொண்டு வகுப்பறை விவாதங்களில் இரண்டாம் மொழி கற்பித்தலின்போது ஈடுபடுவதை உற்றுநோக்கி கண்காணித்தனர். இதன் முடிவறிக்கையில் கணினி வழி விவாதங்களின் மூலம் மாணவர் பங்கேற்பு அதிகரிக்கின்றது. அவர்களது பதட்டம் குறைந்து, மொழிக் கற்பித்தலில் ஏற்படும் தவறுகளை எளிதில் கண்டுபிடிக்க முடிந்தது என்றார்.

## கிரீஸ்ட்-கேரி, லோடர்-டேலட் (1993)

கிரீஸ்ட்–கேரி, லோடர்–டேலட் எழுதிய இரண்டு கட்டுரைகளுள் ஒன்றில் ஆக்கப்பூர்வச் சிந்தனைகளைப் பற்றியும், கணினியினை மொழிக் கற்பித்தலில் எழுதும் திறனை மேம்படுத்த பயன்படுத்துவதையும், இரண்டாவதில் ஆக்கப்பூர்வ சிந்தனைகள் மற்றும் ஆஸ்திரேலிய ஆரம்பப் பள்ளி கலைத்திட்டத்தை மாற்றி அமைக்க லேப்டாப் கணினிகளைப் பயன்படுத்தலின் மேம்பாடு பற்றிக் குறிப்பிட்டுள்ளனர்.

## பாவானினி பிட்ரோ (1993)

பாவானினி பிட்ரோ எழுதிய ஆய்வறிக்கையில் ஆசிரியர்களுக்குக் கணினி பற்றிய போதிய பயிற்சி இருந்தால் மட்டுமே அவர்களால் மாணவர்களின் கற்பித்தல் நோக்கங்களுக்கு இணங்கக் கற்பித்தல் பொருட்களை உருவாக்க முடியும் எனவும், அவ்வாறு பயிற்சிப் பெற்றால்தான் மொழிக் கற்பித்தலில் கணினியின் பயன்பாடு பொருத்தமுடையதாக இருக்கும் எனக் குறிப்பிடப்பட்டிருந்தது. இவ்வாய்வில் "இசைவழிச் சொற்களை உச்சரித்தல்" எனக் கணினியில் எளிதாகத் திறன் பெற்ற ஆசிரியரால் உருவாக்கப்பட்ட கற்பித்தல் திட்டம் பயன்படுத்தப்பட்டது. இப்பயிற்சியானது முழுமையாகக் கணினி வழிப்படுத்தப்பட்ட பயிற்சிகள், கதை வழிப் பயிற்சிகளில் இருந்து இரண்டு வழிகளில் வேறுபடுகின்றன.

1. மாணவர்கள் சொற்களைக் கேட்கும்போது அதனை எழுதுகின்றனர். அச்சொற்கள் கணினியில் காண்பிக்கப்படுவதற்கு முன்னர் அதனை ஊகிப்பதில்லை.
2. மாணவர்களின் பதிலைக் கணினி பதிவு செய்து அவ்விடையைச் 'சரி', 'தவறு' என மட்டும் கூறாமல், தவறுகளைப் புரிந்துக் கொள்ளும் வகையில் கூடுதல் உதவி புரிகிறது.

இவ்வாய்வுக் கட்டுரை எனவொரு "Bell : Capell" பாடலை, இரண்டாம் மொழியாக இத்தாலிய மொழியினைக் கொண்ட மாணவர்களுக்குக் கற்பித்தல் திட்டமாக வடிவமைக்கப்பட்டதை விளக்குகிறது. மாணவர்களிடமிருந்து பெறப்பட்ட பதில்கள் பகுப்பாய்வு செய்யப்பட்டு, கற்பித்தல் திட்டத்தின் செயல்பாடு பற்றிய கருத்துகள் சேகரிக்கப்பட்டன.

## கான்ராட், பிர்கிட், ராட்டென்ஹாஸ்ஹீக் (1994)

கான்ராட், பிர்கிட், ராட்டென்ஹாஸ்ஹீக் முதலானோர் கணினி அகராதிகளைக் கொண்டு இரண்டாம் மொழி கற்பித்தலை ஆய்வு செய்தனர்.

இவ்வாய்வில் ஜெர்மன் பள்ளியில் பயிலும் அமெரிக்க மாணவர்கள் அனுப்பிய மின் அஞ்சலில் இருந்த 401 ஆங்கில வரிகளைக் கணினி அகராதி மற்றும் பள்ளிகளில் எப்போதும் பயன்படுத்தப்படும் ஆங்கிலப் பாடநூலில் காணப்பட்ட 326 ஆங்கில வரிகளோடு ஒப்பிட்டனர். பகுப்பாய்வின் மூலமாக மாணவர்கள் வினைச் சொற்களை அதிகமாகவும், மொழியாற்றலில் தம்முடைய தனித் தன்மையினை வெளிப்படுத்தியிருப்பது தெரிந்தது.

**அல் அரிஷி, அலி யாஹ்யா (1994)**

அல் அரிஷி, அலி யாஹ்யா முதலானோர் தகவல் தொடர்பு மொழியினைக் கற்பித்தலில்
(Communicative Language Teaching) கற்பித்தல் நுட்பவியல், கருவிகள் எவ்வாறு துணை புரிகின்றன என்பது பற்றி இரண்டு முக்கிய அடிப்படை விஷயங்களை ஆய்வு செய்தனர். அவை:

1. மொழியினை உண்மையாகப் பயன்படுத்தும் விதம்.
2. கற்பவர் சார்ந்த கற்றலின் முக்கியத்துவம் கல்வி நுட்பத்தின் பயன்பாட்டினைச் சீரான அளவில் பயன்படுத்துவதன் மூலம் மொழியினைச் சிறப்பாகக் கற்பிக்க முடியும் என்பதனை ஆய்வு உறுதி செய்தது.

**டாடிகோவிக்-மரினா (1994)**

டாடிகோவிக்–மரினா 1994 ஆம் ஆண்டு புரிந்த ஆய்வின் அறிக்கையில் முற்காலக் கணினிவழி மொழிக்கற்றல் திட்டங்கள் அமைதியாகவும், திரையில் எழுத்துக்கள் தோன்றுவதை மட்டும் துணையாகக் கொண்டு கற்பித்தலாக இருந்தது எனக் குறிப்பிடுகின்றனர். நவீனக் கணினியில் ஒளி, ஒலி வரைபடக் கலைகளின் சேர்க்கையின் காரணமாக மொழிக் கற்பித்தல் சுலபமாகிறது. இதனால் கணினியைக் கொண்டு கற்பிக்கும் மொழி ஆசிரியர் மொழித்திறன் மிக்கவராக மட்டுமன்றி தாம்

கற்பிக்க நினைக்கும் பாடத்தைக் கணினி வழி வடிவமைப்பவராகவும் விளங்குகிறார். இதற்கென அவருக்கு வடிவமைக்கும் திறன், கணினி வழி மொழிக் கற்பித்தல் திறன் அவசியமாகிறது. அவர் வரைபடக்கலையில் நிபுணராக விளங்க வேண்டும். இவ்வாறு உருவாக்கப்படும் பல் ஊடகக் கணினி பாடத்திட்டம் புதிய முயற்சிகள், அவற்றின் பயன்பாடுகளுக்கு வழிவகுக்கிறது.

## மீயராபால் (1995)

மீயராபால் என்பவர் பிரிட்டன் நாட்டில் நவீன மொழிகளைப் பயிலும் கல்லூரி, பல்கலைக்கழக மாணவர்களிடையே நடத்திய புள்ளியியல் ஆய்வினைக் கொண்டு மூன்று அறிக்கைகளை அளித்தார். முதலாவதாக அளிக்கப்பட்ட ஆய்வறிக்கையில், மொழி கற்பித்தலில் நடைமுறை வகுப்பறை வழக்கங்களுள், மாணவர்கள் எவ்வாறு மொழி கற்றல் செயல்பாடுகளில் தங்கள் நேரங்களைச் செலவிடுகின்றனர். (உ.ம்: பிராந்திய மொழி விரிவுரைகளைக் கவனித்தல், மொழிபெயர்ப்புச் செய்தல், கணினி அல்லது மொழி ஆய்வகத்தைப் பயன்படுத்தல்) என்பவை போன்ற விவரங்கள் குறிப்பிடப்பட்டு இருந்தன. மாணவர்களிடம் அவர்கள் விரும்பி ரசித்தது. பயனுள்ளது எனக்கருதிய செயல்பாடுகள் பற்றிய விவரங்கள் சேகரிக்கப்பட்டன. மாணவர்களிடம் கருத்தாலோசனைகள் கேட்கப்பட்டன. இரண்டாவது அறிக்கையில் மாணவர்களின் மனப்பான்மையின்படி மொழியியல் பட்டதாரிகளுக்கு இருக்கவேண்டிய திறன்கள் (உ.ம்: சரளமாகப் பேசுதல், சிறப்புக் கட்டுரைகளை வாசித்தல்) பற்றியும் அவற்றைப் பெறும் விவரம் பற்றியும் தகவல்கள் திரட்டப்பட்டன.

ஆய்வின் முடிவுகள் மாணவர்களுக்குத் தேவைப்படும் திறன்களைப் பற்றி குறைவான கருத்து உடன்பாடும், தனிநபரின் மொழித்திறன் உயர்ந்த நம்பிக்கையும் உள்ளதை உணர முடிந்தது. மூன்றாவது அறிக்கையானது, வெளிநாட்டில் ஓராண்டு காலம் பயின்ற மொழியியல் பாடத்தின் உட்பொருள், அதன் மதிப்புணர்வு, பாடவேளை எவ்வாறு வகைப்படுத்தப்பட்டு செயல்படுத்தப்பட்டது, பிறமொழி பயன்பாட்டு

விதங்கள், பண்பாட்டு அறிவினைப் பெறல், தனிநபர் பயன்கள் பற்றிய விவரங்களைத் தருவனவாக இருந்தது.

**லீலுப், ஜுன் டபிள்யு பன்டேரியோ-ராபர்ட் (1995)**

லீலுப், ஜுன் டபிள்யு பன்டேரியோ–ராபர்ட் **1995**ஆம் ஆண்டு எழுதிய கட்டுரையில் பிராந்திய மொழிக் கற்பித்தல் அமைப்பினைப் (Foreign Language Forum Fletch) பற்றிக் குறிப்பிடுகின்றனர். இவ்வமைப்பினைப் பற்றிய தகவல் Buffalo நியூயார்க் மாநில பல்கலைக்கழகக் கணினி உள்ள Listserv கணினி இணையதளச் சேவையில் அளிக்கப்பட்டுள்ளது. இவ்வமைப்பின் மூலமாக ஆரம்பநிலை, இடைநிலை, உயர்நிலை, மேல்நிலைப்பள்ளி மொழி ஆசிரியர்களுக்கு இடையே தகவல் பரிமாற்றம் நடைபெறும். இதன் மூலமாக அவர்களுக்கு மொழிக் கற்பித்தலுக்காகத் தம்மைத் தயார் நிலையில் வைத்துக்கொள்ள பயிற்சி அளிக்கப்படுகிறது.

**அபுசிலிக், அலிஃபர்ஹான் (2007)**

அபுசிலிக், அலிஃபர்ஹான் எழுதிய ஆய்வறிக்கையில் கணினி துணைக்கொண்டு ஒருங்கிணைந்து, குழுவினராகக் கற்றலின் மூலமாக மொழிக் கற்பித்தல் கற்றல் எவ்வாறு திறம்பட நடந்தது என்பதனைப் பற்றி குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும் கணினி துணைக்கொண்டு மொழிக் கற்றலைக் குறித்த மாணவர் மனப்போக்கு, வாய்மொழித் திறன்களைக் கற்பித்தலுக்கான நுட்பங்களைப் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்வாய்வில் நான்கு சிறு குழுக்கள் எடுத்துக் கொள்ளப்பட்டன. ஒரு குழுவினருக்கு தாய்மொழி திறன்களை ஒருங்கிணைந்து கணினி வழிக் கற்பித்தல் மூலமாகக் கற்பிக்கப்பட்டது. இரண்டாவது குழுவினருக்குக் குழு முறை கணினி துணைக்கொண்டு கற்பிக்கப்பட்டது. மூன்றாவது குழுவினருக்கு ஒருங்கிணைந்து பாரம்பரியமாகக் கற்பிக்கும் முறைக் கொண்டும், நான்காவது குழுவினருக்கு குழுமுறையில்

பாரம்பரியமாக கற்பிக்கும் முறைக்கொண்டும் கற்பிக்கப்பட்டது. இவ்வாய்வில் கணினி துணைக்கொண்டு ஒருங்கிணைந்து கற்பித்தல், குழுவினராகக் கற்பித்தல் என இரண்டு முறைகளும் திறம் மிக்கதாக நிரூபிக்கப்பட்டது.

**சப்யசாஷி பட்டாச்சார்யா (2008) ரவீந்திரநாத் தாகூரின் கல்விப் பார்வை**

சப்யசாஷி பட்டாச்சார்யா ரவீந்திரநாத் தாகூரின் கல்விப் பார்வை அவர்களின் கூற்றுப்படி தாய்மொழியை இந்தியச் சமூகம் புத்துயிர் பெற்றெழுவதன் சின்னமாக இந்தியா ஆக்க வேண்டும் என குருதேவர் வலியுறுத்தினார். தாய்மொழி அரியணையில் அமர்த்தப்பட வேண்டும். அதன் பொருள் நம்முடைய சுயகெளரவம் மீட்கப்பட வேண்டும்.சென்ற இடமெல்லாம் இதையே கூறினார். பல நூறு தடவை எழுதினார். கற்றோர் அவையில், பல்கலைக் கழகங்களில், பட்டமளிப்பு விழாப் பேருரைகளில் தாய்மொழியையே பயன்படுத்தியவர் அவர். அவர் வாழ்ந்தபோது அவரளவு மதிக்கப்பெற்ற இந்தியர் சிலரே. ஆயினும் தாய்மொழிக்கு உரிய இடம் கேட்டுப் போராடிய முதல்வர் அல்லது முன்னோடிகளில் முதல்வர் அவர்தான். "தன் மீது நம்பிக்கையில்லாத ஒரு நாடு தலைநிமிர முடியாது. சரிநிகர் உணர்வு பெறாத மக்கள் துன்புறுவர். தன் தாய்மொழிப் பற்றிய பெருமிதணர்வும் நம்பிக்கையும் கொள்வோர் – தன்னம்பிக்கையுடையோராக வளர்வர். தன் ஆற்றலில் நம்பிக்கை கொண்டோராக அவர்கள் சிறப்பர்" எனத் தாகூர் கூறினார்.

**பேராசிரியர் சோ. சந்திரசேகரன் (2009) இலங்கையின் உயர்கல்வியின் எதிர்காலம்**

பேராசிரியர் சோ. சந்திரசேகரன் அவர்கள் இலங்கையின் உயர்கல்வி முறையானது காலங்காலமாக நாட்டின் உயர்மட்டமனிதவளத்தை உருவாக்கிப் மருத்துவர்கள், பொறியாளர்கள், நிர்வாகிகள், ஆசிரியர்கள், விஞ்ஞானிகள்,

வழக்கறிஞர்கள் போன்றோருக்கு பயிற்சி வழங்கி வந்துள்ளது. அத்துடன், சமூகத்தில் உருவாகும் உயர்கல்விக்கான கேள்வியை நிறைவு செய்தல், உயர்தர அறிவைக் கற்பித்தல், ஆராய்ச்சிப் பணி என்பன மரபு வழியான உயர்கல்விப் பணிகளாக இருந்து வந்தன. தற்போது கற்பித்தலில் ஆய்வுகளை மேற்கொண்டு வருகின்றனர். இதே போன்று தமிழ்நாட்டிலும் உயர்கல்வியில் கற்பித்தல் மூலமாகத் தாய்மொழி பாடத்திட்டத்தினை அனைத்துத் துறைகளிலும் மேற்கொள்ள வேண்டும்.

**பேராசிரியர் முனைவர் சபா. ஜெயராசா (2009) தாய்மொழியில் தனித்துவம்**

பேராசிரியர் முனைவர் சபா. ஜெயராசா அவர்களின் கூற்றுப்படி, ஒருவருக்குரிய இனத்துவ அடையாளங்களையும், பண்பாட்டு அடையாளங்களையும் அவருக்குரிய தாய்மொழியே தாங்கி நிற்பதனால் அவரிடமிருந்து தாய்மொழியைப் பிரித்தெடுத்தல் மனித மாண்பையும், உரிமையையும் மீறும் செயலாக அமையும்.

இதனால் தாய்மொழியே தன்னியல் நிறைவை நோக்கிய அசைவியத்தை முன்னெழுக்கவல்லது.

**பேராசிரியர் முனைவர் சபா. ஜெயராசா (2009) கல்வியும் சமூக மொழியியலும்**

பேராசிரியர் முனைவர் சபா. ஜெயராசா அவர்களின் உரைப்படி, இனக்குழும அடையாளத்தைக் கண்டறிவதற்கும் மொழியே வலுவான காரணமாக அமைகின்றது. அது அந்த மொழியைப்பேசும் இனக்குழுமத்தின், மீது விடுவிக்கப்படும் தாக்குதலாகக் கருதப்படுமளவுக்கு மொழியும் இனக்குழும அடையாளமும் ஒன்றிணைந்துள்ளன. இந்நிலையில் மொழி வெறுமனே தொடர்புச்சாதனம் என்ற நிலையையும் கடந்த ஆழ்ந்த சுவடுகளைக் கொண்டிருத்தல் குறிப்பிடத்தக்கது. அந்நிலையில் குறித்த இனக்குழுமத்தினர் தமது மொழி பழமையானதென்றும் அழகு

மிக்கதென்றும் மேலானது என்றும் கருதுதலை வெறும் பாமர (Folk) அணுகுமுறை என்றும் சுருக்கியோ, குறுக்கியோ கூறிவிட முடியாது.

இடைவிலகல் மற்றும் தாழ் அடைவுகளைப் பெறுதல் முதலிய செயற்பாடுகள் அடிநிலை மாந்தர்களது சிறார்களிடத்து மிகையாகக் காணப்படுகின்றன. கற்பித்தல் மொழியில் அன்னியப்பாடு காணப்படுதலும் இதற்குரிய காரணிகளுள் ஒன்றாகும். அதாவது சிறாருடன் இயைபு கொண்ட தாய்மொழிக்கும், அவர்களுக்கு வழங்கப்படும் கற்பித்தல் மொழிக்குமிடையே இசைவுப் பிறழ்வு காணப்படுமாயின் கற்றலிலே பின்னடைவுகள் எதிர்நோக்கப்படும்.

## பேராசிரியர் முனைவர் சபா. ஜெயராசா (2009) மொழி கற்பித்தலும் சீர்மிகு நுட்பங்களும்

சீர்மியத்திலே பல வகையான நுட்பவியல்கள் இருந்தாலும் இவர் கார்ல்ரெஜர்ஸ் அவர்களின் நுட்பவியலையே தெரிந்தெடுத்துப் பயன்படுத்தலானார். சீர்மியர் சீர்மிய நாடியை ஒத்துணர்வுடன் விளக்கிக் கொள்ளல் (Empathetic Understanding) இங்கே முதற்கண் முன்னெடுக்கப்படுகின்றது. ஆசிரியர் சீர்மியராகவும் மாணவர் சீர்மிய நாடியாகவும் தொழிற்பாட்டு மொழியைக் கற்றுக் கொள்ளும் நடவடிக்கைகள் முன்னெடுக்கப்படும். ஆசிரியர் – மாணவர் என்ற பாரம்பரியமான தொடர்புகளில் இருந்து விடுபட்டு "சீர்மிய நாடி" என்ற புதிய தொடர்பும் இசைவும் மாணவரால் மேற்கொள்ளப்படும். சீர்மியச் செயற்பாட்டுக்கும் இங்கு மேற்கொள்ளப்படும் கற்பித்தலுக்குமிடையேயுள்ள ஒப்புகைகள் வருமாறு.

1. சீர்மியரும் சீர்மிய நாடியும் சீர்மியத்துக்கு மனமுவந்து இணக்க முறுவர் – வகுப்பறையில் அறிவு பெற்றுவரும் கற்பவரும் மொழி கற்பதற்கு மனமுவந்து இணங்கிக்கொள்வர்.

2. சீர்மியநாடி மனவெழுச்சி கலந்த மொழியில் தமது பிரச்சனைகளை வெளியிடுவர் – கற்பவர் அறிவு பெற்றவருக்கு கற்றல் தொடர்பான தனது செய்தியை உணர்ச்சி கலந்த நிலையில் அறிக்கை செய்வார்.
3. சீர்மியர் ஆழ்ந்து செவிட்டுப்பார் – அறிவு பெற்றவர்கள் அறிவு தேடுவோர் கூறுபவற்றை ஆழ்ந்து செவி மடுப்பார்.
4. சீர்மியர் சீர்மிய நாடியின் செய்திகளை அவரால் அறிக்கைப் படுத்தப்படக்கூடிய மொழியில் மீளவுரைப்பர் – அறிவு பெற்றோர் அறிவு தேடுவோரின் கருத்துக்களை அவர்களுக்குரிய மொழியிலே மீளளிக்கை செய்வர்.
5. சீர்மிய நாடி சீர்மியர் வழங்கிய செய்திகளின் சரியமைவை (Accuracy) மதிப்பீடு செய்வர் – அறிவு தேடுவோர் அறிவு பெற்றோர் வழங்கிய செய்திகளைத் தமது மொழியில் மீளவுரைப்பர்.
6. சீர்மிய நிகழ்ச்சியின் இடைவினைகள் மீது தெறித்தலை மேற்கொள்வர் – மொழி கற்றல் வகுப்பில் நிகழ்ந்த கருத்துப் பரிமாற்றங்களையும் செய்திகளையும் கற்போர் தெறித்துக் காட்டுவர்.

இக்கற்பித்தல் முறையில் மனவெழுச்சியும் உணர்ச்சியும் கலந்த நிலையில் மாணவர்கள் முழுமையான காட்சிக்கு உட்படுத்தப்படுவதுடன் அவர்களின் மொழித்திறன் ஆளும் நடத்தைத்திறன்களும் முழுமையாக நோக்கப்படுகின்றன.

## பேராசிரியர் முனைவர் சபா. ஜெயராசா (2009)

பேராசிரியர் முனைவர் சபா. ஜெயராசா என்பவர் பாடநூல்கள் இங்கே முக்கியம் பெறுவதில்லை. ஏனெனில் அவை மொழி தொடர்பான ஒரு திணிப்பு நடவடிக்கையையே மேற்கொள்கின்றன.மாணவர் குழுவாக இருந்து தாம் கற்றுக் கொள்வதற்குரிய சாதனங்களைத் தாமே தயாரித்துக் கொள்ளல் வேண்டும். மாணவர்களுக்காகவே சாதனங்கள் அன்றி, சாதனங்களுக்காக மாணவர்கள் அல்லர் என்பது இங்கு முன்னெடுக்கப்படும் என்பார்.

கற்றலை மாணவரின் உணர்வுகளுடனும், செயற்பாடுகளுடனும், சீர்மியத்துடனும் ஒன்றிணைக்கும் பாங்கிகள் தமிழர்களது கல்வி மரபிலே காணப்பட்ட ஒரு தோற்றப்பாடாகும். தமிழர்களது சீர்மிய நடவடிக்கையோடு இணைந்த கற்பித்தல் நடவடிக்கைகள் சடங்குகளோடு ஐந்து பூதங்களோடு இசைவு கொண்டு வாழ்தலோடும் தொடர்புபட்டிருந்தன. கற்றல் கற்பித்தலோடு சீர்மியத்தை இணைத்தல் ஒரு புதிய தரிசனம் அன்று. ஆனால் மேலைப்புலத்தில் இது வரன்முறையான ஆய்வுகளுக்கு உட்படுத்தப்பட்டுக் கட்டமைப்புச் செய்யப்பட்டுள்ளது.

**கோவார்ட் காட்னர் - மொழிக்கலைகளும் கற்பித்தல் அணுகுமுறைகளும்**

மொழிக்கலைகள் கற்பித்தலைப் பன்முக நுண்மதிகளுடன் தொடர்புபடுத்தி ஆராயப்படுதலும் உண்டு. நுண்மதி என்பது தனித்துக் காரணங் காணுதலுடன் மட்டும் தொடர்புடையதன்று என கோவார்ட் காட்னர் (Howard Gardner) விளக்கினார். ஏழு விதமான நுண்மதித் திறன்கள் அவரால் இனங்காணப்பட்டன.

1. மொழி சார்ந்த நுண்மதி
2. இசை சார்ந்த நுண்மதி
3. அளவை மற்றும் கணிதவியல் நுண்மதி
4. விசும்பு சார்ந்த நுண்மதி
5. உடல் மற்றும் உடலியக்க நுண்மதி
6. நுன்னுணர்வு அறியும் நுண்மதி
7. ஆளடைத் தொடர்பாடல் நுண்மதி

மேற்குறிப்பிட்ட நுண்மதிப் பரிமாணங்களை அடியொற்றி மொழிக்கலைகளைக் கற்பித்தல் பயன்மிகு விளைவுகளை ஏற்படுத்த வல்லவையாக அமையும்.

இலக்கணம் கற்பிக்கப்படும் பொழுது சிறிய பாடப்பரப்புகளாக (Mini Lesson) கற்பிப்பதே சிறந்த அணுகுமுறையாகும். மாணவர்களின் மொழிக்களஞ்சியத்தை அடிப்படையாகக் கொண்டே விளக்கங்களையும், எடுத்துக்காட்டலையும் தருதல்

வேண்டும். மொழிக்கலைகளைக் கற்பித்தல் பன்முகப்படுத்தப்பட்ட முறைமைகளை நோக்கி நகர்த்தப்பட வேண்டியுள்ளது.

**குளோறியாராரி (2009)**

அவுஸ்திரேலியா, நியுகினி மற்றும் பசுபிக் பிரதேசங்களில் சந்தர்ப்ப மொழி கற்பித்தல் தொடர்பான பொருத்தமான கற்பித்தற் சாதனங்களைக் குளோறியாராரி உருவாக்கியுள்ளார். அச்சாதனங்கள் ராரி சாதனங்கள் என அழைக்கப்படுகின்றன. சந்தர்ப்பநிலை மொழி கற்பித்தல் பேச்சுமொழிப் பயிற்சியுடன் ஆரம்பிப்பதால் சாதனங்களும் பேச்சு வடிவை முதன்மைப்படுத்தித் தயாரிக்கப்பட்டுள்ளன.

உலகளாவிய நிலையில் இடப்பெயர்ச்சிகளும் மக்கள் நுகர்வுகளும் பன்முகப்பட்ட ஆய்வுகளைத் தூண்டி வருகின்றன. அவற்றின் பெறும் பேறாகப் புதிய கண்டுபிடிப்புக்கள் ஆக்கம் பெறுகின்றன.

விண்டி, துலங்கல், மீள வலியுறுத்தல் என்ற பொறி முறையான செயற்பாடுகளுக்குள் மட்டும் மொழி கட்டுண்டு கிடப்பதில்லை. மொழியின் அறிவைத் தொழிற்பாட்டையும், கற்பனை இயக்க நுண்முறைகளையும் நடத்தைவாதிகள் ஆழ்ந்து பரிசீலிக்கவில்லை என்ற திறனாய்வும் முன்வைக்கப்பட்டுள்ளது. கற்பித்தலில் ஒலிமொழி முறைமைப் பாலர் கல்வியில் வளமான துலங்களை ஏற்படுத்துதல் கண்டறியப்பட்டுள்ளது.

**மகாத்மாகாந்தி - கல்விச் சிந்தனைகள்**

உடல், உள்ளம், ஆன்மா என்று மூன்றும் ஒரு சேர வளரும் வாய்ப்பை நம்முடைய கல்வித்திட்டம் ஏற்படுத்த வேண்டும். அதேபோல ஆரம்பக்கல்வி நிச்சயமாகத் தாய்மொழி மூலமாகத்தான் இருக்க வேண்டும் என்பதில் உறுதியாக இருந்தார். ஆங்கில வழிக்கல்வி நம் அடிப்படையானதைச் சமூகக் கட்டுமானங்களைத் தகர்த்து எரிந்துவிடும் என்பதை அன்றே நமக்கு எச்சரித்தார். ஆங்கில வழிக்கல்வி என்னவெல்லாம் செய்யும் என்பதை இப்போது நாம் நிதர்சனமாகக் காண்கிறோம். அதேபோல, ஆசிரியர்கள், தங்களுடைய

ஆளுமையால் மாணவர்களைத் தங்கள் கட்டுப்பாட்டில் வைத்து அவர்களுக்கு நல்ல வழிகாட்டியாக வாழ்ந்து தங்களுடைய பணியை மேற்கொள்ள வேண்டும் என்று வலியுறுத்தினர்.

தாய்மொழியைப் பொறுத்தவரை "மொழி இயலாமை" என்ற பேச்சுக்கே இடமில்லை. பிறமொழி ஒன்றைப் பயிற்று மொழியாக்கும்பொழுது மனந்திலமையும் கருத்துகளுக்கு மொழி வடிவம் கொடுக்கும்பொழுது சில சமயங்களிலே இயலாமை நிலையும், இடறல் நிலையும் ஏற்படும். இந்த அவலங்கள் தாய்மொழியைப் பயிற்று மொழியாகக் கொள்ளும்பொழுது, ஏற்படுவதற்கு வாய்ப்பில்லை. தாய்மொழி இயலுமையை (Fluency) உள்ளடக்கிய மொழியாகும்.

தாய்மொழியுடன் உறுபற்று என்பது கலந்திருக்கும். தாய் தந்தையர் பேசும்மொழி, உறவினர் பேசும் மொழி, அவர்களுக்கு அளிக்கப்படும் நூல்கள் மற்றும் எழுத்தாக்கங்கள் என்ற அடிப்படைகளிலே உறுபற்று வளர்ந்து செல்லும். இந்த உறுபற்று உளவியல் சார்ந்த மனநிறைவை வழங்குவதாகவும், கடந்த காலங்களை மீட்டெடுப்பதன் வாயிலாக உளத்திருப்தியைத் தருவதாகவும் அமையும்.

இதனால் தாய்மொழியே தன்னியல் நிறைவை நோக்கிய அசைவியத்தை முன்னெடுக்கவல்லது.

**பேராசிரியர் சோ. சந்திரசேகரன் (2000) முன்பள்ளிக் கல்வியின் உலகளாவிய முக்கியத்துவம்**

பேராசிரியர் சோ. சந்திரசேகரன் அவர்கள் 2000ஆம் ஆண்டில் அமெரிக்காவில் செய்யப்பட்ட சில ஆய்வுகளின் படி இளம்பிள்ளைகள் கற்பதற்கான ஆற்றல் படைத்தவர்கள் எனக் கண்டறியப்பட்டது. பழமையான அமெரிக்கச் சிந்தனை சற்று மாறுபட்டது. பழைய சிந்தனையின்படி, முன் பள்ளிக் கல்வியானது, சமூகச் சமயமாக்கலைப் பிரதான பணியாகக் கொண்டது. அதாவது சகபாடிகள்

மற்றும் குடும்பத்தொடர் மற்றவர்களுடன் பழகும் முறையைப் பயிற்றுவதே முன் பள்ளிக்கல்வி. ஆனால் புதிய ஆய்வுகளின் படி முதல் ஐந்து ஆண்டுகளில் பிள்ளைகளின் சமூகத் தேர்ச்சி, மொழி ஆற்றல், எண்ணக்கருவாக்க ஆற்றல் என்பன அதிக அளவில் விருத்தியாகின்றன. (தேசிய ஆராய்ச்சிக்கழகம் ஆய்வுகள்)

## மிரியம் (1920)

மிரியம் அவர்கள் 1920 ஆம் ஆண்டிலிருந்து, படிக்கக் கற்பிப்பதில் ஒழுங்கு குறைந்ததும், மந்தத்தன்மை குறைந்ததுமான முறைகள் நாடப்பட்டன. மிரியம் இரண்டு கருத்துக்களை அறிவித்துள்ளார். ஒன்று படிக்கக் கற்பிப்பதற்கு மிகச் சிறந்த வழி படிக்கக் கற்பிப்பதன்று. படிக்கும் செயல் நிகழ்வதற்கு ஏற்ற சூழ்நிலையினை அமைத்துத் தருவதேயாம் என்பது. இரண்டாவது, கற்றுக் கொள்வதற்கு மாணவர்களைப் படிக்க விடுங்கள், தற்செயலாகவே அவர்கள் படிப்பதற்குக் கற்றுக் கொள்வார்கள் என்பது. மேலும் படிப்பதில் ஒழுங்கான பயிற்சியைப் பெற்ற பொதுப்பள்ளி மாணவர்களை விடத் தாம் கூறிய மேற்கொண்ட நோக்கங்களோடு கற்பிக்கப்பட்ட மாணவர்கள் மிக விரைவான முன்னேற்றத்தை அடைந்தனர் என்பதற்குச் சான்றும் காட்டினார். துர்திஷ்டவசமாக இவ்வாராய்ச்சியில் ஈடுபட்ட இருவகை மாணவர்களின் சூழ்நிலை, மனவலிமை, ஆசிரியர்களுடைய திறமை, கற்கும் சூழ்நிலையின் தன்மை ஆகியவற்றைப் பற்றி குறிப்புகள் எதுவும் இல்லாமல் போய்விட்டது. இந்தக் குறிப்புகள் எல்லாம் இவ்வகை ஆராய்ச்சிக்கு இன்றியமையாதனவாகும். ஏனெனில் சோதனைக்குள்ளான மாணவர் குழுவினர் ஒரு பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த சோதனைக்குப் பயின்றவராவர்.

## டிக்சன், மாக்லீன் (1929)

டிக்சன், மாக்லீன் ஆகிய இருவரும், பன்னோக்குச் செயல் திட்டத்தின் ஒரு பாகமாக மாணவர்க்குப் படிக்கப் பயிற்சி அளிக்கப்பட்ட போது, படிக்கக்

கற்றுக்கொள்வதில் 31 குழந்தைகள் அடைந்த முன்னேற்றத்தை அளந்தனர். மொத்தத்தில் அக்குழந்தைகளின் தொகுதி, படிப்புச் சோதனையில் பெற்ற மதிப்பெண்கள் மிகவும் திருப்தி அளிக்கக்கூடியவையாக இருந்தன. இருப்பினும், குழந்தைகள் தாம் பெற்ற முன்னேற்ற அளவில் பெரிதும் வேறுபட்டனர். சோதனை முடிவுகளையும் மற்ற செய்திகளையும் சீர்தூக்கிப் பார்த்தபோது உளவயதும் மிகப்பரந்த அனுபவப் பின்னணியுமே முன்னேற்றத்தைப் பெரிதும் பாதிக்கின்றன என்பதை விளக்கினர்.

## லீ (1933)

லீ என்பவர் முதல் வகுப்பு மாணவர்கட்குப் படிக்கக் கற்பிப்பதில் 'செயல்' திட்டங்களின் பயனை விரிவான முறையில் ஆராய்ந்தார். லீகிளார்க் படிப்புச் சோதனை கலிபோர்னியா மாநிலத்தின் எல்லாப் பகுதியிலும் உள்ள 11167 மாணவர்கட்கும் தரப்பட்டது. நாட்டுப்புறத்தில் உள்ள ஓரறைக் கிராமப் பள்ளியிலிருந்து, பல வகுப்புகள் உள்ள நகர்ப்புற உயர்பள்ளிகள் வரை, எல்லாப் பள்ளிகளும் இவ்வாராய்ச்சிக்கு எடுத்துக் கொள்ளப்பட்டன. வெவ்வேறான வகுப்புகளிலிருந்து ஆராய்ச்சி முடிவுகள் திரட்டப்பட்டன. இதோடு, வகுப்பின் அளவு, அறையில் நடத்தப்பெறும் வகுப்புகளது எண்ணிக்கை, பயன்படுத்திக் கொள்ளப்பட்ட துணைக்கருவிகளின் வகைகள், செய்து முடிக்கப்பட்ட செயல்களின் அளவு ஆகியவற்றைப் பற்றிய செய்திகளும் சேர்த்துக் கொள்ளப்பட்டன. இவ்வாராய்ச்சியிலிருந்து வகுப்பறையில் இருந்து கொண்டு பல்வேறு செயல்களில் ஈடுபடுகின்ற மாணவர்கள் மற்ற மாணவர்களைப் போன்று அவ்வளவு நன்றாகப் படிக்கக் கற்றுக் கொள்வதில்லை எனக் கண்டறிந்தனர். வேறுவகைப் பள்ளி வேளைகளில் அடைந்த முன்னேற்றம் அளக்கப்படவில்லை. படிப்பதன் ஒரு சில கூறுபாடுகளில் ஏற்பட்ட முன்னேற்றத்தை மட்டும் படிப்புச் சோதனைகள் அளந்தன. இக்குறைகள் இவ்வாராய்ச்சியில் இருந்தன என்று ஏற்றுக் கொள்ளப்பட்டது. ஆகவே,

லீ என்பவர் இருவகைப் பயிற்று முறைகளின் ஒப்புத்திறனைப் பற்றி முடிவுகளை விரிந்த மதிப்பீட்டுத் திட்டங்களின் மூலம் மட்டுமே அடைய முடியும் என்று குறிப்பிட்டுள்ளார்.

## ட்ராக்ஸ்லர், டவுன்செண்ட் (1946)

ட்ராக்ஸ்லர், டவுன்செண்ட் ஆகிய இருவரும் 1940க்கும் 1945க்கும் இடையே நடத்தப்பட்ட ஆராய்ச்சிகளின் முடிவுகளைப் பரிசீலித்தனர். இவற்றுள் இரண்டு ஆய்வுகள் மிகத் தெளிவாக ஒரு கருத்தினை வெளிப்படுத்துகின்றன. அதாவது செயல் திட்டத்தின் வாயிலாகப் படிக்கக் கற்பிக்கப்பட்ட மாணவர்கள், மேல் வகுப்புகளை அடைவதற்குள், அவர்கள் படிக்கும் திறமையில் பிற முறைகளால் கற்பிக்கப்பட்ட மாணவர்களுக்குச் சமமாகி விடுகின்றனர். அல்லது அவர்களையும் மிஞ்சி விடுகின்றனர் என்பதாம். மற்றுமோர் ஆராய்ச்சி; உரிமைகள் குறைந்த இல்லங்களிலிருந்து வருகிற மந்த அறிவுடைய சாதாரண மாணவர்களும், ஒழுங்காகப் பள்ளி செல்லும் மாணவர்கள் அடையும் அதே அளவு முன்னேற்றத்தை அடைகின்றனர் என்பதைக் காட்டிற்று. கிடைக்கக்கூடிய சான்றுகளை வைத்துக் கொண்டு ட்ராக்ஸ்லர் டவுன் செண்ட் ஆகிய இருவரும், படிப்பு வளர்ச்சியில் பழைய மரபுத் திட்டங்களை விடச் செயல் திட்டங்கள் அதிகமாக விரும்பத்தக்கச் செல்வாக்கை வகிக்கின்றன என்பதற்குரிய சான்று மிகவும் தெளிவாக இல்லை என்றாலும், இவ்வெல்லா ஆராய்ச்சிகளின் போக்கும் செயல்திட்டங்களுக்குச் சிறிதளவு சாதகமாக உள்ளது தெளிவு என்ற முடிவினை அளித்துள்ளனர்.

## ரைட்ஸ்டோன் (1951)

பல்லாண்டு காலமாகச் செயல் திட்டங்களை வன்மையாக ஆதரித்து வந்த ரைட்ஸ்டோன் என்பவர், 1951 இல் கீழ்க்காணும் முடிவுகளுக்கு வந்தார். ஆராய்ச்சியிலிருந்து பெற்ற சான்றிலிருந்து உண்மையான பிரசசனை, விவாதத்திற்கு

உட்பட்ட இவ்விரு வழிமுறைகளில் எது மேலானது என்பதன்று. படிப்பதில் ஏற்படும் வளர்ச்சியில் ஒவ்வொன்றும் எப்படித் துணை செய்கிறது என்பதே ஆகும். இந்த நோக்கத்தோடு சான்றினைப் பரிசீலிக்கும் போது இருமுறைகளும் படிப்பதில் அடிப்படை அறிவினையும் திறன்களையும் வளர்ப்பதற்குத் துணை செய்கின்றன. மாணவர்களின் ஆர்வத்தை எழுப்பவும் படிப்பதற்குச் சாதகமான எண்ணப் போக்குகளை வளர்க்கவும், அவர்களின் அனுபவங்களை மிகுதியாக்கவும், அனுபவ அடிப்படையில் உருவான பட அட்டைகள் மிகவும் பயன் அளிக்கக்கூடியவையாக உள்ளன. (அடிப்படைச் சுவடிகள், ஆராய்ச்சி முடிவுகளுக்கு இணங்கப் படிக்கும் எண்ணப் போக்குகளையும் திறன்களையும் வளர்க்கின்றன என்பதை அவர் ஏற்கனவே குறிப்பிட்டுள்ளார்) மொத்தப் படிப்புத் திட்டமானது, கற்பிப்பதில் இருமுறைகளையும் பின்பற்ற வேண்டும் என்றும் அவர் கருதினார்.

இதிலிருந்து கீழ்வரும் முடிவுக்கு நாம் வரலாம். படிக்கக் கற்பிக்கும் குறிப்பிட்ட முறைகளின் தாரதம்மியங்களைச் சோதித்து ஆராய்ந்த ஆராய்ச்சி, முடிவாக எந்த முறை மிகச் சிறந்தது எனக் காட்டவில்லை. அதற்கு மாறாகச் சில முறைகள், படித்தலின் ஒருசில கூறுபாடுகளில் முன்னேற்றத்தை மிகுதியாக்குகின்றன. மற்ற முறைகள், இன்னும் வேறுசில கூறுபாடுகளில் முன்னேற்றத்தை மிகுதியாக்குகின்றன என்பதையே அம்முடிவுகள் குறிக்கின்றன. பென்சில்வேனியாவில் 55 வகுப்பறைகளில் பல்வேறு வகையான முறைகளில் கற்பிக்கப்பட்ட மாணவர்கள் அடைந்த பயனை ஆராய்ந்த சீகர்ஸ் அவர்கள் குறிப்பிட்டுள்ளதைப் போல எந்த ஒரு முறையும் முழுவதும் திறன் படைத்ததாகவோ, முழுதும் திறன் அற்றதாகவோ இல்லை. ஒவ்வொன்றிலும் நன்மைகள் உள்ளன, குறைபாடுகளும் உள்ளன. இம்முடிவுகள் படிப்பதில் கூறுபாடுகளுக்கும் எந்தெந்த கூறுபாடுகளில் வளர்ச்சி விரும்பப்படுகிறதோ, அந்தந்தக் கூறுபாடுகளை வரையறுத்துக் கொள்ள முதலில் முக்கியம் என்பதையும், அதன் பிறகே வளர்ச்சியை

அளக்க வேண்டும் என்பதையும் சுட்டின. இங்கு பரிசீலிக்கப்பட்ட ஆராய்ச்சிகள் பெரும்பாலும் குழந்தைகளைக் கொண்டு செய்யப்பட்டவை. அதுவும் அல்லாமல் ஆங்கிலம் பேசப்படும் நாடுகளிலேயே நடத்தப்பட்டவை; மற்ற மொழிகளில் அவ்வாராய்ச்சிகளோடு தொடர்பு கொண்டு நடத்தப்பட்ட ஆய்வுகள், அடுத்த பிரிவில் குறிப்பிடப்படும்.

## ஃப்ரீகெட், ஹில்ட்ரெத், ஃபெர்னால்டு (1936)

மொழிக் கலைகளில் வல்ல அனைவருமே படித்தலையும் எழுதுதலையும் ஒரே சமயத்தில் கற்பிக்க வேண்டுமென்பதை ஒரு முகமாக ஆதரிக்கின்றனர். ஒன்றில் உண்டாகும் முன்னேற்றமானது மற்றொன்றின் முன்னேற்றத்திற்குத் துணையாகிறதென்று அவர்கள் கூறுகின்றனர். சொற்களை எழுதுவதானது, அவற்றின் நுணுக்கங்களில் கவனம் செல்ல வழிகோலுகிறது. ஒரு சொல்லை மற்றொரு சொல்லிலிருந்து பிரித்தறியவும் படிக்கும் சொல் தொகுதியை வளர்க்கவும் அது துணை செய்கிறது. ஃப்ரீநெட் என்பவர் படித்தற்குரிய பக்குவத்தை வளர்க்கவும், படிப்பதில் முன்னேற்றத்தை விரைவுபடுத்தவும் எழுதுவது ஒரு சிறந்த துணைக்கருவியாக விளங்குகிறது என்பதற்குச் சான்று தந்துள்ளார். ஹில்ட்ரெத் என்பவர் பல புறநோக்கு ஆராய்ச்சிகளைத் தொகுத்துரைத்த பின், எழுதுவதானது சொல்லை அடையாளம் காணும் ஆற்றலையும், சொற்றொடர் அறிவையும், வண்மையாக்குகிறது. சொற்களின் சிறப்புக் கூறுபாடுகளைக் கவனிக்கும் ஆற்றலை மிகுவிப்பதோடு, பார்வைச் சொற்றொகுதியை வளர்த்துக் கொள்ள மாணவர்க்குத் துணை செய்கிறது என்றும் கூறுகிறார். எழுத்துக்கூட்டும் ஆற்றலுக்கும் எழுதுவது நேரிடையாகவே துணைச் செய்கிறது. ஃபெர்னால்டு என்பவர் வடிவங்களின் மேல்புறத்தில் வரைதலையும் எழுதுதலையும் பெரிதும் பயன்படுத்தும் மெய்ப்பாட்டு முறையானது படிக்கக் கற்பதில் தொல்லைப்படும் மாணவர்க்கு ஆற்றல் வாய்ந்ததொரு முறை துணைக்கருவிகளைக் கொண்டு கற்பித்தல் ஆகும்.

## டாட்ரென்சு, ஃப்ரீனெட்டு (1936)

தட்டெழுத்துப் பொறிகளும், அச்சு இயந்திரங்களும் கூடப் படிக்கக் கற்றுக் கொள்வதில் துணைக்கருவிகளாகப் பயன்படுகின்றன. சுவிட்சர்லாந்தில் வாழும் டாட்ரென்சு, ஃபிரான்சு நாட்டு ஃப்ரீனெட்டு ஆகியோரைப் போன்ற இளங்குழந்தைக் கல்வி வல்லுநர்கள் பலர், அவற்றின் பயனை வலியுறுத்துகின்றனர். 1936ஆம் ஆண்டிலேயே படிப்பதில் உண்டாகும் வளர்ச்சியில், தட்டெழுத்து எவ்விதச் சொல்வாக்கு வகிக்கிறது என்பது பற்றிச் செய்த ஆராய்ச்சி வரிசைகள் கீழ்க்கண்ட முடிவுகளைத் தந்தன. இப்பொழுது கிடைத்துள்ள துணைக்கருவியை அடிப்படையாகக் கொண்டு பார்க்கும் போது, தட்டெழுத்துத் தொடர்பானது தொடக்க வகுப்பில் மேற்கொள்ளும் படிக்கும் செயலில் மிகுதியாகத் துணை செய்கிறதெனத் தெரிகிறது. தெளிவாகப் பார்க்கின்ற அறிவுக்குள்ள பொருள் உள்ள கேள்வி அறிவுக்கும் துணை செய்கிறது. இடை வகுப்புகளில் மாணவர்கள் சொற்களையும் முற்றுத் தொடர்களையும் புரிந்துக் கொள்வதற்குத் தட்டெழுத்துப் பொறி உறுதியாகத் துணைச் செய்கிறது.

எனவே, தட்டெழுத்துப் பொறியானது தொடக்கப் படிப்பில் உயரிய முறையில் நன்மை செய்கிறது என்று ஐயமில்லாமல் முடிவு செய்யலாம். அச்செழுத்து இதற்குத் துணைச் செய்வதைக் குறித்து இவ்வித ஆராய்ச்சியேதும் நடைபெறவில்லை என்றாலும் அதுவும் தட்டெழுத்தைப் போலவே படிப்பதற்குப் பேரளவில் துணைசெய்யும் என நம்பலாம்.

## திரை நழுவிகள், திரைப்படத் துணுக்குச் சுருள்கள், திரைப்படங்கள்

பல்வேறு வகைப்பட்ட காட்சித் துணைக்கருவிகளும் இன்று மிகுதியாகப் பயன்படுத்தப்படுகின்றன. ஆராய்ச்சியாளர்கள் வர்ணத்திரை நழுவிகள் தொடக்கக்காலப் படிப்பில் பொதுவானதொரு பின்னணியை அமைத்துத் தருவதில்

ஆற்றல் வாய்ந்தவையாக அவை தெளிவாகக் காணும் கற்பனைக் காட்சியை மனத்தில் உருவாக்கிகின்றன. படிப்பதில் கீழ்நிலையிலுள்ளவர்க்குச் சிறப்பாகத் துணை செய்கின்றன என்பவற்றை எல்லாம் கண்டுபிடித்துள்ளனர். திரைப்படத்துணுக்குச் சுருள்கள், திரைப்படங்கள் ஆகியவற்றைப் பற்றியும் சில ஆய்வுகள் நடத்தப்பட்டுள்ளன. ஓர் ஆராய்ச்சியில் பாடநூலில் உள்ள பாடம் அந்நூலிலிருந்து படிக்கப்படுவதற்கு முன்னால் திரைப்படத் துணுக்குச்சுருளின் மூலம் காட்டப்பட்டது. அப்போது மாணவர்கள் சாதாரணமாகக் காட்டும் முன்னேற்றத்திலும் மிகுதியான முன்னேற்றத்தைக் காட்டினர். இதற்குத் தரப்பட்ட விளக்கம் என்னவென்றால், திரைப்படத்துணுக்குச் சுருள்கள் மாணவருடைய கூர்மையான ஆர்வத்தை எழுப்பிப் பாடத்தின் தெளிவு விளக்கம் ஆகியவற்றுக்குத் துணை செய்கின்றது.

## கார்த்திகேசு சிவத்தம்பி (1984) தமிழ் கற்பித்தலில் உன்னதம்

தமிழ்மொழி கற்பித்தல் பற்றிய நிலைமைகளையும், தேவைகளையும் கண்டறிவதற்கான அறிவியல்பூர்வமான ஆராய்ச்சி மேற்கொள்ளப்பெற்று, அந்த ஆய்வின் அடிப்படையில், பல்வேறு சூழல்கள், தேவைகளுக்கேற்ற வகையில், கற்கை நெறிகள் தயாரிக்கப்படல் அவசியம். அப்பொழுதுதான் நாம் தமிழ் கற்பித்தலில் உன்னதத்தை எட்டலாம்.

## ஆ. மில்டன் சைமன்ராசு (1988)

கல்வியியல் உயர்சான்றிதழ் (தமிழியல்) வகுப்பு கற்பித்தல் நடைமுறைப் பாடப்பகுதியாக ஆ. மில்டன் சைமன் ராசு ஓர் ஆய்வு செய்தார். ஆய்வின் தலைப்பு “புகுமுக வகுப்பு மாணவர்களுக்கு கட்டுரை கற்பிக்கச் செய்தித்தாள் ஒரு சிறந்த கருவி” என்பதாகும். அவர்தம் ஆய்வில் செய்திதாளைப் பயன்படுத்துவதால் மொழிநடை மேம்படும்; சொற்பிழைகள் பெரிதும் குறையும். எவ்வாறெனில்

செய்தித்தாளில் உள்ள அநேகச் சொற்களை அவர்கள் பயன்படுத்திக் கொள்ளலாம். அதே சமயம் அவர்கள் அவற்றைப் பிழையின்றி எழுதவும் கற்றுக் கொள்கின்றனர், சொற்களையும் சொற்றொடர்களையும் கற்றுக் கொள்கிறார்கள்'' என்பதனை ஆய்வு செய்துள்ளார்.

## கார்த்திகேசு சிவத்தம்பி (1970) தமிழிலக்கணம் கற்பித்தல்

தமிழிலக்கணம் கற்பித்தலில் ஏற்பட்டுள்ள இத்தகைய சிக்கல்களுக்கான பிரதான காரணம் ஆசிரிய கலாசாலை / கல்லூரி நிலைகளிலும் தமிழ் உயர்கல்வி நிலைகளிலும் தமிழிலக்கணம் கற்பித்தலிலுள்ள குறைபாடுகளே என்று கொள்ள வேண்டியுள்ளது. மொழியியல் கண்ணோட்டத்தில் தமிழிலக்கண முறைமையினைப் பயிற்றுவிப்போர் பல்கலைக்கழகங்களிலேயே இப்போது ஓரிருவர் தான் உள்ளனர். ஆசிரிய கலாசாலைகளைப் பொறுத்தவரையில் 1970களின் ஆரம்பத்தில் மொழியியல் நிலைப்பார்வை ஒரு சிறிது அறிமுகப்படுத்தப்பட்டது. அது, பின்னர் முற்றிலும் கைவிடப்பட்டது. இதனால் பயிற்றுவிக்கப்பட்ட ஆசிரியர்கள் மட்டத்தில் இலக்கணம் பயிற்றுதல் தொடர்பான கற்பித்தல் தெளிவு ஒன்று இருப்பதாகக் கூற முடியாது. நாடு முழுவதுக்குமான ஒரு பாடநூலை எழுதும் முறைமை வந்ததின் பின்னர் பாடநூல்களில் இலக்கணம் இடம் பெறும் முறைமை அது தொடர்பான நிறவனத்தாலேயே தீர்மானிக்கப்பட்டு வந்துள்ளது. முதலில் பாட விதான அபிவிருத்தி மையமும் பின்னர் தேசியக்கல்வி நிறுவனமும் முக்கியமாயின. தேசியக்கல்வி நிறுவக மட்டத்திற்கூட இலக்கணம் என்று வருகின்ற பொழுது மரபுபோற்றுகையே பெரிதும் முனைப்புற்றது. இப்பொழுது பாடப்புத்தகம் எழுதுதல் தனியார் துறையிடம் வழங்கப்பட்டுள்ள து. இந்நிலையில் இலக்கணத்துக்கான அணுகுமுறை எவ்வாறிருக்குமோ தெரியவில்லை. ஆனால், அகப்பை எதுவாயினும் பானைக்குள் உள்ளதுதானே வரும்.

உண்மையில் இவ்விஷயம் பற்றி கல்வி அமைச்சு மட்டத்திலோ, மாகாணக் கல்வி மட்டங்களிலோ இன்னும் முனைப்பான ஆய்வு எதுவும் தொடர்ச்சியாகச் செய்யப்படவில்லை. நமது பல்கலைக்கழகங்களின் கல்வித் துறைகளோ இத்துறையில் எவ்வித ஆராய்ச்சியும் மேற்கொள்ளவில்லை என்றே கூறலாம்.

## டாக்டர் சுப. திண்ணப்பன் (ஜனவரி 1995)

தமிழ்க் கற்றல் / கற்பித்தல் பலவகைப் பயிற்றுக் கருவிகளை உருவாக்கும் பணியில் தலைமை இடம் பெற்றிருக்கும் சிங்கப்பூர் தகவல் மய உலகில் தலைசிறந்த கருவியாக விளங்கும் கணினியைத் தமிழ்க் கற்றல் / கற்பித்தலுக்குப் பயன்படுத்தும் பணியிலும் தலை நிமிர்ந்து நிற்கிறது. இப்பணிக்குச் சிங்கப்பூர் ஆற்றிய பங்கினைப் பின்வருமாறு சுட்டிக் காட்டலாம்.

1. கருத்தரங்குகள் வாயிலாக முன்னோடி முயற்சி.
2. புதிய விசைப்பலகை உருவாக்கம்.
3. ஆசிரியர்களுக்குத் தேவையான பயிற்சி.
4. பயிற்று கருவிச் சாதன உருவாக்கம்.
5. தமிழ்க்கல்வியின் பல நிலைகளில் கணினி பயன்படுத்துதல்.
6. டெலிவியூ வழித் தமிழ்.
7. குறம் கோவை.
8. மரபுவழி விளையாட்டு.
9. பண்பாட்டுக் கூறுகள்.
10. கலைகள் கற்றல்.
11. பஞ்சாங்கம் போன்ற மரபுவழி நாட்காட்டி.
12. மக்கள் தொடர்பு சாதனப் பயன்பாடு.

இவற்றை நோக்கும் போது கணினிவழித் தமிழ்க் கற்றல் / கற்பித்தல் என்பது தமிழ்மொழி, இலக்கியம், கலை, பண்பாடு, கலாச்சாரம், மரபு, கல்வி, பயன்பாடு எனத் தமிழின் பல்வேறு கூறுகளையும் கற்றல் / கற்பித்தல் என விரிந்து நிற்கிறது.

தமிழ் கூறும் நல்லுலகில் தமிழ்க் கணினி மென்பொருள்களை அதிகமாகப் பயன்படுத்தும் வாய்ப்பும் வளமும் வசதியும் சிங்கப்பூருக்கு இருக்கின்றன. எனவே கணினித் தொழில் நுட்பர்களும், கன்னித்தமிழ் அறிஞர்களும் இணைந்து நின்று ஒல்லும் வகையான் எல்லாம் ஓயாது பணியாற்ற முன்வர வேண்டும். அப்போது தமிழ்க் கற்றல் / கற்பித்தல் இன்னும் இங்கு மேம்பட வாய்ப்பும் வழியும் பிறக்கும். இதன்வழி ஏனைய நாட்டினர்க்கும் தமிழ்க் கற்பித்தலுக்குச் சிங்கப்பூர் வழிகாட்ட முடியும்.

## டாக்டர் சுப. திண்ணப்பன் (1995)

மொழிக் கற்றலில் மொழியைக் கருத்துப் பரிமாற்றக் கருவியாகக் கற்பது ஒரு வகை. மொழியை ஏனைய பாடங்களுக்கு ஓர் ஊடகமாக அமையும் முறையில் கற்பது இன்னொரு வகை மொழியை ஒரு பாடமாகக் கற்பது மொழி கற்றலில் முதன்மைப் பெறுகிறது. எனினும் மொழிப் பாடத்திற்கு ஊடகமாக இருப்பதும் அதே மொழியாக இருக்குமானால் அம்மொழிக் கற்றல் ஆக்கமும் ஊக்கமும் பெறும். மொழி கற்றலும் மொழிக் கற்பித்தலும் ஒரு நாணயத்தின் இரு பக்கங்கள் போல ஒருங்கே இணைந்து நிற்கின்றன. மொழியை மொழியால் கற்று முன்னேற முற்படுவோமாக.

## டாக்டர் சுப. திண்ணப்பன் (1996)

"பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல கால வகையினானே" என்னும் நன்னூல் கருத்துக் கிணங்கத் தமிழ் கற்பித்தலில் பழையன கழிந்து புதியன புகுந்துள்ளன. இதற்குக் காலமாறுபாடு மட்டும் காரணம் அன்று. மேனாட்டினர் வருகையும் அவர்கள் தமிழின்பால் கொண்ட ஆர்வமும், தமிழர்கள் அவர்கள் அறிவியல் நோக்கின்பாற் கொண்ட அக்கறையும் காரணங்களாக அமைந்துள்ளன.

தமிழ்க் கற்பித்தல் துறையில் ஏற்பட்ட மேனாட்டுச் செல்வாக்கினைப் பின்னணி, சூழல், நிலை, அறிவியல் தமிழ், இருவகை வழக்கு, நோக்கம், பாடத்திட்டம், பாடப்பொருள், பயிற்று கருவிகள், பயிற்றுமுறை, மதிப்பீடு, படித்தல், எழுதுதல், கேட்டல், பேசுதல், இலக்கியம், இலக்கணம் கற்பித்தல், கருவி நூல்கள், ஆய்வு என்னும் பல தலைப்புகளில் இக்கட்டுரை விளக்கியது. இதன்வழி தமிழ்க் கற்பித்தலில் ஏற்பட்ட புதிய போக்குகளையும் நாம் உணர முடியும். இனி எதிர்காலத்தில் தமிழ்க் கற்பித்தல் அமையும் இயல்பினையும் ஓரளவு கணிக்க முடியும்.

**ஸ்டார் சில்வர் (2011)** Testing as an Educational Tool: Utilizing Retrieval Practice to Improve learning Vol. 16.2011

பல வித வகுப்பறை சம்பந்தப்பட்ட ஆராய்ச்சிகளும் இது கற்றலில் நல்லவித பாதிப்பை உண்டாக்கி இருக்கிறது என்று காட்டி இருக்கிறார்கள். பல்கலைக்கழகப் படிப்பைச் சம்பந்தபடுத்தி மேற்கொள்ளப்பட்ட ஆராய்ச்சியில் மாணவர்கள் இறுதி தேர்வில் நன்றாகச் Perform செய்தார்கள். பாடம் நடத்தி முடிந்தவுடன் குறுகிய வினாக்களுக்கு விடையளிப்பது மாணவர்கள் இறுதி தேர்வில் நன்றாக நினைவுபடுத்துவதற்கு, வசதியாக இருக்கிறது என்பதைப் Bulter மற்றும் Roedieval Practice போல் உபயோகமாக இல்லை என்பதை Karpicke and Bhunt என்பவர்கள் கண்டுபிடித்தார்கள். மாணவர்களும் இம்முறைக்கே வாக்களித்தனர். தேர்வுகளும் படித்ததை மறப்பதைக் குறைக்கிறது. இம்முறை மாணவர்களடைய பெயர்களை நினைவு கூறுவதற்கு ஏதுவாக உள்ளது. இம்முறை Spacing effect-ஆல் வடிவமைக்கப்பட்டது. Cued-Recall தேர்வை Free-Recall கற்றுக்கொள்வதற்கு நன்றாக இருக்கிறது என்று மாணவர்கள் கண்டு பிடித்தார்கள்.

## ஸ்டார் சில்வர் (2011)

ஆங்கிலத்தைத் தாய்மொழியாகக் கொண்ட ஆசிரியர்கள் ஆங்கிலத்தைத் கற்றுக்கொடுக்கும் போது ஆக்கபூர்வமாக வேலை செய்கிறார்கள். ஆங்கிலத்தைத் கற்றுக்கொடுக்கும் போது ஆங்கிலத்தில் உள்ள அடிப்படை திறன்களை (Grammar) மொழிப்பெயர்வு போன்றவற்றைக் கற்றுக் கொடுக்க வேண்டும். கடினமான யோசிக்கும் திறன் குறிப்பாக (EFL) வகுப்புகளில் மிகவும் கடினமானதாக இருக்கும். உலக அளவில் உள்ள விழிப்புணர்வே இன்றைய EFL கல்வியினுடைய முக்கிய பகுதியாகும். மறைக்கப்பட்ட கல்வியில் மற்ற நாட்டின் கலாச்சாரத்தினைத் தெரிந்தோ அல்லது தெரியாமலோ கற்றுக்கொடுப்பது இன்றைய (EFL) வகுப்பறைகளில் தெளிவாகத் தெரிந்து விடும். ஆங்கிலத்தைத் தாய்மொழியாக உள்ள ஆசிரியர்கள் வகுப்பறைகளில் மாணவர்களுக்கு சொந்த நம்பிக்கைகளையும், கல்வி, அனுபவம் மற்றும் கலாச்சாரத்தினைப் போதிக்கிறார்கள். ஆசிரியர்களுடைய குறிக்கோளை ஆழ்ந்தறிவது முக்கியமானதாகும். இந்த Qualitatire Study University EFL Core Coursesகளில் ஆசிரியரது சுயத்திறமைகளை ஆராய்வதாகும்.

## ராபர்ட் கேனே (ROBERT GAGNE)

கற்றல் நிகழ்வில் நடைபெறும் வழிமுறைகளை, குறியீட்டு வழி கற்றல் (1) தூண்டல் – துலங்கல் – (2), இணைப்பு – (3), சொல்லொப்புமையாக்கம் – (4) வேறுபடுத்திக் காணல் – (5), கருத்துரு ஆக்கம் – (6) கொள்கை உருவாக்கம் – (7) சிக்கல் தீர்த்தல் – (8) எனப் பகுத்துத் தந்துள்ளார். எப்பாடப்பொருளுக்கு எம்முறை ஏற்றதென அறிந்து, அம்முறையை மேற்கொள்ளும்போது, நடைபெறும் வகுப்பறை நிகழ்ச்சிகளைக் கற்பிக்கும் முறையில் எழுத வேண்டும்.

### புரூணர் (BRUNER)

கற்பித்தல் கோட்பாடுகள் வலியுறுத்தப்படுகின்றன. கற்பிக்கும் முறையில் மாணவர்களுக்கு ஊக்கம் ஊட்டுதல், சொல் விளக்கங்கள் தருதல், துணைக்கருவிகளைக் காட்டி விளக்குதல், கரும்பலகையில் எழுதுதல், பல எடுத்துக்காட்டுகளைத் தருதல், படம் வரைதல், பாடிக்காட்டல், வினாக்கேட்டல், மாணவர் விடை கூறக் குறிப்புக் கொடுத்தல், ஒவ்வொரு மாணவரையும் விடை கூறக் குறிப்புக் கொடுத்தல், ஒவ்வொரு மாணவரையும் கவனித்தல், வகுப்பறை ஒழுங்கிலும் கவனம் செலுத்தல் போன்ற பல செயல்கள் ஆசிரியரைச் சார்ந்தனவாகும். பாடப்பொருளுக்கும் எதிர்பார்க்கும் கற்றல் விளைவுக்கும் உரியவாறு ஆசிரியர் மேற்கொள்ளும் கற்பித்தல் முறைகள் கற்பிக்கும் முறையில் எழுதப்படும்.

மொந்தெய்ன் புலன்களுக்குப் பயிற்சியளித்தலும், உடற்பயிற்சிக் கல்வியும் நன்மை பயக்கும் என நம்பினார். தாய்மொழிப் பாடம் முதலில் கற்பிக்கப்பட வேண்டும் எனக் கூறினார். கல்வியில் கற்பித்தல் முறையைப் பொறுத்தவரை அறிவு ஒன்றுபட்டு இணைதல் வேண்டும். செய்முறைப் பயிற்சிகள் தொடங்கப்பெறல் வேண்டும். நடத்தை மூலம் கருத்துகளை உணர வாய்ப்பளித்தல் வேண்டும் என்று தெரிவித்தார் அவர்.

## 2.3 இந்திய நாட்டு சார்பு இலக்கியங்கள்

### டாக்டர் ந. சுப்புரெட்டியார் (1957)

சங்க இலக்கியங்களிலிருந்து தற்காலத்தில் தோன்றி வரும் இலக்கியங்கள் வரை உள்ள தமிழ் இலக்கியங்களில் இத்தகைய காட்சிகளைத் தம்மகத்தே கொண்டுள்ள பாடல்கள் எண்ணற்றவை காணப்படுகின்றன. தமிழ்மொழிக் கற்பிக்கும் ஆசிரியர்கள் மாணாக்கரின் அறிவுநிலை, பட்டறிவு முதலியவற்றிற்கேற்றவாறு இவற்றைத் தேர்ந்தெடுக்கக் கற்பிக்க வேண்டும்.

இவற்றைக் கற்பிக்கும் பொழுதே கற்பனையாற்றலையும் முருகுணர்ச்சியையும் எடுத்துக்காட்ட வேண்டும். கற்பனையாற்றலுக்கு அடிப்படை உள்ளத்தில் படிந்து கிடக்கும் உணர்ச்சியே. உணர்ச்சியும் கற்பனையும் ஒன்றையொன்று பின்னிக் கிடக்கும். ஒன்று குறைந்தாலும் அதற்கேற்றவாறு பிறிதொன்றன ஆற்றல் குறைந்துவிடும். சிந்தனையும் காட்சித்திறனும் கலந்து உணர்ச்சிகளை வெளிப்படுத்தும் இக்கற்பனையாற்றல் உயர்ந்த கவிஞர்களிடம் காணப்படும் ஓர் அருளாற்றல். இத்தகைய ஆற்றல் பொதிந்துள்ள பாடல்களைக் கற்பிக்கும் பொழுது மாணாக்கர்களிடம் மெய் மறந்து பாட்டுகளைத் துய்க்கும் ஆற்றலை உண்டாக்கி விட்டால், அவர்களிடம் அது வளர்வதுடன் அவர்களாகவே பல இலக்கியங்களைப் படித்துத் துய்க்கும் திறமையையும் பெறுவர். தாய்மொழி கற்பிக்கும் ஆசிரியர்கள் இதை நோக்கமாகக் கொண்டு பணியாற்ற வேண்டும். இன்று வெளிவரும் சில திறனாய்வு நூல்கள் இவர்கட்குத் துணையாக அமையும்.

### டாக்டர் நா. சுப்புரெட்டியார் (1957) தமிழ்மொழியைப் பயிற்றும் நோக்கங்கள்

புறப்பொருளில் அடங்கிய குறிக்கோள் பொருள்கள்அறம், பொருள், வீடு என்ற மன்றுமாகும். புறத்தவர்களக்கு வெளிப்படும்படியான நிகழ்ச்சிகள் நிகழ்வதனால் இது 'புறம்' என்று சுட்டப்பெற்றது. அகப்பொருளிலுள்ள திணை, துறைகளைப் போலவே புறப்பொருளிலும் திணை, துறைகள் உள்ளன. புறப்பொருளின் திணை, துறைகளை வகுத்துக் கூறுவதில் இரண்டு வகையான கொள்கைகள் உள. அகத்தியம், தொல்காப்பியம் என்ற நூல்கள் புறப்பொருள்களுக்கு ஏழு திணைகள் கூறுகின்றன. அவை வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் என்பவை. வெட்சித்திணை பகைவருடைய பசுக்கூட்டங்களை அவர் அறியாமல் கொணர்ந்து பாதுகாத்தலைச் செய்வது, நாடு பிடிக்கும் ஆசையால் ஓரரசன் மற்றோரரசன் மீது தண்டெடுத்துப் போருக்குச்

செல்லுதல், வஞ்சித்திணை, பகைவர் அரணை முற்றுகையிடுவதாகச் சொல்வது, உழிஞைத்திணை, வீரச்சிறப்பு வெளிப்படும் பொருட்டு வேந்தர் பொருதலை எடுத்தியம்புவது தும்பை. போரில் தலையிடும் அரசர்கள் முதலியவர்களின் தொழிலைச் சிறப்பித்து ஓதுதல், வாகை, காஞ்சி, நிலையாமையைப் புலப்படுத்துவது, புகழ்தல், வாழ்த்துதல் வகையால் பிறரைச் சிறப்பித்துப் பாடுதல் பாடாண் திணையாகும். பன்னிரு படலம், புறப்பொருள் வெண்பா மாலை போன்ற நூல்கள் தொல்காப்பியர் கூறிய திணைகளில் சிலவற்றை இரண்டாகப் பிரித்தும், அகத்தைச் சார்த்தி வைத்த கைக்கிளை பெருந்திணைகளைக் கூட்டியும், வேறு சிலவற்றைச் சேர்த்தும் புறப்பொருளைப் பன்னிரண்டாகப் பகுத்துப் பேசுகின்றன. இவற்றின் விரிவுகளை உரிய நூல்களில் கண்டு கொள்க. அகப்பொருள், புறப்பொருள் துறைகளை வைத்துப் பாடிப் பிற்காலப் புலவர்கள் தம் காவியங்களைச் சிறப்பித்துள்ளனர். பண்டிருந்து இன்றுவரையில் தோன்றியுள்ள இலக்கியங்களைப் படிக்கும்பொழுது அவை நேர்முகமாகவும் மறைமுகமாகவும் அவ்வக் காலங்களில் வாழ்ந்த மக்களின் சமூக இயலையும் பண்பாட்டையும் விளக்குவதை அறியலாம். ஒரு வளர்ச்சியே நாகரிக வளர்ச்சியாகும். தாய்மொழியின் வாயிலாக எண்ண வளாச்சி ஏற்படுவது இயல்பாதலால், இது முதலில் கற்பிக்கப்பெறுதல் வேண்டும்.

## இரா. வேலாயுதம் (1983)

“அகநானூற்று ஆய்வு வரலாறு” என்னும் ஆய்வு ஆய்வியல் நிறைஞர் பட்டத்திற்காகச் சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு அளிக்கப்பெற்ற ஆய்வேடு. இதில், அகநானூற்றுப் புலவர்களில் கபிலர், பரணர், நக்கீரர், ஔவையார் ஆகிய நால்வரைப் பற்றியும் ஆய்வுகள் மிகுதியாக உள்ளன. கபிலர், நக்கீரர், ஔவையார் ஆகியோர் பல்வேறு காலங்களில் வாழ்ந்த ஒரே பெயரையுடைய பல புலவர்கள். தமிழ் இலக்கியங்களில் சங்க காலம் முதல் இடைக்காலம் வரை பேசப்படும் ஒரு புலவர் உண்டென்றால் அவர் ஔவையார்தான் என்று ஆய்வில் கூறுகின்றனர்.

## குப. அழகம்மை (1987)

“அகநானூற்றில் வாழ்வியல் நீதிகள்” என்னும் தலைப்பில் ஆய்வியல் நிறைஞர் பட்டத்திற்காகச் சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு அளிக்கப்பட்ட ஆய்வேட்டில் அறவாழ்வு என்பது இல்வாழ்க்கையினர் மேற்கொள்ளும் ஐம்பொறிகளுக்குரிய ஐந்து புலன்களின் ஆசைகளையும் விடுதலாகும். ஆசைகளை விடுத்தற்கு மனவடக்கம் இன்றியமையாதது. ஆசையை ஒழிக்கத் துன்பம் ஒழியும் என்பது புத்தரின் கருத்தாகும். வள்ளுவர் கூறுவது துறவுக்கு நீதி வகுக்கின்றன. ஒவ்வொரு ஆண்மகனும், பெண் மகளும் சமுதாய நீதிகளைக் கடைப்பிடிப்பவர்களாக விளங்க பயன் விளைவிக்கும்.

## எல். இராமமூர்த்தி (2000)

மொழியியல் அடிப்படையில் அறிவுப் பூர்வமாகத் தமிழை அணுகும் பொழுது மொழி வளர்ச்சிக்குத் தடையான சில மனப்பாங்குகள் மாறும். மொழியியல் கோட்பாடுகளுடன் தமிழைப் புதிய துறைகளில் குறிப்பாக இன்றைய கணினித் துறையிலும், பிற துறைகளிலும் பயன்படுத்தும்போது மொழிப் பயன்பாட்டில் எளிமையும், சீர்மையும் தோற்றுவிக்கப்படும். இப்பயன்பாட்டில் நம் மொழியின் தொன்மை, இலக்கியச் செழுமையுடன் வட்டார வழக்குகளின் பங்களிப்பு சேரும்பொழுது மொழி வளர்ச்சி தடையில்லாது நிகழும். இன்றைய சந்தைப் பொருளாதாரச் சூழலில் தமிழ்ப் பொருளாதார வள்ாச்சிக்கு உதவும் கருவியாக மாற்றப்படும் பொழுது தமிழரின் பண்பாட்டுத் தொன்மை தமிழரை ஒரு ஆதிக்கச் சக்தியாக உருவாக்கலாம். விழுமியங்களுடன் கூடிய மொழி வளர்ச்சியும் அறிவியல் பூர்வமான அணுகுமுறையும், தமிழ் உணர்வும் மொழி வளர்ச்சியை உச்சநிலைக்குக் கொண்டு செல்லும் என்பதில் ஐயமில்லை.

**லோ. விமலா (2002)**

"குறுந்தொகையில் பெண்பாற் புலவர்கள் – ஓர் ஆய்வு ஆய்வியல் நிறைஞர் பட்டத்திற்கு சென்னைப் பல்கலைக்கழகத்துக்குஅளிக்கப்பட்ட ஆய்வேடு. இவ்வாய்வேட்டில் பதினாறுபெண்பாற் புலவர்களின் பாடல்கள் ஆய்வில் இடம் பெறுகின்றன. பெண்களின் மன உணர்ச்சிகளைப் பாடல்களாக இயற்றியுள்ளனர். ஔவையார் காதல், வீரம், கொடை, நட்பு போன்றவற்றைப் பாடுவதில் சிறப்புப் பெற்றவராகக் கருதுகின்றனர்.

**முனைவர் மி.நோயல் (2002) அறிவியல் தொழில்நுட்பக்கல்வி இன்றைய சந்தைச் சவால்கள்**

இணையதளத்தில் தமிழின் பயன்பாட்டை அறிமுகப்படுத்துதல் வேண்டும். இந்த வகையில் ஏராளமான முயற்சிகள் உலக அளவில் இப்போது நடைபெற்று வருகின்றன. உலகளாவிய தமிழர்கள் இன்று தமிழ் இணையத்தைத் தரப்படுத்த முயன்று வருகிறார்கள். தமிழ் இணையத்துக்கான குறியீடுகள் உலக அளவில் தரப்படுத்தப்பட்டு வருகின்றன. மின் அஞ்சல், மின் வணிகம் போன்றவற்றையும் தமிழிலேயே செய்ய வாய்ப்பிருக்கிறது. தமிழ் இணையத்தில் வெளிநாடுகளில் வாழும் இந்தியர்களுக்குத் தமிழ்மொழியைக் கற்பிக்கும் முயற்சிகள் தொடங்கியுள்ளன. தமிழ்நூல், இதழ் வெளியீட்டுப் பணிகள் கணினியால் பெரிதும் விரிவடைந்துள்ளன. இந்தத்துறைத் தொடர்ந்து வளர்ந்தால், வேலைவாய்ப்பும் பெருகும். தமிழும் வாழும், தமிழர்களும் வாழ்வார்கள்.

**முனைவர் பி. இரத்தினசபாபதி (2003) தரமிகு தமிழ்க்கல்வி**

தமிழ்மொழி உயர்கல்வியின் (Higher Education) அனைத்துப் பிரிவிலும் கற்பிப்பு மொழி ஆகாமையால், உயர்கல்வி ஏற்பாட்டில் தமிழ்மொழிச் சிறப்பிடம் பெறாமல் உள்ளது. தமிழைக் கற்பிப்பு மொழியாகக் கொள்வதெனின், துறையறிவு

சார்ந்த நூல்கள் போதிய தமிழில் இல்லை எனும் குறை இன்றும் நிலவுகிறது.அதே வேளையில், தமிழைக் கற்பிப்பு மொழியாக்க வேண்டும் எனும் எண்ணம் பல்கலைக் கழகம் வரையிலுள்ள மொழியறிஞர்களிடம் மட்டுமன்றித் துறை அறிஞர்களிடமும் உள்ளது. மொழி மற்றும் இலக்கிய அறிஞர்களால் மட்டுமே தமிழ்மொழியில் துறைசார் நூல்களை எழுதிவிட இயலாது. துறை அறிஞர்களுக்கு மொழி அமைப்பு, மொழியாக்கம் போன்ற துறைகளில் கல்வி அளித்து அவர்களின் துறை அறிவைத் தமிழில் வழங்கச் செய்தால் உயர்கல்வி நிலையிலு தமிழ் புத்துயிர் பெறும் வாய்ப்பு உண்டு. இப்பணியைத் தமிழ் மேம்பாட்டு நிறுவனங்களும், பல்கலைக்கழகங்களும் ஏற்றல் வேண்டும்.

**டாக்டர் மு. கோவிந்தராசன் (1994) தமிழ் நூல்களின் கல்வி**

**அன்னிபெசண்ட் அம்மையார் (1994)**

தாய்மொழி மூலம் கல்வி போதிக்காத காரணத்தால் நாகரிகம் மிகுந்த உலகின் நடுவில் இந்தியா அறியாமை மிகுந்த நாடாகி நிற்கின்றது. அதிகம் படித்ததறிந்த மக்கள் கார்த்திகைப் பிறையாகவே காணப்படுகின்றனர். ஆனால் கல்வியறிவே இல்லாத பாமர மக்களின் எண்ணிக்கையோ பிரமாண்டமானது'' என அன்னிபெசன்ட் கூறியுள்ளதினின்று தாய்மொழி வாயிலாகக் கல்விக் கற்பிப்பதே சிறந்தது எனக் குறிப்பிட்டுள்ளார்.

**முனைவர் இரா. சந்திரசேகரன் (2001) மொழி கற்பித்தலின் நுட்பக்கூறுகள், துணைக்கருவிகள்**

துணைக்கருவிகளின் உதவியோடு கற்பித்தல் நிகழும்போது, கற்றல் அனுபவம் உயிரோட்டம் உடையதாக மாறுகிறது. மாணவர் நிலைத்த ஈடுபாடு கொண்டவர்களாக மாறுகிறார்கள். கற்றலின் விளைவுகள் விரைவாகவும், அழுத்தமாகவும், நீண்ட காலத்திற்கு நிலைத்திருக்கும் வகையிலும்

உருவாக்கப்படுகின்றன. இக்காலத்தில் நவீன அறிவியல் வளர்ச்சியின் விளைவாகப் புதிய பல கருவிகள் பரவலாகப் பயன்பாட்டிற்கு வந்துள்ளன. கற்பித்தல் கருவியைப் பயன்படுத்துவதால் விளையும் நன்மைகள்:

1. துணைக்கருவிகள் மாணவருடைய கவனத்தைப் பெரிதும் ஈர்த்து அவர்கள் ஆவலைத் தூண்டுகின்றன.
2. தாங்கள் கற்க வேண்டிய பாடங்களைப் புலன்கள் வழியாக அனுபவிக்கும் மகிழ்வை மாணவர்கள் பெற முடிகிறது.
3. நேரில் காண முடியாத பொருட்கள், நிகழ்ச்சிகள் ஆகியவற்றை மாதிரிகளாகக் காணமுடிகிறது.
4. காலம், இடம் ஆகியவற்றால் தொலைவிலுள்ளவற்றை வகுப்பறைக்குள் காண முடிகிறது.
5. கற்றல் கருவிகள் மூலம் பெறும் அறிவும் அனுபவமும் நீண்ட நாட்களுக்கு நிலையாகப் புரிகிறது.
6. மாணவர்கள் கல்வி வளர்ச்சி விரைவாகவும், ஆற்றலுடனும் அமைகிறது.
7. சில சூழல்களை ஏற்படுத்துவதன்மூலம், புதிய சமூக, இடச்சூழல்களுடன் பழகும் உணர்வை மாணவர்களிடையே ஏற்படுத்த முடியும்.
8. மாணவர்களுடைய தனியாள் வேற்றுமைகளைக் கடந்து அனைவரையும் அணுக முடியும்.
9. எத்தகைய வயது மற்றும் கல்வித்தரப் பிரிவு மாணவர்களக்கும் ஏற்புடையதாக அமையும்.
10. பயனற்ற விரிவான பேச்சு, வீண் கால விரயம் ஆகியவற்றைத் தவிர்த்து கற்பித்தலைக் கூர்மையுடையதாக்குகிறது.

11. ஆசிரியர்களால் சில பாடப்பகுதிகளைத் தெளிவாக விளக்க இயலாத சூழல்களில் துணைக்கருவிகள் துணையாக வருகின்றன.

12. கற்பனையாகக் கருதிப் பார்க்க வேண்டிய கருத்துகளைக் கூடப் புலன்வடிவ அடிப்படையில் விளக்கித் துணை செய்கிறது.

13. ஆசிரியர் – மாணவர் இயைந்து துணைக்கருவிகளைத் தயாரிக்கும் போது ஓவியக்கலை முதலான படைப்பாற்றல் திறன் வளர்ச்சி பெறுகிறது.

14. ஆசிரியர் – மாணவர் நல்லுறவையும் சேர்ந்து இயங்கும் இயக்கத்தையும் வளப்படுத்துகிறது.

15. சில கருவிகளைக் கொண்டு, மிகப் பல மாணவர்களுக்கு எளிதாகக் கற்றுக்கொடுக்க முடியும்.

16. மாணவர் செயல்களை அதிகப்படுத்துகிறது. அவர்களுடைய அறிவியல் முனைப்பை மிகுவிக்கிறது.

## ஞானி (2008) தமிழகத்தில் தமிழ்வழிக் கல்வியும் இலக்கியமும்

தாய்மொழியில் கற்பதுதான் சிறந்த கல்விக் கொள்கையாக இருக்க முடியும் என்பதை உலகளவிலான கல்வித்துறை அறிஞர்கள் பலரும் வற்புறுத்துகின்றனர். கல்வியின் நோக்கம் பணம் பண்ணுவதாக இருக்க முடியாது. மனித ஆளுமை வளர்ச்சிதான் கல்வியின் நோக்கமாக இருக்க முடியும். வரலாறு மற்றும் சமூகச் சூழலை ஒதுக்கிவிட்டு ஒருவர் மனித ஆளுமை பெறமுடியாது. அதாவது, மனிதனாக முடியாது. இங்கிலாந்தில் வாழ்பவன் ஆங்கிலத்தின் வழியே கற்பதற்கான நியாயம் இருக்கிறது. தமிழகச் சூழலில் தமிழ் ஆகிய தாய் மொழியின் மூலம்தான் தமிழர்களின் வரலாறு, தமிழ் இலக்கியம், தமிழ்ப் பண்பாடு முதலியவற்றைக் கற்க முடியும். தமிழ் நிலத்தோடும் நீரோடும் தமிழ் மக்களோடும் வாழ்ந்துதான் ஒருவன் தமிழனாக / மனிதனாக முடியும். திருக்குறள் முதலிய இலக்கியங்களைத் தனக்குள்

செரித்துக் கொள்ளத் தமிழில் தான் கற்க வேண்டும். தமிழ்நாட்டின் இயற்கை, பொருள்வளம் முதலியனவற்றை எல்லாம் கற்றுக் கொள்வதற்குத் தமிழ்தான் சிறந்த மொழி. இவற்றை எல்லாம் ஆங்கிலத்தில் மொழியாக்கம் செய்து மெட்ரிக் பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் கற்றுத் தருவது இல்லை. ஆங்கில மொழி வழியாக அரிய வகையான தமிழ் இலக்கியங்களை மாணவர்களுக்குக் கற்பிக்க வேண்டுமென வலியுறுத்துகின்றனர்.

## இ.ஜி. இராமசாமி (2010) சங்க இலக்கியத்தில் பூ உதிர் காட்சிகள்

சங்க இலக்கியத்தில் பூக்களின் வண்ணம், வடிவம், மணம், மென்மை ஆகியன வருணிக்கப்படுகின்றன. அரும்பு, முகை, மொட்டு, மலர் என்று அவற்றின் வளர்ச்சி நிலைகள் விளக்கப்படுகின்றன. அவற்றைப் பற்றி ஆராய்ச்சிகளும் வந்துவிட்டன. ஆனால் நொடிப்பொழுதில் நிகழும் பூ உதிர்கின்ற முயற்சி மேற்கொள்ளப் பெறவில்லை. ஆகையால் வெண்கடம்பம்பூ, முருங்கைப்பூ, இலுப்பைப்பூ, இலவம்பூ ஆகியவை மரத்திலிருந்து உதிர்கின்ற காட்சிகளை மட்டும் எடுத்துக்கொண்டு அவற்றுக்குச் சொல்லப்பட்ட உவமைகளைத் தேர்ந்துரைக்கும் நோக்கில் இக்கட்டுரை அமைகின்றது.

வெண்ணிறமுடைய வெண்கடப்பம்பூவும் முருங்கைப்பூவும் இலுப்பைப்பூவும் ஆலங்கட்டிழை போல விழுகின்றன. செந்நிறமுடைய இலவம்பூ நெருப்புப்பொரி சிதறி விழுவது போல விழுகின்றது. இருபுறமும் துளை'புடைய இலுப்பைப்பூ நூலிலிருந்து விழுகின்ற முத்துப்போல உதிர்கின்றது. இவ்வாறு சங்கச் சான்றோர் தாம் முன்னரே கண்ட இயற்கைக் காட்சியைப் பூ உதிர் காட்சியோடு ஒப்பிட்டுப் பாடியுள்ளனர்.

சங்கச் சான்றோருக்கு இயற்கை மீது ஆழ்ந்த ஈடுபாடும் இயற்கை நிகழ்வுகளை உற்றுநோக்கிச் சொற்சித்திரங்கள் வடிக்குந் தனித்திறனும் இருந்தன. நொடிப் பொழுது தோன்றும் பூ உதிர்காட்சிக் கூட ஒரு வாழ்வியல் உண்மையை

உணர்ந்துவதாக அவர்கள் சிந்தித்துள்ளனர். அவர்களுடைய எழுத்துக்களால் கருத்தியல் வளம் பெற்ற தமிழ்ச்செம்மொழி இன்றளவும் தமிழ்ப் பண்பாட்டின் வேராகவும் விழுதாகவும் விளங்குகின்றது.

இத்தகையான இயற்கையான சங்க இலக்கியங்களைப் பள்ளி / கல்லூரி மாணவர்கள் கற்றால் சிறப்பினைப் பெறுவார்கள்.

### கி. கருணாகரன் (2010) இக்காலத் தமிழ்மொழிக் கல்வி: கற்றல் - கற்பித்தலில் புதுமைக்கோட்பாடுகளும் தொழில் நுட்ப முறைகளும்

இன்றைய மொழி, கற்றல்–கற்பித்தலுக்குப் புதுமைக் கோட்பாடுகள்–உத்திகள் தேவை. இது காலத்தின் கட்டாயமும் கூட. கருத்தாடல்–தகவல் தொடர்பு நெறிமுறைகளோடு ஒருங்கிணைந்த மொழி கற்றல்–கற்பித்தல் பணிகள் (Communicative approval to language learning - teaching) முன்னிறுத்தப்படுவது–அமைவது சிறப்பான மொழிக் கல்விக்கு / பயனுள்ள மொழிக்கல்விக்கு ஏற்றது என்ற கருத்து வலியுறுத்தப்படுகிறது. அதுவும், இன்றைய சூழலில் தொழில் நுட்பத்தின் துணையோடு மேற்கொள்ளப்படும் Computer Aided Language Learning Teaching மொழி கற்றல்–கற்பித்தல் பெரும்பயனை விளைவிக்கும் என்று நம்பப்படுகிறது. ஒலி முதல் உரைக்கோவை From Speech sound to dicowise level வரையிலான மொழியமைப்புகளைக் கற்க–கற்பிக்க மொழியியல் கோட்பாட்டுப் புதுமைகளோடு இன்றைய தொழில்நுட்பப் புதுமைத் திறன்களும் இணைந்தால் மொழிக்கல்வி தரமும் பயனும் கூடும் என்பது வெளிப்படையாக எடுத்துக்காட்டப்படுகிறது.

இக்காலத் தமிழ், பயன்பாட்டில் பெருமளவில் இடம்பெற – ஈடுபடுத்தப்பட்ட மொழியியலும் கணினி அறிவியலும் துணை செய்யும். சொல்லாக்கத்தோடு உரைக்கோவை Written or Oral அமைப்பில் தெளிவும். எளிமையும், ஆற்றலும் பெருக வேண்டும். கருத்தாடலில் ஈடுபடுவோர் நிறைவு பெற வேண்டும். அறிவுப் பரவலாக்கம்

ஏற்பட வேண்டும். இவற்றின் வழி நாடும் சமுதாயமும் ஒருங்கிணைந்த வளர்ச்சி காண வேண்டும். காலவிரயம் தவிர்க்கப்பட வேண்டும், வளர்ந்த வரலாறு படைக்கும் சமுதாயமாக மாற வழி காண வேண்டும். இந்நிலை ஏற்பட ஏதுவாகத் தமிழ்ப் பயன்பாடு போற்றப்பட வேண்டும் – பேணப்பட வேண்டும். இதற்குத் தமிழ்க் கல்வி அடித்தளம் அமைத்துக் கொடுக்க வேண்டும். எனவே, இக்காலத் தமிழ்மொழிக் கல்வியில் பயன்படுத்தப்பட்டு வரும் நூல்கள் – கருவிகள் – பயிற்சிகள் – செயல்முறைகள் போன்றவற்றில் எளிமையும் தேவை. புதுமையும் தேவை.

**கே. கல்பனா செல்வராஜ் (2010) ஊடகங்களில் தமிழ் தொலைக்காட்சியில் தமிழ்**

திராவிட மொழிகளிலேயே உயர்தனிச் செம்மொழியாய் விளங்குவது தமிழ். தமிழ்மொழி தமிழ்நாட்டில் பிறந்து வளர்ந்து இந்தியாவின் பிற மாநிலங்களிலும், மலேஷியா, சிங்கப்பூர், இலங்கை, பர்மா, தென்னாப்பிரிக்கா, பிஜி. மொரிஸியஸ், இந்தோனோசியா, மடகாஸ்கர் போன்ற நாடுகளிலும் பரவிச் செழித்தோங்கி இன்றளவும் வாழ்ந்து வரும் மொழி, கன்னித் தமிழானது இன்றைய அறிவியல் யுகத்தில் கணினித் தமிழாகி உலகை வலம் வந்துக் கொண்டிருக்கிறது.

**ஊடகங்களில் தமிழ்**

கருத்துகளை, தகவல்களை ஒருவரிடமிருந்து மற்றவர்க்கு எடுத்துச் செல்லும் கருவிகளே தகவல் சாதனங்களாகும். செய்தித்தாள், வார, மாத இதழ்கள், வலைப்பக்கங்கள், குறுஞ்செய்திகள் என்ற நிலையில் தகவல் தொடர்புச் சாதனங்களில் தமிழ்மொழித் தனக்கென ஒரு தனி இடத்தைப் பெற்றுள்ளது. தொலைக்காட்சி ஒளி வழிகள் தமிழ் மக்களின் வாழ்க்கையோடு ஒன்றி உறவாடுவதால் அவை இங்கு ஆய்விற்குக் கொள்ளப்படுகின்றன.

தமிழ்நாடு, இலங்கை, சிங்கப்பூர், மலேசியா, கனடா ஆகிய நாடுகளின் ஒளிபரப்புகள், உலகம் தழுவிய ஒளிபரப்புகள், இணைய ஒளிபரப்புகள் என்ற நிலையில் அறுபதுக்கும் மேற்பட்ட தமிழ் ஒளி வழிகள் புலம் பெயர்ந்த தமிழர்களிடையே தமிழ் வளர்ச்சிப் பணியையும், குறிப்பாகப் பேச்சுத்தமிழ்ப் புழக்கத்தையும், தமிழார்வத்தையும், கலாச்சாரத் தொடர்பினையும் மேம்படுத்துவதில் தொலைக்காட்சி ஒளி வழிகள் சீரிய பங்கினை ஆற்றி வருகின்றன. சிங்கையில் தேசிய மொழியாக அங்கீகாரம் பெற்றுள்ள தமிழ்மொழி, வாழும் மொழியாக நிலைத்து நிற்கத் தொலைக்காட்சி ஒளி வழிகள் பெருந்துணை புரிகின்றன.

**அ.கி. பரந்தாமனார் (1994) தமிழ் இலக்கியம் கற்க**

தமிழிலக்கியம் கற்பதால் ஒருவர், தமிழக மக்கள் மன வளர்ச்சியைத் தெரிந்து கொள்வதோடு, கலையுணர்ச்சியையும் அழகுணர்ச்சியையும் பெற்று வாழ்க்கையை வளம்படுத்திக்கொள்ள முடியும். தண்டமிழர் பண்பாடடை அடைந்து சிறந்து விளங்கக் கூடும். நாட்டுப் பற்றைப் பெற்றுத் தாய் நாட்டின் முன்னேற்றத்திற்குப் பாடுபட்டு நன்மை புரிய முடியும். எல்லாவற்றத்திற்கும் மேலாக மனம் பண்படைந்து பிறவகையில் அடைய முடியாத இணையற்ற இலக்கிய இன்பத்தை எய்த முடியும். தமிழிலக்கியம் கற்பவர், ஆணாயினும், பெண்ணாயினும், தமிழ் நாட்டார் பழக்க வழக்கங்களையும் பண்பாட்டையும் நன்கறிந்து தமிழ்நாட்டாரோடு மனங்கலந்து வாழ முடியும். சிறப்பினைப் பெற்ற இலக்கியங்களை மாணவர்களுக்கு கற்பித்தல் வேண்டும்.

சங்க நூல்களை எடுத்துக் கொள்வோம். பத்துப்பாட்டு, தமிழக வரலாற்றுக்கு மிகவும் பயன்படுவது. கடின நடையுடையது. மொழித் தேர்ச்சியுள்ளவர்களுக்கு இன்பமளிக்கக்கூடியது. எட்டுத்தொகை நூல்களுள் புறநானூறும், குறுந்தொகையும், கலித்தொகையும் முயன்று படித்தால் இன்பமளிக்கத் தக்கவை. மற்ற ஐந்து நூல்களும் ஆராய்ச்சிக்கும் புலமைக்கும் பயன்படுபவை. இவற்றுள் ஒரு சில பாக்கள் இனியனவாக இருக்கும். நற்றிணை எல்லாருக்கும் இன்பமளிக்கக் கூடியதாக

இராது. பதிற்றுப்பத்து, சங்க காலத்தில் சேர நாட்டை ஆண்ட சேர மன்னர்களை குறித்துத் தெரிந்து கொள்வதற்குரிய நூல் பழந்தமிழ் நாட்டை அறிந்துக் கொள்ளப் புறநானூறு உதவும். குறுந்தொகை இனிய எளிய அகத்திணைப் பாக்களால் அமைந்தது.

சங்க நூல்களைக் கற்க விரும்புகின்றவர்கள் அகத்திணை, புறத்திணை இலக்கணங்களை ஓரளவாவது அறிந்து கொள்ள வேண்டும். அப்பொழுதுதான் வஞ்சித்திணை என்றால் இன்னது என்றும், காஞ்சித்திணை என்றால் இன்னது என்றும் பாடாண்திணை என்பது இது என்றும் தெரிந்து கொள்வது முடியும். அகத்திணை படித்தால்தான் 'வரைவிடை வைத்துப் பொருள் வயின் பிரிதல்' என்பது விளங்கும். காதல் வாழ்வும் கற்பு வாழ்வும் அகத்திணை எனப்படும். போர் வாழ்வும் பிறவும் புறத்திணை எனப்படும். காதல் வாழ்வைக் களவு என்றும்,மணந்து வாழும் வாழ்வைக் கற்பு என்றும் கூறுவர். போர், கல்வி, கடவுள் வாழ்த்து, ஆட்சிமுறை, அரசனைப் புகழ்ந்து பாடுதல் இன்னபிற புறத்திணை என்பர். இக்காலத்தில் இருதிணைகளைப் பற்றி விரிவாக விளக்கும் உரைநடை நூல்கள் உள்ளன. அவற்றைப் படித்தலே போதுமானது. இவ்விரண்டையும் படித்துவிட்டால் ஓரளவு கண் திறந்து விட்ட நிலை ஏற்படும். விரிவாகத் தெரிந்து கொள்ள விரும்புகிறவர்கள் நம்பியகப் பொருளையும் ஐயனாரிதனார் புறப்பொருள் வெண்பாமாலையையும் படிக்கலாம். இவ்வறிவு சங்க இலக்கியக் கோயில் வாயிலைத் திறக்கும் திறவு கோலாகும்.

### வ.சுப. மாணிக்கம் (1964) காப்பியப் பார்வை

இராமாயணக் கதையைக் காப்பியம் செய்யும் பாட்டுக்கள். கம்பரைக் கதைப் புலவர் ஆக்காது காப்பியப் புலவர் ஆக்கும் பாட்டுக்கள். ஏனைப் புலவர்களின் காப்பியங்களில் இவ்வளவு காப்பியப் பாட்டுக்கள் இல்லை. கம்பர் 'பாடுவதற்கு விரிந்த கதை பெற்றவர். அக்கதையை உலகத்தின் நாற்றிசையோடு தொடர்பு படுத்தி விரிந்த

காப்பியம் செய்தவர். ஆதலால் காப்பியம் ஆவதற்கு எப்படலங்களை அமைத்தாரோ, எத்துணை ஆயிரம் பாடல்களைப் பாடினாரோ அவற்றை முதன்மையாகப் பார்ப்பதுதான் காப்பியப் பார்வை. பாத்திரங்களை மாத்திரம் பார்த்துக் கொண்டிராது, அவற்றின் பேச்சுக்களை மாத்திரம் படித்துக் கொண்டிராது, இப்பாத்திரங்களுக்கு உலக வரங்கம் எவ்வண்ணம் தொடுக்கின்றார். மரஞ்செடி, கொடி, பறவை, விலங்கு, மலை, நிலம், கடல் முதலானவற்றை எவ்வாறு கதைக்குப் பக்குவப்படுத்துகின்றார் என்று காண்பது காப்பியப்பாவை. கதை என்பது அரிசி போல்வது. காப்பியம் என்பது சமையல் போல்வது இவ்வேறுபாட்டை யுணர்ந்து வரும் காலம் கம்பர்தம் காப்பியத்தை முழுமையாகக் கற்குமாக. கற்பிக்குமாக. பரப்புமாக. எழுதுமாக.

## வ.சுப. மாணிக்கம் (1964) காப்பிய நேர்மை

பாடம் அளவாக இருந்தாலும் நிரலாக இருக்க வேண்டும் என்பது என் கருத்து. கல்விச் செம்மையும் அறிவு வளர்ச்சியும் பாடலமைப்பைப் பொறுத்துப் பெரும் பாங்கு உள்ளது. ஒரு வகுப்பிற் படித்த பாடங்களே மறு மறு வகுப்புகளுக்கும் வருவதால் முறையான அறிவு வளர்ச்சியில்லை. திருக்குறளிற் சில அதிகாரங்களும் புறநானூற்றிற் சில பாடல்களும், சிலப்பதிகாரத்திற் சில காதைகளும், இராமாயணத்திற் சில படலச் செய்யுட்களும் இவ்வாறே பெரியபுராணம், திருவிளையாடற்புராணம், பாரதம், நளவெண்பா, மனோன்மணீயம் முதலிய நூற்பகுதிகளும் வந்தனவே மீண்டும் மீண்டும் பாடத்திட்டத்தில் தலையெடுக்கின்றன. அதனால் இளங்கலை, இளமறிவியல் வரை பதினைந்தாண்டுக்காலம் படித்தும் மாணவர்களுக்கு எந்த முழுநூற்பயிற்சியும் இல்லாது போதல் வருந்தத்தக்கது. இன்ன வகுப்பிற்கு இன்ன திருக்குறள், இன்ன புறநானூறு, இன்ன இலக்கியப் பகுதி, இன்ன சூத்திரம் என முறையாக நிரலாக வகுத்துப்பாட ஒழுங்குபடுத்திக் கொண்டால், பதினைந்தாண்டு கற்கும் மாணவன் திருக்குறள் முழுநூலைக் கற்றாகலாம். சிலப்பதிகாரத்தில் ஒரு காண்டமும்,

இராமாயணத்தில் பல படலங்களும் கற்றாகலாம். புறநானூறு பாடலையும் கற்கலாம் என்பதனை குறிப்பிடுகின்றார். இப்போது வைக்கும் பாடநூல்கள் தேர்வுக்குப் பின் பழங்கடை நூல்களாக ஆவது நம் பாடத்திட்டத்தின் குறைபாட்டிற்கு நல்ல எடுத்துக்காட்டு.

### டாக்டர் பி. இரத்தினசபாபதி (2007) செம்மொழிக் கல்வி

கல்வி ஏற்பாட்டின் பிறிதொரு கூறு 'கற்பிப்பு முறை'யாகும். எந்தெந்த நிலைகளில் எவ்வெம் முறைகளைக் கையாளுவது என்பதையும் கல்வி ஏற்பாடு வரையறுக்கிறது. கல்வியியல் ஆய்வுகள் உருவிலிருந்து நோக்கி வளர்ந்துவிட்ட இந்நாளில், அம்முறைகளைக் கல்வி ஏற்பாடு விரிவாகக் குறிக்காவிட்டாலும் கற்றல் கற்பித்தலின் நடுவணாக அமையும் முறைகளைக் குறித்தல் வேண்டும். கல்வி ஏற்பாட்டில் விளையாட்டு முறை, நடிப்பு முறை, உரையாடல் முறை போன்றன தொடக்க வகுப்புகளிலும் செயல்திட்டம், விரிவுரை, செயல் விளக்கம் போன்ற அதற்கு மேம்பட்ட நிலைகளிலும் பரிந்துரைக்கப்பட்டுள்ளன.

### டாக்டர் பி. இரத்தினசாமி (2007) அரிய தமிழ்க்கல்வி

தாய்மொழிக்கென அமைந்துள்ள அனைத்து சிறப்புகளும் தமிழ் மொழியைக் கற்பிக்க வேண்டியதன் இன்றியமையாமையை வலியுறுத்துவனாகும். அச்சிறப்புகளை மனத்திலேந்தியும் தமிழ் மொழியில் வளமூலங்களாகத் திகழும் இலக்கியப் படைப்புகளைக் கருத்திற்கொண்டும் கல்வியின் நிறைவு நோக்கங்களைக் கருதியும், தமிழ் கற்பிப்பதன் நோக்கங்களைக் கற்பவர் பயன் பெறுநிலையிலும் கற்பிப்பு முறை அடிப்படையிலும் காணலாம்.

### ஜோ. அருள்பிரகாஷ் (2007) (தமிழ்ப்பாடம் கற்பித்தலில் சிக்கல்கள்)

கல்லூரி அளவில் மாணவனையே கலைச்சொற்கள் உருவாக்க ஊக்குவிக்க வேண்டும்.மொழி அறிமுகம், மிரட்டலாக இல்லாமல், ஈர்ப்பாக இருக்கிற பொழுது

அவனக்குள் தன்னம்பிக்கை பிறக்கம். அந்தத் தன் நம்பிக்கை, மொழியை மேலும் சிறப்பாய்க் கற்க ஆர்வத்தைத் தூண்டும். அந்த ஆர்வமே கற்பித்தலில் உள்ள சிக்கல்களைப் பின்னுக்குத் தள்ளிவிடும். இந்தச் சிக்கல் தீர்ந்து விட்டால் அடுத்த தலைமுறைக்குத் தகுதி வாய்ந்த ஒரு தமிழ் மாணவனை உருவாக்கிய தன்னிகரில்லாத் தமிழாசிரியராகத் திகழ முடியும்.

## அறிஞர் அண்ணா (2009) ஏ! தாழ்ந்த தமிழகமே

நாவலர்களும், பாவலர்களும் சங்க இலக்கியங்களைச் சுற்றி நாலு பக்கமும் குவலிகள் அமைத்து இங்கு எட்டாத அளவுக்கு எட்டடி உயரத்தில் தடுப்புச் சுவரை எழுப்பி வைத்துக் கொண்டு "உள்ளே ஆடுது காளி, வேடிக்கைப் பார்க்க வாடி" என்பது போலத் தொல்காப்பியத்தைப் பாரீர். அரன் தொன்மையைக் காணீர் என்றால் அதனிடம் யார் அணுகுவார்? சங்க இலக்கியங்களை வீட்டை விட்டு வெளியேற்றி நாட்டிலே நடமாட விட வேண்டும். நடன சுந்தரிகளாகச் சிறுசிறு பிரதிகள் மூலம், தொல்காப்பியம் சிறுசிறு குழந்தைகளாக ஒவ்வொருவருடைய மடியிலேயும் மனத்திலேயும் தவழும், ஒவ்வோர் இல்லமும் இலக்கியப் பூங்காவாகக் காட்சியளிக்கும். இன்றைய புலவர்கள் உண்மையிலேயே இனிமையையும், எளிமையையும் சங்க இலக்கியத்துடன் சேர்த்து மக்களுக்கு ஊட்டியிருப்பார் களானால், சங்ககாலப் புலவர்களைப் போற்ற வேண்டும் என்ற எண்ணம் அவர்களுக்கு இருக்குமானால் அவர்கள் ஒவ்வோர் இல்லத்தையும் இலக்கியப் பூங்காவாக்கும் உழவர்களாக இருந்திருக்க வேண்டும். அண்ணா அவர்கள் தான் சங்க இலக்கியம் கற்கவேண்டும் என்று எண்ணினார். கல்லூரி வயதிலும் சங்கப்பாடலைப் படிக்கவில்லை என்ற ஆதங்கத்தை வெளிப்படுத்தியுள்ளார். பள்ளி, கல்லூரி, பொதுமக்களுக்கும் சங்கப் பாடல்களைத் தரமாகக் கற்பிக்கப்பட வேண்டும் என வலியுறுத்தியுள்ளார்.

## முனைவர் வீ. ரேவதி (2010) சங்க இலக்கியங்களில் திணைசார் மக்கள்

குறிஞ்சி நிலப்பகுதியில் குறவர், குன்றவர், வேட்டுவர் போன்ற இனத்தாரும் காடு சூழ்ந்த பகுதிகளான முல்லை நிலங்களில் ஆயர், ஆய்ச்சியர், வேளிர், பொறையன் போன்ற இனத்தாரும் மருத நிலப்பகுதிகளில் வேளாளர், வண்ணான், கம்மாளர், பறையர், குயவர், நெசவாளர் போன்ற இனத்தாரும் நெய்தல் நிலப்பகுதியில் பரதவர் போன்றவரும் பாலைநிலத்தில் எயினர், மறவர் போன்றோரும் வாழ்கின்றனர். இவர்களைத் தவிர அனைத்து நிலப்பகுதிகளிலும் இயங்குகின்ற பாணர், கூத்தர், வயிரியர், கண்ணுளர், துணங்கையர், கோடியர், விறலியர், பாடினி போன்ற கலைஞர் பெருமக்கள் குறித்தெல்லாம் சங்க இலக்கியங்களில் பரந்த நிலையில் இருக்கின்றன. சங்க இலக்கியத்தில் உள்ள ஐவகை நிலங்களையும், நிலத்தில் வாழும் மாந்தர்களையும் பற்றி கல்லூரி மாணவர்கள் அறியும் வகையில் கற்பித்தல் வேண்டும்.

## முனைவர் சிலம்பொலி சு. செல்லப்பன் (2010) உலகெங்கும் கொண்டு சேர்ப்போம் உயர்தனிச் செந்தமிழை

தமிழ் உலகெலாம் சீரொடும் சிறப்பொடும் வளர்ந்து வரும் சூழ்நிலை உருவாகியுள்ள இவ்வேளையில் தமிழர்கள் விழித்தெழுந்து தாய்த் தமிழைப் பேணிக் காக்க ஆற்ற வேண்டிய சில இன்றியமையாக் கடமைகள் உள்ளன. தமிழ்வழிக் கல்வி, ஆலயங்களில் தமிழர் வழிபாடு, ஆட்சியில் தமிழ், நீதிமன்றங்களில் தமிழ், தமிழ்நாட்டில் தமிழைக் கட்டாயமாகப் படிக்கின்ற நிலை, மருத்துவம் அறிவியல் கல்விகளில் தமிழ், தமிழ்வழிப் பயில்வோர்க்குத் தமிழ்நாட்டில் பணி அமர்த்தலில் முன்னுரிமை, தமிழன் தமிழனொடு தமிழில் பேசுவதைக் கடமையாகக் கருதும் சூழ்நிலை, தமிழ்ப் பெயர்கள் சூட்டுதல், பிறமொழிக் கலப்பைத் தவிர்த்தல்,

தமிழாய்ந்தோர்க்கு உரிய சிறப்பும் மதிப்புயளித்தல் ஆகிய செயல்கள் நடைமுறைப்படுத்தப்பட வேண்டும்.

*"தாயெழில் தமிழை என்றன்*
*தமிழரின் கவிதை தன்னை*
*ஆயிரம் மொழியிற்காண*
*இப்புவி அவாவிற்றென்றே*
*தோயுறும் மதுவின் ஆறு*
*தொடர்ந்தென்றன் செவியில் வந்து*
*பாயுநாள் எந்த நாளோ ?*
*ஆரிதைப் பகர்வார் இங்கே ?"*

(பாரதிதாசன்)

எனப் பாவேந்தர் பாரதிதாசன் ஏக்கத்தொடு பாடினார். அவர் ஏக்கம் நீங்க உலகெங்கும் தமிழை விரும்பி ஏற்கும் நிலையை மலரச் செய்வோமாக!

**முனைவர் ச. முத்துக்குமரன் (2010) தமிழ் இலக்கியங்களில் கல்வியியல் சிந்தனைகள்**

*"ஈதல் இயல்பு இயம்பும் காலைக்*
*காலமும் இடனும், வாலிதின் நோக்கிச்*
*சிறந்துழி இருந்து தன் தெய்வம் வாழ்த்தி*
*உரைக்கப்படும் பொருள் உள்ளத்து அமைத்து*
*வரையான் வெகுளான் விரும்பி முகம் மலர்ந்து*
*கொள்வாள் கொள்கை அறிந்து அவன் உளம் கொளக்*
*கோட்டமில் மனத்தின் நூல் கொடுத்தல் என்ப"*

(நன்னூல் 36)

என்று பவணந்தி முனிவர் பாடம் சொல்லும் முறையைக் கூறுவார். கற்பிக்க வேண்டியதை மனத்தில் அமைத்து வேகமாகச் செல்லாது, வெகுளாது, ஆவலுடன் முகம் மலர்ந்து மாணவனுக்கு விளங்கும் வகையில் அவன் உளம் கொளச்

சொல்லுவது என்பது நோக்கத்தக்கது. கற்பிப்பதற்குச் சிறந்த முறை ஒன்றல்ல பல என்பதும், மாணவரைப் பொறுத்தும், பாடத்தைப் பொறுத்தும் கற்பிக்கும் முறை மாறும் என்பதும் இங்குச் சொல்லப்படுகிறது.

இதுவரை தமிழ் இலக்கியங்களில் கல்வியிலும் சிந்தனைகளில் சில எடுத்துக்காட்டுகளாக அளிக்கப்பட்டன. இடமின்மை காரணமாகப் பல சிந்தனைகள், கருத்துகள், கோட்பாடுகள் இங்கு இடம் பெறவில்லை. மேற்சொன்னவற்றையும் இங்கு இடம் பெறாதவற்றையும் ஆழ்ந்து படிக்க வேண்டியது ஒவ்வொரு தமிழரின் கடமை. முக்கியமாகக் கல்வியாளர்கள், ஆசிரியர்கள் கற்க வேண்டும். அவ்வாறு கற்ற நமது நாட்டுக் கல்வியை நமது இலக்கியப் பண்பாட்டு அடிப்படையில் அமைத்தால், நம் குழந்தைகள் அவர்களுக்கு ஏற்ற கல்வியைப் பெறுவார்கள்.

**முனைவர் மு. ஆனந்த கிருஷ்ணன்: தமிழ்மொழி வளர்ச்சியில் இணையத்தின் பங்கு**

தமிழில் விக்கிப் பீடியா (WIKI PEDIYA) மிக வேகமாக வளர்ந்து வரும் கலைக்களஞ்சியமாகும். ஆங்கில மொழியில் பத்து ஆண்டுகளுக்கு முன்பு தொடங்கப்பட்ட இந்த கலைக்களஞ்சியத் திட்டம் உலக அளவில் பல்வேறு மொழிகளில் வேகமாக விரிவடைந்து வருகிறது. தற்பொழுது தமிழ் மொழியில் விக்கிப்பீடியாவால் 20.881 கட்டுரைகள் கொண்டு 68 ஆவது இடத்தில் உள்ளது. கோவைத்தமிழ் இணைய மாநாட்டினைத் தொடர்ந்து இக்கட்டுரைகளின் எண்ணிக்கையைப் பல மடங்கு அதிகரிப்பதற்கு ஆயிரக்கணக்கான கல்லூரி மாணவர்களுக்குப் பயிற்சியும் ஊக்கமும் அளிக்க முயற்சிகள் எடுக்கப்பட்டுள்ளன.

தமிழ் மொழி வளர்ச்சிக்கென மற்றுமோர் இன்றியமையாத தேவை கணினி மொழியியலின் (Computational Linguistics) அடிப்படையில் முதுநிலை பட்டப்படிப்புகளும், ஆய்வுகளும் மேற்கொள்ள வேண்டும். தற்போது மொழியியல்

பட்டப்படிப்பு மற்ற இந்திய மொழிகளைக் காட்டிலும் தமிழில் குறைவாகவே உள்ளது. சென்னைப் பல்கலைக் கழகத்தில் வளர்ந்து வந்த இத்துறை தற்போது நலிவடையும் நிலையில் உள்ளது. இந்நிலை மாறி தமிழ்நாட்டில் கணிதம், புள்ளியியல் மற்றும் கணினித் தொழில் நுட்பத்தோடு கூடிய தமிழ் மொழி இயல் மையங்கள் இரண்டு பல்கலைக்கழகங்களில் செயல்பட வேண்டும். இந்த மையங்களில் தமிழ்த் தரவு தொகுப்பைக் கணினி வழியில் உருவாக்க வேண்டும்.

## முனைவர் க. திருவாசகம்: கணினித் தமிழ் வளர்ச்சி

பல்லாயிரம் ஆண்டு வரலாற்றுப் பெருமையும் இலக்கிய, இலக்கண வளமும் உடைய செம்மொழித் தமிழ், இன்றைய கணினியுகத்தில் உலக அளவில் மேலைநாட்டு மொழிகளுக்கு இணையாக நடைபோட, கணினித் தமிழாகவும் நன்கு வளர்ச்சியடைய வேண்டும். தமிழ் மூலமே உலகில் எச்செயலையும் தமிழன் மேற்கொள்ளலாம் என்ற ஒரு நிலை உருவாக வேண்டும. செம்மொழித் தமிழுக்கு மேலும் சிறப்பூட்டும் வகையில், அதன் மற்றொரு மகுடமாகக் கணினித்தமிழ் அமைய வேண்டும்.

## அறிவியலறிஞர் மணவை முஸ்தபா : கணினிக் கலைச் சொல்லாக்கம்

கணினித் திரைகளில் தமிழ்மொழி உலா வந்து கொண்டிருக்கிறது. உரைத் தொகுப்பாளர்கள் (Text Editor), சொல் செயலிகள் (Word Processor), தகவல்தள மேலாண்மை (Database Management), இணை உலாவி (Browser), கணக்கியல் தொகுப்புகள் பயன்படும் பாடங்கள், வெளிநாட்டில் வாழும் மக்கள் தமிழ் கற்றுக் கொள்ள உதவும் தொகுப்பு, பல்லூடக விளையாட்டுகள் (Multimedia Game) இன்னும் இவை போன்ற மென்பொருள் தொகுப்புகள் தமிழ் மொழியிலேயே வெளிவந்து கொண்டிருக்கின்றன. இப்படிப்பட்ட காலத்தில்தான் நான்காம் தமிழாகிய அறிவியல் தமிழின் ஓர் அங்கமான 'கணினித்தமிழ்' செழுமை பெற்று வளரத்

துடித்துக் கொண்டிருக்கிறது. ஆனால், கணினி அறிவியல் வளர்ந்த வேகத்தில் கணினித் தமிழ் வளரவில்லை என்றே கூற வேண்டும்.

## முனைவர் ப. அர. நக்கீரன்: இணையத்தமிழ் வளர்ச்சி

மிக வேகமாக வளர்ந்துக் கொண்டிருக்கும் இணையத் தமிழின் சில பரிமாணங்கள் மட்டும் இங்கு சுருக்கமாகத் தொட்டுக் காட்டப்பட்டுள்ளன. மேல் விவரங்களுக்கு இணையத்தை அணுகப் பரிந்துரைக்கப்படுகிறது.

ஒரு மொழியின் வளர்ச்சி என்பது அந்த மொழியைப் பேசும் மக்களின் வளர்ச்சியைச் சார்ந்தே இருக்கும். மக்கள் வளராமல் மொழி மட்டும் வளர்ந்ததாக வரலாறு இல்லை. எனவே, மக்களை வளர்க்காமல் அவர்கள் பேசும் ஒரு மொழியை மட்டும் வளர்க்க முடியாது.

இன்றைய இணையத்தமிழின் வளர்ச்சிக்கும் தமிழர் சிலரின் பங்களிப்பே வேர்க் காரணமாக அமைந்திருக்கிறது. தமிழனால் தமிழ் வளர்வதும், தமிழால் தமிழன் வளர்வதும், முடிவில்லாத தொடர் ஓட்டமாகும். காலத்தால் அழியாது நிலைத்திருக்கும் நம் தமிழ் மொழியை அறிவியல் வளர்ச்சிக்கேற்ப வளர்க்க வேண்டியது தமிழர்களாகிய நம் கடமையாகும்.

## திரு. மா. ஆண்டோபீட்டர் (2010): கணினித் தமிழின் வளர்ச்சியும் சாதனைகளும்

இணையவழி வெளியீடுகள் சங்க இலக்கியங்களைப் பல மடங்கு பாதுகாப்பாக, புதுமெருகு குறையாமல் பல ஆண்டுகள் வரை வைத்திருக்க உதவுகின்றன. இவ்வாறான வெளியீடுகள் எல்லாச் சூழல்களிலும் எளிதில் பகிரிந்தளிக்கக் கூடியனவாகவும் இருக்கின்றன. இவற்றினால் இலக்கிய உலகில் பல சிறப்பான முன்னேற்ற நிலைகள் நிலவுகின்றன. இன்றைய நூல்களும், பல இடைக்கால இலக்கிய நூல்களும் கிடைக்கின்றன. இவற்றை எந்த ஒரு தனி நபரும்

உலகின் எந்த இடத்திலிருந்தும் எளிதில் படித்துக் கொள்ளலாம். இணைய வழிகளில் தமிழ் இலக்கியங்களைச் சிறப்பாகக் கற்பிக்க முடியும் என்பதனை நிறுவியுள்ளார்.

## 2.4 தொகுப்புரை

கற்பித்தல் குறித்த ஆய்வுகள் மேலை நாடுகளிலும், இந்தியாவிலும் மேற்கொள்ளப்பட்ட ஆய்வுகளைத் தேர்ந்தெடுக்கப்பட்டு தொகுக்கப்பட்டுள்ளன. தமிழில் சார்பு இலக்கிய கண்ணோட்டம் மிகவும் குறைவாகவே இருக்கின்றன.

இது போன்ற ஆய்வுத் தொடர்பாக ஏற்கனவே மேற்கொள்ளப்பட்ட ஆய்வுகளில் மேலைநாட்டு ஆய்வுகள் சிலவற்றையும், நம் நாட்டில் மேற்கொள்ளப்பட்ட ஆய்வுகள் சிலவற்றையும் குறித்து விளக்கப்பட்டுள்ளன.

# அட்டவணை-1



சென்னைப்பல்கலைக்கழகம்
சென்னை மாவட்டம்
அரசுக்கல்லூரிகள்
(தன்னாட்சி)
6
தன்னாட்சி இல்லாத
கல்லூரிகள்
Non Autonomous
NIL
அரசு உதவிபெறும் கல்லூரிகள்
(தன்னாட்சி)
8
தன்னாட்சி இல்லாத
கல்லூரிகள்
Non Autonomous
6
சுயநிதிக்கல்லூரிகள்
(தன்னாட்சி)
1
தன்னாட்சி இல்லாத
கல்லூரிகள்
Non Autonomous
21

# அட்டவணை-2



சென்னைப் பல்கலைக்கழகம்
காஞ்சிபுரம் மாவட்டம்
அரசுக்கல்லூரிகள்
(தன்னாட்சி)
NIL
தன்னாட்சி இல்லாத
கல்லூரிகள்
Non Autonomous
1
அரசு உதவிபெறும் கல்லூரிகள்
(தன்னாட்சி)
3
தன்னாட்சி இல்லாத
கல்லூரிகள்
Non Autonomous
5
தனியார் கல்லூரிகள்
(தன்னாட்சி)
NIL
தன்னாட்சி இல்லாத
கல்லூரிகள்
Non Autonomous
26

# அட்டவணை-3



சென்னைப்பல்கலைக்கழகம்
திருவள்ளூர் மாவட்டம்
அரசுக்கல்லூரிகள்
(தன்னாட்சி)
1
தன்னாட்சி இல்லாத
கல்லூரிகள்
Non Autonomous
2
அரசு உதவிபெறும் கல்லூரிகள்
(தன்னாட்சி)
NIL
தன்னாட்சி இல்லாத
கல்லூரிகள்
Non Autonomous
1
சுயநிதிக்கல்லூரிகள்
(தன்னாட்சி)
NIL
தன்னாட்சி இல்லாத
கல்லூரிகள்
Non Autonomous
20

# இயல் - 3

# ஆய்வு நெறிமுறைகள்

# RESEARCH METHODOLOGY

## 3.1 முன்னுரை

ஆய்வு என்பது உண்மையை அறிவதற்காகச் செய்யப்படும் வினை என்றும், நோக்குடைய ஒன்றை மிக்க கவனத்தோடும் முயற்சியோடும் நுட்பமாய்த் தேடுதல் என்றும் கூறப்படுகிறது. பிரச்சனையைத் தேர்ந்தெடுப்பது ஒரு நிலை. அவற்றைத் தொகுப்பதும், பகுத்தலும் இன்னொரு நிலை. பதிவு செய்வது வேறுநிலை. இவையாவும் உள்ளடங்கியதே ஆராய்ச்சியாகும்.

இந்த இயலில் ஆய்வு மேற்கொள்ளப்பட்ட வழிமுறைகள் குறித்து விளக்கப்பட்டுள்ளது. ஆய்வு வடிவமைப்பு, கருதுகோள்கள், மாதிரிகள், ஆய்வுக் கருவிகள் தேர்ந்தெடுத்தல் முதலியனவற்றை இவ்வியலில் விளக்கப்பட்டுள்ளது.

## 3.2 ஆராய்ச்சி வடிவமைப்பைக் காட்டும் வரைபடம்




## 3.3 பரிசோதனை முறை ஆய்வு

இவ்வாய்வு 'பரிசோதனை முறை' ஆய்வு ஆகும். கவனமாகக் கட்டுப்பாடுகளுக்குட்பட்ட சூழ்நிலையில் நிகழ்த்தப்படும் ஆய்வு 'பரிசோதனை முறை ஆய்வு' எனப்படும். பரிசோதனை ஆய்வில் அறிவியல் ஆராய்ச்சி நெறிமுறைகள் இயன்ற அளவு பின்பற்றப்படுகிறது. பரிசோதனை ஆராய்ச்சிகளின் விளைவாக

கல்வி நோக்கங்களும், உடனடி குறிக்கோள்களும் பரிசிலிக்கப்பட்டு கற்பித்தலில் அதிகத் திறன் வாய்ந்தவையாக மாற்றியமைக்கப்படுகின்றன.

இவ்வாய்வில் சென்னைப் பல்கலைக்கழகத்தின் கட்டுப்பாட்டில் இயங்கும். அரசு, அரசு உதவி பெறும் கல்லூரிகள், தனியார் கல்லூரிகளில் பயிலும் மாணவர்களைச் சங்க இலக்கியம் கற்பித்தல் வினா நிரல் மூலமாக ஆய்வு மேற்கொள்ளப்பட்டு உள்ளன.

## ஆய்வுத் தலைப்பு

**சென்னைப் பல்கலைக்கழக மொழிப் பாடத்திட்டத்தில் சங்க இலக்கியம் கற்பித்தல் முறைகள் (2000 முதல் 2010 வரை).**

## 3.4.1 இந்த ஆய்வின் நோக்கங்களாவன: (Objectives)

1. சங்க இலக்கியத்தின் முக்கியத்துவத்தினை உணர்த்த அறிவுறுத்தல்.
2. சென்னைப் பல்கலைக் கழகத்தின் கீழ் இயங்கும் தன்னாட்சிக் கல்லூரிகளை விடுத்துப் பிற கல்லூரிகளில் சங்க இலக்கியம் கற்பித்தலை ஆராய்தல்.
3. அரசு, அரசு உதவி பெறும் தனியார் கல்லூரிகளை வகைப்படுத்துதல்.
4. கற்பித்தலின் போது மாணவர்களின் மனநிலையை ஆராய்தல்.
5. கற்பித்தல் துணைக்கருவிகளின் முக்கியத்துவத்தினைக் கூறுதல்.
6. நூல்வழிக் கற்பித்தலோடு துணைக்கருவி மூலம் கற்பித்தலையும் எடுத்துக் காட்டுதல்.
7. சங்கப்பாடலின் முக்கியத்துவத்தை மாணவர்களுக்கு உணர்தல்.
8. மூன்று வகையான கல்லூரிகளில் கற்பித்தல் வேறுபாடுகளை கண்டறிதல்.
9. பழந்தமிழர்களின் பண்பாட்டை மாணவர்களுக்கு உணர்த்துதல்.
10. உலக மொழிகளை விட தமிழ்மொழியின் சிறப்பினை கூறுதல்.

## அட்டவணை-4

### கருதுகோள்களின் வகைப்பாடு பற்றிய விளக்கப்படம்

### கருதுகோள் (HYPOTHESIS)



## 3.5 கருதுகோள்கள் (Hypotheses)

1. செவ்வியல் இலக்கியம் பற்றிய செய்திகளை மாணவர்கள் அறிந்துள்ளனர்.
2. சங்கப்பாடலில் உள்ள திணை வகைகளை மாணவர்கள் தெரிந்துள்ளனர்.
3. சங்கப்பாடலை மனப்பாடம் செய்வதற்கு மாணவர்கள் ஆர்வமுடன் இருக்கின்றனர்.
4. சங்க இலக்கியங்களில் உள்ள அகத்துறைகளை பற்றியும், புறத்துறைகளையும் பற்றி மாணவர்கள் தெரிந்துள்ளனர்.
5. தொகை நூல்களைப் பற்றி மாணவர்கள் அறிந்துள்ளனர்.
6. சங்கப்பாடல் தொடர்பான பல செய்திகளைப் பற்றி ஆசிரியர்களுடன் மாணவர்கள் ஆலோசனை நடத்துகின்றனர்.
7. சங்க இலக்கியம் தொடர்பான பல கருத்துக்களை தெரிந்துக் கொள்ள மாணவர்கள் ஆர்வமுடன் இருக்கின்றனர்.
8. செய்யுள், வடிவிலான சங்கப்பாடலை புரிந்துக் கொள்ள மாணவர்கள் சிரமப்படுகின்றனர்.
9. சங்கப்பாடலை நடத்தும் போது வகுப்பறையில் கற்பித்தல் துணைக்கருவிகளை சில சமயங்களில் மட்டும் பயன்படுத்துகின்றனர்.
10. சங்க இலக்கியத்தை இயற்றிய புலவர்களை பற்றி மாணவர்கள் அறிந்துள்ளனர்.
11. புறநானூற்றுப் பாடலில் உள்ள நட்பின் மாந்தர்களைப் பற்றி மாணவர்கள் தெரிந்துள்ளனர்.
12. ஆசிரியர் சங்கப்பாடலைக் கற்பிக்கும் போது மாணவர்களின் விருப்பத்தை புரிந்துள்ளனர்.
13. பண்டைய தமிழர்களின் பழக்க வழக்கங்களை வகுப்பறையில் மாணவர்களுக்கு ஆசிரியர் விளக்குகிறார்.

14. சங்க இலக்கியத்தில் காணப்படும் அழகுணர்ச்சிகளை மாணவர்கள் அறிந்துள்ளனர்.

15. மூன்று சங்க வரலாற்றைப் பற்றி மாணவர்கள் அறிந்துள்ளனர்.

16. செம்மொழிப் பண்புகளைப் பற்றி மாணவர்களுக்கு ஆசிரியர் விளக்கியுள்ளார்.

17. ஐவகை நிலங்களைப் பற்றி மாணவர்கள் தெரிந்துள்ளனர்.

18. பெரும் பொழுதுகளைப் பற்றியும், சிறுபொழுதுகளைப் பற்றியும் மாணவர்கள் தெரிந்துள்ளனர்.

19. அகத்திணை மாந்தர்களை பற்றி மாணவர்கள் அறிந்துள்ளனர்.

20. சங்கப்பாடலில் உள்ள போர்ச் செய்திகளை மாணவர்கள் அறிந்துள்ளனர்.

21. அரசு, அரசு உதவி பெறும், தனியார் கற்பித்தல் முறையில் வேறுபாடுகள் காணப்படுகின்றன.

22. கற்பித்தல் துணைக்கருவிகளின் முக்கியத்துவத்தினை அறிந்துள்ளனர்.

23. கல்லூரிகளுக்குள் ஆசிரியர் மாணவர்களிடையே கற்பித்தல் மற்றும் கற்றலில் வேறுபாடுகள் நிலவுகின்றன.

24. மொழிப் பாடம் கற்பிக்கும் ஆசிரியர்களுக்குக் கணினி அறிவு இருக்கிறது.

# பொது விவரம்

1. மாணவர் பெயர் :
2. வகுப்பும் பிரிவும் :
3. கல்லூரியின் பெயரும் முகவரியும் :
4. கல்லூரி வகை : அரசு கல்லூரி/ அரசு உதவிப்பெறும் கல்லூரி/ தனியார் கல்லூரி
5. இனம் : ஆண்/பெண்
6. மதம் : இந்து/முஸ்லீம்/கிறிஸ்துவம்
7. இருப்பிடம் : கிராமம்/நகரம்
8. முக்கியப்பாடப்பிரிவு : அறிவியல்/கலை
9. பெற்றோர்களில் கல்வித்தகுதி : 10, +2/ பி.ஏ., பி.எஸ்.ஸி., பி.காம்./ எம்.ஏ., எம்.எஸ்.ஸி., எம்.காம்.
10. பெற்றோர்களின் தொழில் :
11. பெற்றோர்களின் ஆண்டு வருமானம் :

1. மாணவர்கள் :
2. வகுப்பும் பிரிவும் :
3. கல்லூரியின் பெயரும் முகவரியும் :
4. கல்லூரி வகை :
5. இனம் :
6. மதம் :
7. இருப்பிடம் :
8. முக்கியப்பாடப்பிரிவு :
9. பெற்றோர்களின் கல்வித்தகுதி :
10. பெற்றோர்களின் தொழில் :
11. பெற்றோர்களின் ஆண்டு வருமானம் :

# அட்டவணை-5


மாதிரிக் கூறினைத் தேர்ந்தெடுக்கும் முறைகள்
மிகுவாய்ப்பு அடிப்படை மாதிரி முறை
குறைவாய்ப்பு அடிப்படை மாதிரிமுறை
தாமே முடிவு செய்யும் மாதிரி
தற்செயல் மாதிரி
வசதிக்கேற்ற மாதிரி
பங்கு அளவு மாதிரி
எளியதன் நிகழ்வு மாதிரி
அடுக்குமுறை தன் நிகழ்வு மாதிரி
முறைப்படி அமைந்ததன் நிகழ்வு மாதிரி
இருமுறை மாதிரி எடுத்தல்
கொத்துமுறை மாதிரி எடுத்தல்

## 3.6 மாறிகள்

இவ்வாய்விற்கென எடுத்துக் கொள்ளப்பட்ட மாறிகள்

- ★ சார்பற்ற மாறிகள்
- ★ சார்புடைய மாறிகள்
- ★ கட்டுப்படுத்தப்பட்ட மாறிகள்

முதலியனவாகும்.

- ◆ சங்க இலக்கியம் மாணவர்களுக்கு எளிமையாகக் கற்பித்தல்.
- ◆ கற்பித்தல் துணைக்கருவிகளைக் கொண்டு கற்பித்தலை மேற்கொள்ளுதல்.
- ◆ கல்லூரி மாணவர்களுக்குக் கற்பித்தல் முறைகள்

ஆகியன சார்பற்ற மாறிகள் ஆகும்.

- சங்கப்பாடலை மாணவர்கள் கற்பித்தல் அடைவு
- செய்யுள் உள்ள மனப்பான்மை
- சங்கப்பாடல் குறித்த மனப்பான்மை

ஆகியவை சார்புடைய மாறிகள் ஆகும்.

## 3.7 மாதிரிக்கூறு (Sampling)

சென்னைப் பல்கலைக்கழகத்தின் கட்டுப்பாட்டில் இருக்கும் தன்னாட்சி கல்லூரிகளை விடுவித்து அரசு கல்லூரிகள், அரசு உதவிப்பெறும் கல்லூரிகள், தனியார் கல்லூரிகள், 1800 மாணவர்கள் / மாணவியர்கள் ஆய்வுக்கு மாதிரிகளாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

இரண்டாம் ஆண்டு மொழிப்பாடம் பயிலும் (பி.ஏ., பி.எஸ்.ஸி., பி.சி.ஏ.) வகுப்புகளில் மாணவர்கள் 966, மாணவியர்களும் 834 மாதிரிகளாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

## 3.8 ஆய்வுக்கருவிகள் (Tools and Techniques)

ஆய்வினைக்குத் தேவையான தரவுகளைப் பெறுவதற்காக வினா கருவிகள் பயன்படுத்தப்பட்டன. அவை,

1. சங்கப்பாடல் சோதிக்கும் வினாநிரல்.
2. கற்பிப்பித்தல் துணைக்கருவிகளின் வினாநிரல்.
3. கற்பித்தல் தொடர்பான ஆசிரியர்களுக்கான நேர்காணல் வினா நிரல்.

### 3.8.1 ஆய்வுக்கருவிகளுக்கான விளக்கம்

மாணவர்களிடமிருந்து விவரங்களைச் சேகரிப்பதற்குப் பல்கலைக்கழகம் இரண்டாமாண்டு பாடப்புத்தகத்திலிருந்து எடுத்தாளப்பட்ட கற்பித்தலைச் சோதிக்கும் வினாத்தாள், ஆசிரியர்களுக்கான நேர்காணல் வினா நிரல்களைப் பெறப்பட்டன.

### 3.8.2 ஆய்வுக்கருவி-1

கற்பித்தலைச் சோதிக்கும் வினாத்தாள்

**புத்தகம்:** பல்கலைக்கழக இரண்டாமாண்டு மொழிப்பாட புத்தகம் (2000 முதல் 2010 வரை)

**வகுப்பு:** பட்ட வகுப்பு இரண்டாமாண்டு மாணவர்கள் மட்டும் (பி.ஏ., பி.எஸ்.ஸி., பி.சி.ஏ.)

**பாடம்:** சங்க இலக்கியம்

இந்த வினாத்தாளில் மொத்தம் ஐம்பது வகையிலான வினாக்கள் இடம் பெற்றுள்ளன. நேர்மறை வினாக்களுக்கு 5.4.3.2.1 எதிர்மறை வினாக்களுக்கு 1.2.3.4.5 மொத்தம் 250 மதிப்பெண்கள் தரப்பட்டிருந்தன.

### 3.8.3 ஆய்வுக்கருவி-2

சங்க இலக்கியம் கற்பித்தல் காட்டும் வினாப்பட்டியல்

சங்கப்பாடல் கற்பித்தல் குறித்த அளவிடும் அளவுகோல். இதில் 50 கூற்றுகள் இடம் பெற்றுள்ளன. ஒவ்வொரு கூற்றும் ஐந்நிலைப் புள்ளியில் (Five Point Scale) விடையளிக்கும் வகையில் அமைந்திருந்தது.

- எப்போதும்
- அடிக்கடி
- சில சமயங்களில்
- எப்போதாவது
- எப்போதுமில்லை

என்ற ஐந்துநிலைகளில் வினாநிரல் பெறப்பட்டன.

இதில் 5 வகைகளுக்கும் விடையளிக்கும் வகையில் 50 வினாக்கள் இடம் பெற்றிருந்தன. விடையளிக்க (✓) என்ற குறியீடு இடுமாறு கேட்டுக் கொள்ளப்பட்டது.

இதன் நம்பகத்தன்மையானது நேர்கூற்று முறையில் கண்டறியப் பட்டது. சங்க இலக்கியம் கற்பித்தல் குறித்த அளவுகோலின் நம்பகத்தன்மையானது 0.01 நிலையில் 0.9 ஆகயிருப்பதால் கற்பித்தல் மனப்பான்மை அளவுகோல் அதிக நம்பகத்தன்மை உடையதாக இருக்கிறது.

## மாதிரிகளுக்கான அளவுகள்

## அட்டவணை – 3.6

| கல்லூரி வகை | கல்லூரிகள் பெயர் | மாணவர்களின் எண்ணிக்கை | | மொத்தம் |
|---|---|---|---|---|
| | | ஆண் | பெண் | |
| அரசு கல்லூரி | அருள்மிகு. சுப்பிரமணி அரசினர் கலைக்கல்லூரி, திருத்தணி | 166 | 34 | 200 |
| | உலக நாராயணசாமி அரசு கல்லூரி, பொன்னேரி. | 150 | 50 | 200 |
| | இராஜேஸ்வரி வேதாசலம் அரசு கலைக்கல்லூரி, செங்கற்பட்டு–1. | 116 | 84 | 200 |
| அரசு உதவி பெறும் கல்லூரி | பச்சையப்பன் கல்லூரி, சென்னை–30. | 200 | – | 200 |
| | சர் தியாகராயர் கலை மற்றும் அறிவியல் கல்லூரி, வண்ணாரப்பேட்டை, சென்னை–21. | 134 | 66 | 200 |
| | செல்லம்மாள் மகளிர் கலை மற்றும் அறிவியல் கல்லூரி, கிண்டி, சென்னை–32. | – | 200 | 200 |
| தனியார் கல்லூரி | ஜெயா கலை மற்றும் அறிவியல் கல்லூரி, திருநின்றவூர் | 100 | 100 | 200 |
| | ஸ்ரீசந்திரா பிரபு ஜெயின் கலை மற்றும் அறிவிபல் கல்லூரி, மீஞ்சூர்–203. | 100 | 100 | 200 |
| | டாக்டர் எம்.ஜி.ஆர் ஜானகி மகளிர் கலை மற்றும் அறிவியல் கல்லூரி, அடையார், சென்னை–28. | – | 200 | 200 |
| | மொத்தம் | 966 | 834 | 1800 |



# ஸ்ரீ சுப்பிரமணியசுவாமி அரசினர் கலைக்கல்லூரி திருத்தணி




# உலகநாத நாராயணசாமி அரசினர் கல்லூரி
# பொன்னேரி




ராஜேஸ்வரி வேதாச்சலம் அரசினர் கலைக் கல்லூரி
செங்கல்பட்டு



# பச்சையப்பன் கலைக் கல்லூரி
# சென்னை




சர் தியாகராயா கலைக் கல்லூரி

வண்ணாரப்பேட்டை

சென்னை




# செல்லம்மாள் மகளிர் கலைக் கல்லூரி
# கிண்டி, சென்னை–32



ஜெயா கலை மற்றும் அறிவியல் கல்லூரி
திருநின்றவூர்




# ஸ்ரீ சந்திர பிரபு ஜெயின் கல்லூரி மீஞ்சூர்




டாக்டர். எம் ஜி ஆர் ஜானகி மகளிர் அறிவியல் மற்றும் கலைக் கல்லூரி

ஆர்.ஏ. புரம், சென்னை–28

## 3.9 முதன்மை ஆய்வு (PILOT STUDY)

இந்த ஆய்விற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட இளங்கலை இரண்டாம் ஆண்டு பயிலும் அனைத்து பிரிவு மாணவர்களுக்கும் சங்க இலக்கியம் கற்பித்தல் வினா நிரல்களை நவம்பர் மாதம் 2011 ஆண்டு 200 மாணவர் / மாணவியர்களிடம் இருந்து சங்க இலக்கியம் கற்பித்தல் முறைகள் வினா நிரல் பெறப்பட்டன.

## 3.10 நம்பகத்தன்மை (RELIABITY)

"சென்னைப் பல்கலைக்கழக மொழிப் பாடத்திட்டத்தில் சங்க இலக்கியம் கற்பித்தல் முறைகள்" (2010 வரை) சங்க இலக்கியம் கற்பித்தல் வினா நிரல் நம்பகத்தன்மை (Test-Retest) முறையின் மூலமாகக் கண்டறியப்பட்டது. இவ்வினா நிரலின் ஏற்புடைமையானது 0.78 எனக் கண்டறியப்பட்டுள்ளது.

## 3.11 ஏற்புடைமை (VALIDITY)

"சென்னைப் பல்கலைக்கழக மொழிப் பாடத்திட்டத்தில் சங்க இலக்கியம் கற்பித்தல் முறைகள்" (2010 வரை) சங்க இலக்கியம் கற்பித்தல் வினா நிரல் ஏற்புடைமை (Test-Retest) முறையின் மூலமாகக் கண்டறியப்பட்டது. இவ்வினா நிரலின் ஏற்புடைமையானது 0.88 எனக் கண்டறியப்பட்டுள்ளது.

## 3.12 புள்ளியியல் கருவி (STATISTICAL TECHNIQUES)

இவ்வாய்வுக்குப் பயன்படுத்தப்பட்ட கணித வாய்ப்பாடு

- கூட்டுசராசரி MEAN
- திட்டவிலக்கம் STANDARD DEVIATION
- சோதனை 't' test
- சோதனை 'F' test
- சார்புடைய குழு CORRELATION

**1. சராசரி (Arithmetic mean) (x)**

Mean is the simplest measures of central tendency. Which is calculated by adding all the scores and dividing the sum by the number of scores.

கூட்டுசராசரி $\bar{x} = A + \left[\frac{\sum fd}{\sum f}\right] \times i$

Where,

A = கருதப்படும் கூட்டுச் சராசரி (Assumed Mean)

D = கருதப்படும் கூட்டுச் சராசரியிலிருந்து எடுக்கப்படும் விளக்கம் (Deviation from the assumed mean)

F = அலைவெண் (Frequency)

I = பிரிவு இடைவேளை (Class Interval)

**2. கூட்டு திட்டவிலக்கம் (Standard Deviation)**

The standard deviation is defined as the square root of mean of the squares of the items taken from the arithmetic mean of the distribution.

$$\sigma = i\sqrt{\frac{\sum fd^2}{N} - \left[\frac{\sum fd}{N}\right]^2}$$

Where, i = பிரிவு இடைவெளி (Class Interval)

f = அலைவெண் (Frequency)

n = மொத்தம் அலைவெண் (Total No. of Frequencies)

d = விளக்கம் (Deviation)

**3. Karl pearson's correlation co efficient**

$$\square = \frac{N\sum dx\sum dy - \sum dx\sum dy}{\sqrt{\left[N\sum dx^2 - (\sum dx^2)\right]\left\{(N\sum dy^2 - (\sum dy)^2)\right\}}}$$

Where dx = கருதப்படும் கூட்டுச்சராசரி A-லிருந்து எடுக்கப்பட்ட X என்ற மாறியின் தொடர்ச்சியான மதிப்புகளுக்கான விலக்கம் (deviation of continuous values of the variable x from the assumed mean A)

dy = கருதப்படும் கூட்டுச்சராசரி Y-லிருந்து எடுக்கப்பட்ட B என்ற மாறியின் தொடர்ச்சியான மதிப்புகளுக்கான விலக்கம் (deviation of continuous values of the variably from the assumed means B)

N = ஜோடிகளின் எண்ணிக்கை (Number of Pairs)

Σdx = X என்ற மாறியின் தொடர்ச்சியான மதிப்புகளுக்கான விலக்கங்களின் கூடுதல் (Summation of deviations of continuous values of the variable x)

Σdy = X என்ற மாறியின் தொடர்ச்சியான மதிப்புகளுக்கான விலக்கங்களின் வர்க்கக் கூடுதல் Summation of deviations of continuous values of the variable y.

$\Sigma d^2x$ = X என்ற மாறியின் தொடர்ச்சியான மதிப்புகளுக்கான விலக்கங்களின் வர்க்கக் கூடுதல் Summation of the square of deviations of continuous values of the variable x.

$\Sigma d^2y$ = Y என்ற மாறியின் தொடர்ச்சியான மதிப்புகளுக்கான விலக்கங்களின் வர்க்கக் கூடுதல் (Summation of the square of deviations of continuous values of the variabley)

$\Sigma dxdy$= X மற்றும் Y என்ற மாறிகளின் தொடர்ச்சியான மதிப்புகளுக்கான பெருக்கத்திற்கானக் கூடுதல் (Summation of the product of deviations of continuous values of the variables x and y)

**4. `t' சோதனை (Test)**

If mean and standard deviation are given the `t' value is calculated from the following formula

$$\text{`t' மதிப்பு} = \frac{x - x^2}{S.EM}$$

$$\text{Here S. Em} = \sqrt{\frac{\sigma_1^{\ 2}}{N_1} + \frac{\sigma_2^{\ 2}}{N_2}}$$

**5. `F' சோதனை (Test)**

F விகிதம் (ratio) = குழுக்களின் இடையேயான பரவற்படி / குழுக்களுக்குள் ஆன பரவற்படி (Variance between the group / variance within the group

சரிபார்த்தல் உறுப்பு

$$\text{(Correction term c)} = \frac{\sum x_1 + \sum x_2 + \sum x_3}{N}$$

TSS = வர்க்கங்களின் கூடுதலுக்கான மொத்தம் (Total sum of squares) $x_2 - c$

BSS = குழுக்களுக்கு இடையேயான வர்க்கங்களின் கூடுதல்

(Sum of squares between groups)

$(\Sigma x_1)^2 / W_1 + (\Sigma x_2)^2 / W_2 + (\Sigma x_3)^2 / W_3$ - c where $x_1, x_2$, $x_3$ are score in different group

## அட்டவணை – 3.7

### அரசு கல்லூரிகள் மாதிரி கூறுகளை பற்றி விளக்கும் அட்டவணை

| வ.எண். | கல்லூரி | ஆண் | பெண் | மொத்தம் |
|---|---|---|---|---|
| 1. | அருள்மிகு. சுப்பிரமணி அரசினர் கலைக்கல்லூரி, திருத்தணி. | 166 | 34 | 200 |
| 2. | உலகநாத நாராயணசாமி அரசு கல்லூரி, பொன்னேரி. | 150 | 50 | 200 |
| 3. | இராஜேஸ்வரி வேதாசலம் அரசு கலைக்கல்லூரி, செங்கற்பட்டு–1. | 116 | 84 | 200 |
| | மொத்தம் | 432 | 168 | 600 |

- அரசு கல்லூரிகளில் மேற்கொண்ட ஆய்வில் திருத்தணி அரசு கல்லூரிகளில் மாணவர்கள் 166, மாணவிகள் 34 பேரும் ஆய்விற்கு உட்படுத்தப்பட்டன. மாணவர்களைக் காட்டிலும் மாணவர்கள் அதிகமானோர் பங்கு பெற்றனர்.
- செங்கல்பட்டு அரசு கல்லூரியில் மேற்கொண்ட மாணவர்கள் 150 மாணவிகள் 50 பேர் ஆய்விற்கு உட்படுத்தப்பட்டனர். மாணவர்களைக் காட்டிலும் மாணவிகள் குறைவாகவே பங்கு பெற்றனர்.
- பொன்னேரி அரசு கல்லூரியில் மேற்கொண்ட ஆய்வில் மாணவர்கள் 116பேரும், மாணவிகள் 84 பேரும் ஆய்விற்கு உட்படுத்தப்பட்டன. மாணவர்களைக் காட்டிலும், மாணவியர் குறைவாகவே பங்கு பெற்றனர்.



வரைபடம் 3.5
அரசுகல்லூரிகள் மாதிரிக் கூறுகளை குறிக்கும் வரைபடம்
180
160
140
120
100
80
60
40
20
0
ஆண்
பெண்
அருள்மிகு. சுப்பிரமணி அரசினர் கலைக்கல்லூரி, திருத்தணி.
உலகநாத நாராயணசாமி அரசு கல்லூரி, பொன்னேரி.
இராஜேஸ்வரி வேதாசலம் அரசு கலைக்கல்லூரி, செங்கற்பட்டு–1.

## அட்டவணை – 3.8

## அரசு உதவி பெறும் கல்லூரிகளின் மாதிரிகளை விளக்கும் அட்டவணை

| வ.எண். | கல்லூரி | ஆண் | பெண் | மொத்தம் |
|---|---|---|---|---|
| 1. | பச்சையப்பன் கலைக்கல்லூரி, சென்னை–30. | 200 | – | 200 |
| 2. | சர் தியாகராயா கலை மற்றும் அறிவியல் கல்லூரி, வண்ணாரப்பேட்டை, சென்னை–21. | 134 | 66 | 200 |
| 3. | செல்லம்மாள் மகளிர் கலைக்கல்லூரி, சென்னை–32. | – | 200 | 200 |
| | மொத்தம் | 334 | 266 | 600 |

- சென்னை பச்சையப்பன் கல்லூரியில் மேற்கொண்ட ஆய்வில் மாணவர்கள் 200 பேர் பங்கு கொண்டனர்.
- சர் தியாகராயா கலை மற்றும் அறிவியல் கஸ்தூரிபாய் மேற்கொண்டஆய்வில் மாணவர்கள் 134 பேரும், மாணவிகள் 66 பேரும் ஆய்விற்கு உட்படுத்தப் பட்டனர். மாணவர்களை காட்டிலும் மாணவியர்கள் குறைவாகவே பங்கு பெற்றனர்.
- சென்னை கிண்டியில் உள்ள செல்லம்மாள் மகளிர் கலைக் கல்லூரியில் மேற்கொண்ட ஆய்வில் 200 மாணவிகள் பங்கு பெற்றனர்.

## வரைபடம் : 3.6

## அரசு உதவி பெறும் கல்லூரிகளின் மாதிரிகளை விளக்கும் அட்டவணை



அட்டவணை – 3.9

தனியார் கல்லூரிகளின் மாதிரிகளை விளக்கும் அட்டவணை

| வ.எண். | கல்லூரி | ஆண் | பெண் | மொத்தம் |
|---|---|---|---|---|
| 1. | ஜெயா கலை மற்றும் அறிவியல் கல்லூரி, திருநின்றவூர் | 100 | 100 | 200 |
| 2. | ஸ்ரீ சந்திராபிரபு ஜெயின் கலை மற்றும் அறிவியல் கல்லூரி, மீஞ்சூர். | 100 | 100 | 200 |
| 3. | டாக்டர் எம்.ஜி.ஆர். ஜானகி மகளிர் கலை மற்றும் அறிவியல் கல்லூரி, அடையார், சென்னை–28. | – | 200 | 200 |
| | மொத்தம் | 200 | 400 | 600 |

- ஜெயா கல்லூரியில் மேற்கொண்ட ஆய்வில் மாணவர்கள் 100 பேரும், மாணவிகள் 100 பேரும் ஆய்விற்கு உட்படுத்தப்பட்டனர். இதில் மாணவர்களும், மாணவியர்களும் சமமாகப் பங்குப் பெற்றனர்.

- ஸ்ரீ சந்திரா பிரபு ஜெயின் கல்லூரியில் மேற்கொண்ட ஆய்வில் மாணவர்கள் 100 பேரும், மாணவிகள் 100 பேரும் ஆய்விற்கு உட்படுத்தப்பட்டனர். இதில் மாணவர்களும், மாணவியர்களும் சமமாகப் பங்குப் பெற்றனர்.

- டாக்டர் எம்.ஜி.ஆர் ஜானகி மகளிர் கல்லூரியில் மேற்கொண்ட ஆய்வில் 200 மாணவிகள் பங்குப் பெற்றனர்.

## வரைபடம் 3.7
## தனியார் கல்லூரிகளின் மாதிரிகளை விளக்கும் வரைபடம்



அட்டவணை – 3.10

பெற்றோர்களின் கல்வித் தகுதி மாதிரி கூறுகளை விளக்கும் அட்டவணை

| மாறிகள் | கூட்டுச்சராசரி mean | திட்டவிலக்கம் Std-Div. | மொத்த எண்ணிக்கை |
|---|---|---|---|
| படிப்பறிவின்மை | 175.54 | 28.03 | 601 |
| பள்ளிப்படிப்பு | 174.65 | 26.24 | 932 |
| பட்டப்படிப்பு | 174.14 | 26.29 | 183 |
| பட்ட மேற்படிப்பு | 177.38 | 26.01 | 84 |

- அனைத்துக் கல்லூரியில் மேற்கொண்ட ஆய்வில் மாணவர்களின் பெற்றோர்களின் கல்வித்தகுதிக்கான ஆய்வு மேற்கொள்ளப்பட்டது.
- திட்டவிலக்கக் கணக்கின்படி 28.03 படிப்பறிவின்மை அதிகமான பெற்றோர்கள் இருக்கின்றனர்.
- பள்ளிப்படிப்பு (10, +2) 26.24 விழுக்காடு பெற்றோர்கள் இருக்கின்றனர்.
- 26.29 விழுக்காடு பெற்றோர்கள் (பி.ஏ. பி.எஸ்.ஸி., பிசிஏ) பட்டப்படிப்பினை படித்தவர்களாக இருக்கின்றனர்.
- 26.01 விழுக்காடு பெற்றோர்கள் பட்டமேற்படிப்பினைப் (எம்.ஏ., எம்.எஸ்ஸி., எம்.ஃபில்., எம்.எட்., பி.எச்டி.) படித்தவர்களாக இருக்கின்றனர்.

**வரைபடம் 3.8**
**பெற்றோர்களின் கல்வித்தகுதி மாதிரி கூறுகளை விளக்கும் வரைபடம்**



அட்டவணை – 3.11

**பெற்றோர்களின் ஆண்டு வருமானம் மாதிரி கூறுகளை விளக்கும் அட்டவணை**

| மாறிகள் | கூட்டுச்சராசரி mean | திட்டவிலக்கம் Std-Div. | மொத்த எண்ணிக்கை |
|---|---|---|---|
| 30000க்கு குறைவு | 174.56 | 25.98 | 957 |
| 30000க்கு மேல் | 175.53 | 27.80 | 841 |

- மாணவர்களின் பெற்றோர்களின் ஆண்டு வருமானம் பற்றிய கூறுகள், 30000க்குக் குறைவான வருமானம் உள்ளவர்கள் திட்டவிலக்கத்தின்படி 25.98 விழுக்காடு உள்ளனர்.
- மாணவர்களின் பெற்றோர்களின் ஆண்டு வருமானம் பற்றிய கூறுகள், 30000க்கு அதிகமான வருமானம் உள்ளவர்கள் திட்டவிலக்கத்தின்படி 27.80 விழுக்காடு உள்ளனர்.

## அட்டவணை – 3.12

**பெற்றோர்களின் தொழில்கள் மாதிரி கூறுகளைப் பற்றி விளக்கும் அட்டவணை**

| மாறிகள் | கூட்டுச்சராசரி mean | திட்டவிலக்கம் Std-Div. | மொத்த எண்ணிக்கை |
|---|---|---|---|
| அரசு வேலை | 172.97 | 28.50 | 145 |
| தனியார் தொழில் துறை | 169.64 | 20.27 | 28 |
| சுயத்தொழில் | 175.30 | 26.77 | 1627 |

- மாணவர்களின் பெற்றோர்களின் தொழில்களைப் பற்றி ஆய்வு மேற்கொள்ளப் பட்டது. அரசுவேலையில் உள்ளவர்கள் 145 பேர் உள்ளனர்.
- தனியார் துறையில் வேலை செய்பவர்களின் எண்ணிக்கை 28 பேர் உள்ளன.
- சுயத்தொழிலைச் செய்பவர்கள் 1627 பேர் உள்ளனர்.

**வரைபடம் 3.10**

**பெற்றோர்களின் தொழில்கள் மாதிரிக் கூறுகளை விளக்கும் வரைபடம்**



## அட்டவணை – 3.13

## மாணவர்களின் மதங்கள் மாதிரி கூறுகளைப் பற்றி விளக்கும் அட்டவணை

| மாறிகள் | கூட்டுச்சராசரி mean | திட்டவிலக்கம் Std-Div. | மொத்த எண்ணிக்கை |
|---|---|---|---|
| இந்து | 175.96 | 27.21 | 1630 |
| கிருத்துவம் | 176.86 | 22.71 | 123 |
| இசுலாமியம் | 172.27 | 23.32 | 47 |

மாணவர்களின் பெற்றோர்களின் மதங்கள் பற்றிய கூறுகள் கணக்கிடப் பட்டுள்ளன. இந்து மதத்தைச் சார்ந்தவர்கள் 1630 பேரும், கிருத்து மதத்தைச் சார்ந்தவர்கள் 123 பேரும், இசுலாமியம் மதத்தைச் சார்ந்தவர்கள் 47 பேரும் உள்ளனர். இதில் இந்து மதத்தைச் சார்ந்தவர்கள் மிக அதிக எண்ணிக்கைக் கொண்டவர்களாக இருக்கின்றனர்.

**வரைபடம் 3.11**

**மாணவர்களின் மதங்களை விளக்கும் வரைபடம்**



## தொகுப்புரை

ஆய்வாளரின் ஆய்வு நெறிமுறைகளின் வழி கிடைத்த அனுபவத்தின் வாயிலாகவும் கல ஆய்வின் துணைக்கொண்டு யூகிக்கப்பட்டுத் தேர்ந்தெடுக்கப்பட்ட மேற்காணும் கருதுகோள் திரட்டப்பட்ட தகவல்களின் உண்மைத் தன்மையோடு ஏற்புடையனவாக உள்ளனவா அல்லது நிராகரிக்கத்தக்கதாக உள்ளதா என ஆராய அடுத்த இயலில் புள்ளியியல் பகுத்தாய்வின் அடிப்படையில் அமைந்துள்ள கணக்கீட்டாய்வு மூலம் மேற்கொள்ளப்படுகிறது.

# *இயல் - 4*

# புள்ளியியல் பகுத்தாய்தலும் விளக்குதலும்

## ANALYSIS AND INTERPRETATION OF THE DATA

## 4.1 முன்னுரை

இந்த ஆய்வு "சென்னைப் பல்கலைக்கழக மொழிப் பாடத்திட்டத்தில் சங்க இலக்கியம் கற்பித்தல் முறைகள்" (2000 முதல் 2010 வரை). எனவே இந்த ஆய்வின் நோக்கம் தமிழ்மொழிப்பாடத்திட்டப் பிரிவில் கல்லூரி பயிலும் இரண்டாம் ஆண்டு மாணவ / மாணவியர்களின் கற்பித்தலில் எவ்வாறு சிறப்பினைப் பெற்று இருக்கின்றனர் என்பதனைப் பலவிதமான துணை மாதிரிகளைக் கொண்டு ஆராயப்பட்டது. மேலும் சேகரிக்கப்பட்ட மற்றும் ஆராயப்பட்ட விவரங்களையும் கருதுகோள்களின் உண்மை தன்மைகளையும் பற்றி இந்த இயலில் விரிவாகக் காண்போம்.

## 4.2 புள்ளியியல்

"அளவிடக்கூடிய விவரங்களைச் சேகரித்து, ஒழுங்குபடுத்தி, பகுத்துப் பொருள் கூறும் செயல்களால் ஆன தொகுதி" என்றும் "புள்ளியியல்" வரையறுக்கப்படுகிறது.

அறிவியல் முறையில் ஒரு பிரிவே புள்ளியியலாகும். "சராசரிகளின் அறிவியலே புள்ளியியல்" என்று பேராசிரியர் "பௌலி" வரையறுத்துள்ளார். இதன் அடிப்படையில், கிடைக்கப்பெற்ற புள்ளி விவரங்களைச் சேகரிப்பது முக்கியமான ஒன்றாகும். புள்ளியியல் விவரங்களை மேற்கொண்டு ஆராய்ச்சி செய்வதால் ஆராய்ச்சியாளரின் முடிவுகள் தெளிவாகவும், துல்லியமானதாகவும் அடைய உதவுகின்றன. இந்த இயலில் புள்ளி விவர பகுப்பாய்வு அட்டவணைகள், கருதுகோள்களைச் சோதித்தல் ஆகியவை இடம் பெற்றுள்ளன.

சேகரிக்கப்பட்ட புள்ளி விவரங்கள் ஆராயப்பட்டுத் தனித்தனியாகப் பகுக்கப்பட்டன. பகுத்தாய்ந்த விவரங்களிலிருந்து சராசரி, திட்ட விலக்கம் கண்டுபிடிக்கப்பட்டன. CR (Correlation Analysis) மதிப்பு மற்றும் ஒட்டுறவு முறைப்படி கண்டுபிடிக்கப்பட்டு தீர்வுக் காண பயன்படுத்தப்பட்டது.

## கருதுகோள் - 1

**சங்க இலக்கியம் கற்பித்தலில் மாணவர்களின் பாலினத்தை விளக்கும் அட்டவணை**

**அட்டவணை – 4.1**

| பாலினம் | நிகழ்வெண் | சதவீதம் | ஏற்ற சதவீதம் | குவிவு சதவீதம் |
|---|---|---|---|---|
| ஆண் | 966 | 53.7 | 53.7 | 53.7 |
| பெண் | 834 | 46.3 | 46.3 | 46.3 |
| **மொத்தம்** | **1800** | **100.0** | **100.0** | **100.0** |

**மேற்குறிப்பிட்ட அட்டவணை எண் 4.1 நிகழ்வெண், சதவீதம், ஏற்ற சதவீதம், குவிவு சதவீதம், கணக்கின்படி மாணவிகளின் எண்ணிக்கைவிட மாணவர்கள் சதவீதம் 53.7 அதிகமாகவே காணப்படுகின்றார்கள்.**


வரைபடம் 4.1
சங்கஇலக்கியம் கற்பித்தலின் பாலினத்தை விளக்கும் வரைபடம்
53.7
46.3
54
52
50
48
46
44
42
ஆண்
பெண்

## கருதுகோள் - 2

**அரசு கல்லூரிகள், அரசு உதவிபெறும் கல்லூரிகள், தனியார் கல்லூரிகளின் மொத்த மாணவர்களின் எண்ணிக்கையை விளக்கும் அட்டவணை**

**அட்டவணை – 4.2**

| வ. எண் | கல்லூரி வகை | நிகழ்வெண் | சதவீதம் | ஏற்ற சதவீதம் | குவிவு சதவீதம் |
|---|---|---|---|---|---|
| 1. | அரசு கல்லூரிகள் | 600 | 33.3 | 33.3 | 33.3 |
| 2. | அரசு உதவிபெறும் கல்லூரிகள் | 600 | 33.3 | 33.3 | 66.7 |
| 3. | தனியார் கல்லூரிகள் | 600 | 33.3 | 33.3 | – |
| | **மொத்தம்** | **1800** | **100.0** | **100.0** | **100.0** |

மேற்குறிப்பிட்ட அட்டவணை எண் 4.2 நிகழ்வெண், சதவீதம், ஏற்ற சதவீதம், குவிவு சதவீதம், கணக்கின் படி அரசு கல்லூரிகள், அரசு உதவி பெறும் கல்லூரிகள், தனியார் கல்லூரியின் மாணவர்களின் எண்ணிக்கையில் எந்த மாற்றமும் காணப்படவில்லை.

**வரைபடம் 4.2**

**அரசு கல்லூரி, அரசு உதவிப்பெறும் கல்லூரி, தனியார் கல்லூரி மொத்த மாணவர்களின் எண்ணிக்கையை விளக்கும் வரைபடம்**






## கருதுகோள் - 3

### கல்லூரி மாணவர்களின் இருப்பிடத்தை விளக்கும் அட்டவணை

### அட்டவணை – 4.3

| மாறிகள் | நிகழ்வெண் | சதவீதம் | ஏற்ற சதவீதம் | குவிவு சதவீதம் |
|---|---|---|---|---|
| கிராமம் | 1022 | 56.8 | 56.8 | 56.8 |
| நகரம் | 778 | 43.2 | 43.2 | 43.2 |
| **மொத்தம்** | **1800** | **100.0** | **100.0** | **100.0** |

மேற்குறிப்பிட்ட அட்டவணை எண் 4.3 நிகழ்வெண், சதவீதம், ஏற்ற சதவீதம், குவிவு சதவீதம், கணக்கிடப்பட்ட கிராமப்புற மாணவர்களின் எண்ணிக்கை சதவீதம் 56.8 நகரம் மாணவர்களின் எண்ணிக்கை சதவீதம் 43.2 வேறுபாடு காணப்படுகின்றன.

**வரைபடம் 4.3.**
**கல்லூரி மாணவர்களின் இருப்பிடம்**
**மாதிரிக் கூறகளை விளக்கும் வரைபடம்**



## கருதுகோள் - 4

### கல்லூரிகளில் பயிலும் மாணவர்களின் முக்கியப்பாடப்பிரிவுகளை விளக்கும் அட்டவணை

### அட்டவணை – 4.4

| முக்கியப் பாடப்பிரிவு | நிகழ்வெண் | சதவீதம் | ஏற்ற சதவீதம் | குவிவு சதவீதம் |
|---|---|---|---|---|
| கலைபிரிவு | 900 | 50.0 | 50.0 | 50.0 |
| அறிவியல் பிரிவு | 900 | 50.0 | 50.0 | 50.0 |
| **மொத்தம்** | **1800** | **100.0** | **100.0** | **100.0** |

மேற்குறிப்பிட்ட அட்டவணை எண் 4.4 நிகழ்வெண், சதவீதம், ஏற்ற சதவீதம், குவிவு சதவீதம், கணக்கிடப்பட்ட அடிப்படையில் கலை மற்றும் அறிவியல் பிரிவில் மாற்றம் எதுவும் காணப்படவில்லை.

**வரைபடம் 4.4.**

**கல்லூரிகளில் பயிலும் மாணவர்களின் முக்கியப் பாடப்பிரிவுகளை விளக்கும் வரைபடம்**







கலைபிரிவு அறிவியல் பிரிவு

## கருதுகோள் - 5

மாணவர்களின் பெற்றோர்களின் கல்வித்தகுதியை
விளக்கும் அட்டவணை

அட்டவணை – 4.5

| மாறிகள் | நிகழ்வெண் | சதவீதம் | ஏற்ற சதவீதம் |
|---|---|---|---|
| படிப்பின்மை | 601 | 33.4 | 33.4 |
| பள்ளிப்படிப்பு | 932 | 51.8 | 51.8 |
| பட்டப்படிப்பு | 183 | 10.2 | 10.2 |
| பட்ட மேற்படிப்பு | 84 | 4.7 | 4.7 |
| **மொத்தம்** | **1800** | **100.0** | **100.0** |

மேற்குறிப்பிட்ட அட்டவணை எண் 4.5 நிகழ்வெண், சதவீதம், ஏற்ற சதவீதம், கணக்கின் அடிப்படையில் படிப்பின்மை 33.4 சதவீதமும், பள்ளிப்படிப்பு 51.8 சதவீதமும், பட்டப்படிப்பு 10.2 சதவீதமும், பட்டமேற்படிப்பு 4.7 சதவீதம் வேறுபாடுகள் காணப்படுகின்றன.

வரைபடம் 4.5.
பெற்றோர்களின் கல்வித் தகுதியை விளக்கும் வரைபடம்



## கருதுகோள் - 6

மாணவர்களின் பெற்றோர்களின் ஆண்டு வருமானத்தை
விளக்கும் அட்டவணை

**அட்டவணை – 4.6**

| மாறிகள் | நிகழ்வெண் | சதவீதம் | ஏற்ற சதவீதம் | குவிவு சதவீதம் |
|---|---|---|---|---|
| 30000 குறைவு | 957 | 53.2 | 53.2 | 53.3 |
| 30000 மேல் | 841 | 46.7 | 46.7 | 46.7 |
| **மொத்தம்** | **1800** | **100.0** | **100.0** | 100.0 |

மேற்குறிப்பிட்ட அட்டவணை எண் **4.6** நிகழ்வெண், சதவீதம், ஏற்ற சதவீதம், குவிவு சதவீதம், கணக்கின்படி **30000**க்கு குறைவான ஆண்டு வருமானம் பெறுபவர்களின் சதவீதம் **53.2, 30000**க்கு மேல் ஆண்டு வருமானம் பெறுபவர்களின் சதவீதம் **46.7** எனவே பெற்றோர்களின் ஆண்டு வருமானத்தில் மாற்றம் காணப்படுகின்றன.

**வரைபடம். 4. 6**

**பெற்றோர்களின் ஆண்டு வருமானத்தை விளக்கும் வரைபடம்**



## கருதுகோள் - 7

கல்லூரி மாணவர்களின் பெற்றோர்களின்
தொழில் வகைகளை விளக்கும் அட்டவணை

அட்டவணை – 4.7

| தொழில் வகை | நிகழ்வெண் | சதவீதம் | ஏற்ற சதவீதம் |
|---|---|---|---|
| அரசு வேலை | 145 | 8.1 | 8.1 |
| தகவல் (I.T.) தொழில்துறை | 28 | 1.6 | 1.6 |
| சுயத்தொழில் | 1627 | 90.4 | 90.4 |
| **மொத்தம்** | **1800** | **100.0** | **100.0** |

**மேற்குறிப்பிட்ட அட்டவணை எண் 4.7 நிகழ்வெண், சதவீதம், ஏற்ற சதவீதம், கணக்கிடப்பட்டுள்ள அரசுவேலையில் உள்ளவர்களின் 8.1 சதவீதம், தகவல் தொழில் துறை வேலையில் இருப்பவர்களின் சதவீதம் 1.6 சுயத்தொழிலைச் செய்பவர்கள் சதவீதம் 90.4 எனவே பெற்றோர்களின் தொழிலில் மாற்றம் காணப்படுகின்றன.**

**வரைபடம் 4.7.**

**பெற்றோர்களின் தொழில் வகைகளை விளக்கும் வரைபடம்**



## கருதுகோள் - 8

மாணவர்களின் மதங்களைப் பற்றி விளக்கும் அட்டவணை

அட்டவணை – **4.8**

| மாதிரிகள் | நிகழ்வெண் | சதவீதம் | ஏற்ற சதவீதம் |
|---|---|---|---|
| இந்து மதம் | 1630 | 90.6 | 90.6 |
| கிறித்துவ மதம் | 123 | 6.8 | 6.8 |
| இசுலாம் மதம் | 47 | 2.6 | 2.6 |
| **மொத்தம்** | **1800** | **100.0** | **100.0** |

**மேற்குறிப்பிட்ட அட்டவணை எண் 4.8 நிகழ்வெண், சதவீதம், ஏற்ற சதவீதம், கணக்கிடப்பட்ட அடிப்படையில் இந்து மதத்தைச் சார்ந்தவர்களின் சதவீதம் 90.6 கிறித்துவ மதத்தைச் சார்ந்தவர்களின் சதவீதம் 6.8 இசுலாம் மதத்தைச் சார்ந்தவர்களின் சதவீதம் 2.6 உள்ளன என்பதனை அட்டவணை விளக்குகின்றது.**




வரைபடம் 4.8.
மாணவர்கள் மதங்களைப் பற்றி விளக்கும் வரைபடம்

## கருதுகோள் - 9

சென்னைப் பல்கலைக்கழக மொழிப் பாடத்திட்டத்தில்

பாலின அடிப்படையில் சங்க இலக்கியம் கற்பித்தல்

't' சோதனையின் பட்டியல்

அட்டவணை – 4.9

| பாலினம் | எண் | கூட்டுச்சராசரி | திட்டவிலக்கம் | 't' மதிப்பு | L.S |
|---|---|---|---|---|---|
| ஆண் | 966 | 1.99 | .348 | 1.29 | N.S |
| பெண் | 834 | 2.01 | .323 | | |

மேற்குறிப்பிட்ட அட்டவணை எண் 4.9 திட்டவிலக்கம், கூட்டுச்சராசரி, மற்றும் 't' மதிப்பின் படி கணக்கிடப்பட்ட கல்லூரி மாணவர்களுக்கு இடையேயான பாலின அடிப்படையில் சங்க இலக்கியம் கற்பித்தலில் எந்த வேறுபாடும் காணப்படவில்லை.

எனவே இன்மைக் கருதுகோள் ஏற்றுக்கொள்ளப்படுகிறது.

**வரைபடம் 4.9.**

**மொழிப்பாடத்திட்டத்தில் பாலின அடிப்படையில் சங்க இலக்கியம் கற்பித்தலை விளக்கும் வரைபடம்**



## கருதுகோள் - 10

### சென்னைப் பல்கலைக்கழக மொழிப் பாடத்திட்டத்தில் இருப்பிடம் அடிப்படையில் சங்க இலக்கியம் கற்பித்தல் 't' சோதனையின் பட்டியல்

### அட்டவணை – 4.10

| இருப்பிடம் | எண் | கூட்டுச் சராசரி | திட்டவிலக்கம் | 't' மதிப்பு | L.S |
|---|---|---|---|---|---|
| கிராமம் | 1022 | 1.98 | .305 | 2.10 | 0.05 |
| நகரம் | 778 | 2.02 | .374 | | |

மேற்குறிப்பிட்ட அட்டவணை எண் **4.10** திட்டவிலக்கம், கூட்டுச்சராசரி மற்றும் 't' மதிப்பின் படி கணக்கிடப்பட்ட கல்லூரி மாணவர்களிடையே இருப்பிட அடிப்படையில் சங்க இலக்கியம் கற்பித்தல் **0.05** அடிப்படையில் வேறுபாடுகள் அமைந்து காணப்படுகிறது.

எனவே இன்மைக் கருதுகோள் நிராகரிக்கப்படுகிறது.

**வரைபடம் 4.10.**

**சென்னைப் பல்கலைக்கழக மொழிப் பாடத்திட்டத்தில் இருப்பிடம் அடிப்படையில் சங்க இலக்கியம் கற்பித்தலை விளக்கும் வரைபடம்**



**கருதுகோள் - 11**

**சென்னைப் பல்கலைக்கழக மொழிப் பாடத்திட்டத்தில்**

**முக்கியப் பாடப்பிரிவில் சங்க இலக்கியம் கற்பித்தல்**

**'t' சோதனையின் பட்டியல்**

**அட்டவணை – 4.11**

| முக்கியப் பாடப்பிரிவு | எண் | கூட்டுச் சராசரி | திட்டவிலக்கம் | 't' மதிப்பு | L.S |
|---|---|---|---|---|---|
| கலை | 900 | 2.02 | .368 | 2.52 | 0.05 |
| அறிவியல் | 900 | 1.98 | .301 | | |

மேற்குறிப்பிட்ட அட்டவணை எண் **4.11** திட்டவிலக்கம், கூட்டுச்சராசரி, மற்றும் 't' மதிப்பின் படி கணக்கிடப்பட்ட கல்லூரி மாணவர்களுக்குள்ளேயான முக்கியப்பாடப்பிரிவு அடிப்படையில் சங்க இலக்கியம் கற்பித்தலில் **0.05** வேறுபாடுகள் அமைந்து காணப்படுகிறது.

எனவே இன்மைக்கருதுகோள் நிராகரிக்கப்படுகிறது.

**வரைபடம் 4.11.**
**சென்னைப் பல்கலைக்கழக மொழிப் பாடத்திட்டத்தில் முக்கியப் பாடப்பிரிவில் சங்க இலக்கியம் கற்பித்தலை விளக்கும் வரைபடம்**



## கருதுகோள் - 12

சென்னைப் பல்கலைக்கழக மொழிப் பாடத்திட்டத்தில்

கல்லூரியின் வகையின் அடிப்படையில் சங்க இலக்கியம் கற்பித்தல்

அட்டவணை – 4.12

| மாதிரிகள் | விலக்க வர்க்கக் கூடுதல் | விலக்க வர்க்க சராசரி | df | 't' மதிப்பு | L.S |
|---|---|---|---|---|---|
| குழுக்களுக்குள் இடையே பாவற்படி | 31906.65 | 15953.32 | 2 | 22.68 | .01 |
| குழுக்களுக்குள்ள ஆன பாவற்படி | 31906.90 | 703.29 | 1797 | | |
| மொத்தம் | 1295719.55 | – | 1799 | | |

மேற்குறிப்பிட்ட அட்டவணை எண் 4.12 விலக்கவர்க்கக்கூடுதல், விலக்கவர்க்க சராசரி மற்றும் 'F விகிதம் படி கணக்கிடப்பட்ட சங்க இலக்கியம் கற்பித்தலுக்கும் மற்றும் கல்லூரி வகைகளில் .01 இடையே வேறுபாடு காணப்படுகின்றது.

எனவே இன்மைக் கருதுகோள் நிராகரிக்கப்படுகிறது.

## கருதுகோள் - 13

சென்னைப் பல்கலைக்கழக மொழிப் பாடத்திட்டத்தில் அரசு கல்லூரிகள், அரசு உதவி பெறும் கல்லூரிகள், தனியார் கல்லூரிகளிடையே உள்ள சங்க இலக்கியம் கற்பித்தல்

அட்டவணை – 4.13

| மாதிரிகள் | மொத்த எண்ணிக்கை | கூட்டுச் சராசரி | திட்ட விலக்கம் | SE | 't' விகிதம் | LS |
|---|---|---|---|---|---|---|
| அரசு கல்லூரிகள் | 600 | 171.24 | 23.41 | .95 | 6.56 | 0.01 |
| அரசு உதவி பெறும் கல்லூரிகள் | 600 | 180.90 | 27.41 | .11 | | |
| அரசு கல்லூரிகள் | 600 | 171.24 | 23.41 | .95 | 1.13 | NS |
| தனியார் கல்லூரிகள் | 600 | 172.93 | 28.45 | 1.16 | | |
| அரசு உதவி பெறும் கல்லூரிகள் | 600 | 180.90 | 27.41 | 1.11 | 4.94 | 0.01 |
| தனியார் கல்லூரிகள் | 600 | 172.93 | 28.45 | 1.16 | | |

மேற்குறிப்பிட்ட அட்டவணை எண் 4.13 கூட்டுச்சராசரி, திட்டவிலக்கம் மற்றும் 't' விகிதம் படி கணக்கிடப்பட்ட சங்க இலக்கியம் கற்பித்தலில் கல்லூரிகளிடையே வேறுபாடு நிலவுகின்றன. அரசு, அரசு உதவி பெறும் கல்லூரிகளிடையே 0.01 வேறுபாடும் அரசு, தனியார் கல்லூரிகளிடையே வேறுபாடு காணப்படவில்லை. அரசு உதவிபெறும் கல்லூரி, தனியார் கல்லூரிகளிடையே 0.01 வேறுபாடு காணப்படுகின்றது.

எனவே இன்மைக் கருதுகோள் நிராகரிக்கப்படுகிறது.

**வரைபடம் 4.12.**

**சென்னைப் பல்கலைக்கழக மொழிப் பாடத்திட்டத்தில் அரசு கல்லூரிகள், அரசு உதவி பெறும் கல்லூரிகள், சுயநிதிக்கல்லூரிகளிடையே உள்ள அடிப்படையில் சங்க இலக்கியம் கற்பித்தலின் விளக்கும் வரைபடம்**



## கருதுகோள் - 14

**சென்னைப் பல்கலைக்கழக மொழிப் பாடத்திட்டத்தில் பெற்றோர்களின் கல்வித்தகுதி அடிப்படையில் சங்க இலக்கியம் கற்பித்தல்**

**அட்டவணை – 4.14**

| மாதிரிகள் | விலக்க வர்க்கக் கூடுதல் | விலக்க வர்க்கச் சராசரி | df | 'F' விகிதம் | LS |
|---|---|---|---|---|---|
| குழுவினருக்கு இடையே | 900.10 | 300.03 | 3 | .4162 | NS |
| குழுவினருக்கு உள்ள | 1294819.45 | 720.94 | 1796 | | |
| **மொத்தம்** | **1295719.55** | – | **1799** | | |

மேற்குறிப்பிட்ட அட்டவணை எண் **4.14** விலக்கவர்க்கக் கூடுதல், விலக்க வர்க்கச் சராசரி மற்றும் ஒருங்கிணைந்த கூறுகள் **(df)** மற்றும் **'F'** விகிதம் படி கணக்கிடப்பட்ட பெற்றோர்களின் கல்வித்தகுதியில் எந்த வேறுபாடும் காணப்படவில்லை.

எனவே இன்மைக் கருதுகோள் ஏற்றுக்கொள்ளப்படுகிறது.

## கருதுகோள் - 15

சென்னைப் பல்கலைக்கழக மொழிப் பாடத்திட்டத்தில் பெற்றோர்களின் ஆண்டு வருமானம் அடிப்படையில் சங்க இலக்கியம் கற்பித்தல்

அட்டவணை – 4.15

| மாதிரிகள் | விலக்க வர்க்கக் கூடுதல் | விலக்க வர்க்கச் சராசரி | df | 'F' விகிதம் | LS |
|---|---|---|---|---|---|
| 30,000க்குள் | 604.36 | 774.41 | 2 | 1.07 | NS |
| 30,000க்கு மேல் | 129511.19 | 720.18 | 720.18 | | |
| **மொத்தம்** | **1295719.55** | – | **1799** | | |

**மேற்குறிப்பிட்ட அட்டவணை எண் 4.15 விலக்க வர்க்கக் கூடுதல், விலக்க வர்க்கச் சராசரி ஒருங்கிணைந்த கூறுகள் மற்றும் 'F' விகிதம் படி கணக்கிடப்பட்ட கல்லூரி மாணவர்கள் இடையே பெற்றோர்களின் ஆண்டு வருமானம் அடிப்படையில் சங்க இலக்கியம் கற்பித்தலில் வேறுபாடு காணப்படவில்லை.**

**எனவே இன்மைக் கருதுகோள் ஏற்றுக்கொள்ளப்படுகிறது.**

## கருதுகோள் - 16

சென்னைப் பல்கலைக்கழக மொழிப் பாடத்திட்டத்தில் பெற்றோர்களின் தொழில்வகை அடிப்படையில் சங்க இலக்கியம் கற்பித்தல்

அட்டவணை – 4.16

| மாதிரிகள் | விலக்க வர்க்கக் கூடுதல் | விலக்க வர்க்கச் சராசரி | df | 'F' விகிதம் | LS |
|---|---|---|---|---|---|
| குழுவினருக்கு இடையே உள்ள வேறுபாடு | 1548.83 | 774.41 | 2 | 1.07 | NS |
| குழுவினருக்கு உள்ள வேறுபாடு | 1294170.71 | 720.18 | 1797 | | |
| மொத்தம் | 1295719.55 | – | 1799 | | |

மேற்குறிப்பிட்ட அட்டவணை எண் 4.16 விலக்கவர்க்கக் கூடுதல், விலக்க வர்க்கச் சராசரி ஒருங்கிணைந்த கூறுகள் மற்றும் (df) மற்றும் 'F' விகிதம் படி கணக்கிடப்பட்ட கல்லூரி மாணவர்களிடையே பெற்றோர்களின் தொழில்வகை அடிப்படையில் சங்க இலக்கியம் கற்பித்தலில் எந்த வேறுபாடும் காணப்படவில்லை.

எனவே இன்மைக் கருதுகோள் ஏற்றுக்கொள்ளப்படுகிறது.

## கருதுகோள் - 17

சென்னைப் பல்கலைக்கழக மொழிப் பாடத்திட்டத்தில்

மதங்கள் அடிப்படையில் சங்க இலக்கியம் கற்பித்தல்

அட்டவணை – 4.17

| மாதிரிகள் | விலக்க வர்க்கக் கூடுதல் | விலக்க வர்க்கச் சராசரி | df | 'F' விகிதம் | LS |
|---|---|---|---|---|---|
| குழுவினருக்கு இடையே உள்ள வேறுபாடு | 775.03 | 387.51 | 2 | .53 | NS |
| குழுவினருக்கு உள்ள வேறுபாடு | 1294944.52 | 720.61 | 1797 | | |
| **மொத்தம்** | **1295719.55** | – | **1799** | | |

மேற்குறிப்பிட்ட அட்டவணை எண் 4.17 விலக்கவர்க்கக் கூடுதல், விலக்க வர்க்கச் சராசரி ஒருங்கிணைந்த கூறுகள் மற்றும் (df) மற்றும் 'F' விகிதம் படி கணக்கிடப்பட்ட கல்லூரி மாணவர்களுக்கு இடையேயான மதங்கள் அடிப்படையில் சங்க இலக்கியம் கற்பித்தலில் எந்த வேறுபாடுகள் காணப்படவில்லை.

எனவே இன்மைக் கருதுகோள் ஏற்றுக்கொள்ளப்படுகிறது.

## கருதுகோள் - 18

### சென்னைப் பல்கலைக்கழக மொழிப் பாடத்திட்டத்தில் பாலினத்தின் அடிப்படையில் சங்க இலக்கியம் கற்பித்தல்

### அட்டவணை – 4.18

| பாலினம் | 50–132 | 133–214 | 215–295 | பகுப்பு Column | மொத்தம் |
|---|---|---|---|---|---|
| ஆண் | 62<br>62.0 | 849<br>53.2 | 55<br>52.9 | 966 | 53.7 |
| பெண் | 38<br>38.0 | 747<br>46.8 | 49<br>47.1 | 834 | 46.3 |
| மொத்தம் | 100<br>5.6 | 1596<br>88.7 | 104<br>5.8 | 1800 | 100.0 |

| கை–வர்க்கம் Chi-Square | மதிப்பு Value | ஒருங்கிணைந்த கூறுகள் DF | மிகைத்தன்மை Significance |
|---|---|---|---|
| பியர்சன் | 2.96 | 2 | NS |

மேற்குறிப்பிட்ட அட்டவணை எண் **4.18** பாலின மற்றும் சங்க இலக்கியம் கற்பித்தலுக்கான தொடர்பைக் கணக்கிடப்பட்டுள்ளது. பாலினம் மற்றும் சங்க இலக்கியம் கற்பித்தலுக்கும் எவ்விதத் தொடர்பு இல்லை என்பது கண்டறியப்பட்டுள்ளது.

எனவே இன்மைக் கருதுகோள் ஏற்றுக்கொள்ளப்படுகிறது.

## கருதுகோள் - 19

**சென்னைப் பல்கலைக்கழக மொழிப் பாடத்திட்டத்தில்**

**இருப்பிடம் அடிப்படையில் சங்க இலக்கியம் கற்பித்தல்**

**அட்டவணை – 4.19**

| மாதிரிகள் | 50–132 | 133–214 | 215–295 | Column | மொத்தம் |
|---|---|---|---|---|---|
| கிராமபுறம் | 54<br>54.0 | 927<br>58.1 | 41<br>39.4 | 1022 | 56.8 |
| நகர்புறம் | 46<br>46.0 | 669<br>41.9 | 63<br>60.3 | 778 | 43.2 |
| மொத்தம் | 100<br>5.6 | 1596<br>88.7 | 104<br>5.8 | 1800 | 100.0 |

| கை–வர்க்கம் | மதிப்பு | ஒருங்கிணைந்த கூறுகள் | மிகைத்தன்மை |
|---|---|---|---|
| பியர்சன் | 14.92 | 2 | 0.01 |

மேற்குறிப்பிட்ட அட்டவணை எண் 4.19 படி கிராமம் மற்றும் நகரம் மாணவர்களிடையே சங்க இலக்கியம் கற்பித்தல் தொடர்பான கணக்கின் படி .01 அளவில் கிராமம் / நகரம் மாணவர்களிடையே சங்க இலக்கியம் கற்பித்தலில் தொடர்பு காணப்படுகிறது.

எனவே இன்மைக் கருதுகோள் நிராகரிக்கப்படுகிறது.

**வரைபடம். 4.13**

**சென்னைப் பல்கலைக்கழக மொழிப் பாடத்திட்டத்தில் இருப்பிட அடிப்படையில் சங்க இலக்கியம் கற்பித்தலை விளக்கும் வரைபடம்**






## கருதுகோள் - 20

சென்னைப் பல்கலைக்கழக மொழிப் பாடத்திட்டத்தில் முக்கிய பாடப்பிரிவான கலை மற்றும் அறிவியல் அடிப்படையில் சங்க இலக்கியம் கற்பித்தல்

அட்டவணை – 4.20

| மாதிரிகள் | 50–132 | 133–214 | 215–295 | Column | மொத்தம் |
|---|---|---|---|---|---|
| கலை | 51.<br>51.0 | 778<br>48.7 | 71<br>68.3 | 900 | 50 |
| அறிவியல் | 49<br>49.0 | 818<br>51.3 | 33<br>31.7 | 900 | 50 |
| **மொத்தம்** | **1000**<br>**5.6** | **1596**<br>**88.7** | **104**<br>**5** | **1800** | **100** |

| கை–வர்க்கம் | மதிப்பு | ஒருங்கிணைந்த கூறுகள் | மிகைத்தன்மை |
|---|---|---|---|
| பியர்சன் | 14.92 | 2 | .01 |

மேற்குறிப்பிட்ட அட்டவணை எண் 4.20 படி கலை மற்றும் அறிவியல் மாணவர்களிடையே சங்க இலக்கியம் கற்பித்தல் தொடர்பான கணக்கின் படி .01 அளவில் கலை / அறிவியல் மாணவர்களிடையே கற்பித்தலில் தொடர்பு காணப்படுகிறது.

எனவே இன்மைக் கருதுகோள் நிராகரிக்கப்படுகிறது.

வரைபடம் 4.14

சென்னைப் பல்கலைக்கழக மொழிப் பாடத்திட்டத்தில் முக்கிய பாடப்பிரிவான கலை மற்றும் அறிவியல் அடிப்படையில் சங்க இலக்கியம் கற்பித்தலை விளக்கும் வரைபடம்



## கருதுகோள் - 21

### சென்னைப் பல்கலைக்கழக மொழிப் பாடத்திட்டத்தில் பெற்றோர்களின் கல்வித்குதி அடிப்படையில் சங்க இலக்கியம் கற்பித்தல்

### அட்டவணை – 4.21

| மாதிரிகள் | 50–132 | 133–214 | 215–295 | Column | மொத்தம் |
|---|---|---|---|---|---|
| படிப்பறிவு யின்மை | 33<br>33.0 | 533<br>33.4 | 35<br>33.7 | 601 | 33.4 |
| பள்ளி படிப்பு | 49<br>49.0 | 828<br>51.9 | 55<br>52.9 | 932 | 51.8 |
| பட்டப்படிப்பு | 12<br>12.0 | 164<br>10.3 | 7<br>6.7 | 183 | 10.2 |
| பட்ட மேற்படிப்பு | 6<br>6.0 | 71<br>4.4 | 7<br>6.7 | 84 | 4.7 |
| மொத்தம் | 100<br>5.6 | 1596<br>88.7 | 104<br>5.8 | 1830 | 100.0 |

| கை–வர்க்கம் | மதிப்பு | ஒருங்கிணைந்த கூறுகள் | மிகைத்தன்மை |
|---|---|---|---|
| பியர்சன் | 3.23 | 6 | N.S |

மேற்குறிப்பிட்ட அட்டவணை எண் 4.21 பெற்றோர்களின் கல்வித்தகுதிகள் மற்றும் கற்பித்தலுக்கான தொடர்பைக் கணக்கிடப்பட்டுள்ளது. கல்வித்தகுதி மற்றும் கற்பித்தலுக்கும் எவ்விதத் தொடர்பு இல்லை என்பது கண்டறியப்பட்டுள்ளது.

எனவே இன்மைக் கருதுகோள் ஏற்றுக்கொள்ளப்படுகிறது.

## கருதுகோள் - 22

**சென்னைப் பல்கலைக்கழக மொழிப் பாடத்திட்டத்தில் பெற்றோர்களின் ஆண்டு வருமான அடிப்படையில் சங்க இலக்கியம் கற்பித்தல்**

**அட்டவணை – 4.22**

| மாதிரிகள் | 50–132 | 133–214 | 215–295 | Column | மொத்தம் |
|---|---|---|---|---|---|
| 30000 குறைவு | 48<br>48.0 | 858<br>53.8 | 51<br>49.0 | 957<br>53.2 | 1596<br>88.7 |
| 30000 மேல் | 52<br>52.0 | 736<br>46.1 | 53<br>51.0 | 841<br>46.7 | 104<br>5.8 |
| மொத்தம் | **100<br>5.6** | **1596<br>88.7** | **104<br>5.8** | **1800<br>100.0** | **1800** |

| கை–வர்க்கம் | மதிப்பு | ஒருங்கிணைந்த கூறுகள் | மிகைத்தன்மை |
|---|---|---|---|
| பியர்சன் | 2.31 | 4 | N.S |

மேற்குறிப்பிட்ட அட்டவணை எண் 4.22 பெற்றோர்களின் ஆண்டு வருமானம் மற்றும் சங்க இலக்கியம் கற்பித்தலுக்கான தொடர்பைக் கணக்கிடப்பட்டுள்ளது. மற்றும் ஆண்டு வருமானம் மற்றும் சங்கஇலக்கியம் கற்பித்தலுக்கும் எவ்விதத் தொடர்பு இல்லை என்பது கண்.டறியப்பட்டுள்ளது.

எனவே இன்மைக் கருதுகோள் ஏற்றுக்கொள்ளப்படுகிறது.

## கருதுகோள் - 23

### சென்னைப் பல்கலைக்கழக மொழிப் பாடத்திட்டத்தில் பெற்றோர்களின் தொழில்வகை அடிப்படையில் சங்க இலக்கியம் கற்பித்தல்

### அட்டவணை – 4.23

| மாதிரிகள் | 50–132 | 133–214 | 215–295 | Column | மொத்தம் |
|---|---|---|---|---|---|
| அரசு வேலை | 12<br>12.0 | 125<br>7.8 | 8<br>7.7 | 145 | 8.1 |
| தனியார் வேலை (I.T) | 1<br>1.8 | 27<br>1.7 | 1444<br>90.5 | 28 | 1.6 |
| சுயத் தொழில் | 87<br>87.0 | 736<br>46.1 | 96<br>92.6 | 1627 | 90.4 |
| **மொத்தம்** | **100<br>5.6** | **15.96<br>88.7** | **104<br>5.8** | **1800** | **100.0** |

| கை–வர்க்கம் | மதிப்பு | ஒருங்கிணைந்த கூறுகள் DF | மிகைத்தன்மை |
|---|---|---|---|
| பியர்சன் | 4.22 | 4 | N.S |

மேற்குறிப்பிட்ட அட்டவணை எண் 4.23 பெற்றோர்களின் தொழில் மற்றும் சங்க இலக்கியம் கற்பித்தலுக்கான தொடர்பை கணக்கிடப்பட்டுள்ளது. மற்றும் தொழில் மற்றும் சங்க இலக்கியம் கற்பித்தலுக்கும் எவ்விதத் தொடர்பு இல்லை என்பது கண்டறியப்பட்டுள்ளது.

எனவே இன்மைக் கருதுகோள் ஏற்றுக்கொள்ளப்படுகிறது.

## கருதுகோள் - 24

சென்னைப் பல்கலைக்கழக மொழிப் பாடத்திட்டத்தில்

மதங்கள் அடிப்படையில் சங்க இலக்கியம் கற்பித்தல்

அட்டவணை – 4.24

| மாதிரிகள் | 50–132 | 133–214 | 215–295 | Column | மொத்தம் |
|---|---|---|---|---|---|
| இந்துமதம் | 98<br>98.0 | 1437<br>90.0 | 95<br>91.3 | 1630 | 90.6 |
| கிறித்தவ மதம் | 1<br>1.0 | 115<br>7.2 | 7<br>6.7 | 123 | 6.8 |
| இசுலாமிய மதம் | 1<br>1.0 | 44<br>2.8 | 2<br>1.9 | 47 | 2.6 |
| **மொத்தம்** | **100**<br>**5.6** | **15.96**<br>**88.7** | **104**<br>**5.8** | **1800** | **100.0** |

| கை–வர்க்கம் | மதிப்பு | ஒருங்கிணைந்த கூறுகள் DF | மிகைத்தன்மை |
|---|---|---|---|
| பியர்சன் | 7.28 | 4 | N.S |

மேற்குறிப்பிட்ட அட்டவணை எண் 4.24 மதங்கள் மற்றும் சங்க இலக்கியம் கற்பித்தலுக்கானத் தொடர்பை கணக்கிடப்பட்டுள்ளது. மதங்கள் மற்றும் சங்க இலக்கியம் கற்பித்தலுக்கும் எவ்விதத் தொடர்பு இல்லை என்பது கண்டறியப்பட்டுள்ளது.

எனவே இன்மைக் கருதுகோள் ஏற்றுக்கொள்ளப்படுகிறது.

## அட்டவணை – 4.25

## சென்னைப் பல்கலைக்கழக மொழிப் பாடத்திட்டம்

## 2000 முதல் 2010 வரை பாடத்திட்டம் (SYLLABUS)

| 2000 முதல் 2002 வரை | | | |
|---|---|---|---|
| வ.எண் | சங்க இலக்கியம் | பாடல் எண்ணிக்கை | மொத்தப் பாடல்கள் |
| 1. | நற்றிணை | 55,99,197,218,360 | 5 |
| 2. | புறநானூறு | 18,30,55,125,266,279 | 6 |
| 3. | பதிற்றுப்பத்து | ஏழாம் பத்து (முதல் ஐந்து) | 5 |
| 4. | முல்லைப்பாட்டு | முழுமையும் | – |

2000 முதல் 2002 வரையில் உள்ள பாடத்திட்டத்தில் சங்க இலக்கியப் பாடல்கள் குறைவாகவே இடம் பெற்றுள்ள, முதலாம் ஆண்டு மாணவர்களுக்கும் சங்கப்பாடலைப் பாடத்திட்டத்தில் நடைமுறைப்படுத்த வேண்டும்.

| 2003 முதல் 2006 வரை | | | |
|---|---|---|---|
| வ.எண் | சங்க இலக்கியம் | பாடல் எண்ணிக்கை | மொத்தப் பாடல்கள் |
| 1. கபிலர் பாடிய அகப்பாடல்கள் | | | |
| 1. | அகநானூறு | 2,12 | 2 |
| 2. | ஐங்குறுநூறு | 203.204 | 2 |
| 3. | குறுந்தொகை | 18.38 | 2 |
| 4. | கலித்தொகை | 38.51 | 2 |
| 5. | நற்றிணை | 1,13 | 2 |
| 2. ஔவையார் பாடிய புறப்பாடல்கள் | | | |
| 6. | புறநானூறு | 87,88,91,94,95,100,101 ,187,206,231 | 10 |
| பத்துப்பாட்டு | | | |
| 7. | நெடுநல்வாடை | முழுமையும் | – |

2003 முதல் 2006 ஆம் பாடத்திட்டத்தில் சங்கப்பாடல்கள் அதிகமாகவே இடம் பெற்றுள்ளன. இதே போன்று வருங்காலப் பாடத்திட்டத்தில் சேர்த்தல் வேண்டும். இரண்டாம் ஆண்டு மாணவர்களுக்கு மட்டுமே சங்கப்பாடல்கள் இருக்கின்றன. பல்கலைக்கழக முதலாம் ஆண்டு மாணவர்களுக்கும் சங்கப்பாடல்களை இடம் பெற செய்தல் வேண்டும்.

| 2006 முதல் 2008 வரை | | | |
|---|---|---|---|
| வ. எண் | சங்க இலக்கியம் | பாடல் எண்ணிக்கை | மொத்தப் பாடல்கள் |
| 1. | புறநானூறு | 9,182,183,192,279 | 5 |
| 2. | நற்றிணை | 1,142,120,110,19 | 5 |
| 3. | பரிபாடல் | 5,10,15,20,25,30,35,40,<br>45,50,55,60 | 12 |
| 4. | பட்டினப்பாலை | 1 முதல் 220 அடி வரை | – |

2006 முதல் 2008 வரை உள்ள பாடத்திட்டத்தில் சங்கப்பாடல்களின் எண்ணிக்கையும் 2000 முதல் 2002 பாடத்திட்டத்தில் ஏறக்குறைய ஒரே மாதிரியாகவே இருக்கின்றன. 2003 முதல் 2006 வரை பாடத்திட்டத்தில் உள்ள சங்கப்பாடல் எண்ணிக்கை அதிகமாக இருக்கின்றன. பாடத்திட்டத்தில் சங்கப்பாடல்களை அதிகரிக்கப்படுத்த வேண்டும்.

| 2009 முதல் 2010 வரை | | | |
|---|---|---|---|
| வ.எண் | சங்க இலக்கியம் | பாடல் எண்ணிக்கை | மொத்தப் பாடல்கள் |
| 1. | புறநானூறு | 212,213,214,215,216 | 5 |
| 2. | குறுந்தொகை | 2,3,16,20,31,40,49, 69,124,167 | 10 |
| 3. | கலித்தொகை | பாலைக்கலி 5,10, நெற்கலி –5,10,15 | 5 |
| 4. | பட்டினப்பாலை | முழுமையும் | – |

2009 முதல் 2010 வரை உள்ள பாடத்திட்டத்தில் சங்கப்பாடல் எண்ணிக்கைக் குறைவாகவே காணப்படுகின்றது. இரண்டாம் ஆண்டு மாணவர்களுக்கு மட்டுமே பாடத்திட்டத்தில் இடம் பெற்றுள்ள முதலாம் ஆண்டு மாணவர்களுக்கும் சங்கப்பாடல்களைப் பாடத்திட்டத்தில் இடம் பெறச் செய்ய வேண்டும்.

அட்டவணை – 4.26

**4.3 கற்பித்தலைப் பற்றி மாணவர்களின் கருத்துக்கள்**

| வ. எண். | வினாக்கள் | எப்போதும் | அடிக்கடி | சில சமயங்களில் | எப்போதாவது | எப்போதும் இல்லை | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|
| 1. | செவ்வியல் இலக்கியம் பற்றிய செய்திகளை மாணவர்கள் அறிந்துள்ளனர். | 1082 | 240 | 135 | 165 | 178 | 1800 |
| 2. | சங்கப்பாடலில் உள்ள திணை வகைகளை மாணவர்கள் தெரிந்துள்ளனர். | 620 | 295 | 305 | 437 | 143 | 1800 |
| 3. | பாடம் தொடங்கும் போது பாடல் சூழலைப் பற்றி மாணவர்கள் அறிந்துள்ளனர். | 610 | 315 | 330 | 320 | 125 | 1800 |
| 4. | சங்கப்பாடலை மனப்பாடம் செய்வதற்கு மாணவர்கள் ஆர்வமுடன் இருக்கின்றனர். | 735 | 356 | 400 | 159 | 150 | 1800 |
| 5. | சங்க இலக்கியங்களில் உள்ள அகத்துறைகளைப் பற்றி தெரிந்துள்ளனர். | 690 | 221 | 275 | 454 | 270 | 1800 |
| 6. | புறத்துறைகளையும் பற்றி மாணவர்கள் தெரிந்துள்ளனர். | 675 | 230 | 280 | 415 | 200 | 1800 |
| 7. | தொகை நூல்களைப் பற்றி மாணவர்கள் அறிந்துள்ளனர். | 1350 | 300 | 70 | 60 | 20 | 1800 |
| 8. | சங்கப்பாடல் தொடர்பான பல செய்திகளைப் பற்றி ஆசிரியர்களுடன் மாணவர்கள் ஆலோசனை நடத்துகின்றனர். | 250 | 250 | 153 | 425 | 675 | 1800 |
| 9. | சங்க இலக்கியம் தொடர்பான பல கருத்துக்களைத் தெரிந்துக் கொள்ள மாணவர்கள் ஆர்வமுடன் இருக்கின்றனர். | 765 | 785 | 150 | 113 | 37 | 1800 |

| வ. எண். | வினாக்கள் | எப்போதும் | அடிக்கடி | சில சமயங்களில் | எப்போதாவது | எப்போதும் இல்லை | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|
| 10. | இலக்கியங்கள் தொடர்பான கருத்துகளைப் பற்றி ஆசிரியர் வழங்குகின்றார். | 715 | 485 | 320 | 235 | 45 | 1800 |
| 11. | ஆசிரியர் தரும் ஊக்கத்தினால் சங்கப் பாடலைப் படிப்பதற்கு எளிமையாக இருக்கின்றன. | 630 | 516 | 234 | 310 | 110 | 1800 |
| 12. | சங்க இலக்கியப் பாடலை ஆசிரியர் மாணவர்களுக்குப் புரியும் வகையில் நடத்துகிறார். | 585 | 515 | 220 | 275 | 205 | 1800 |
| 13. | செய்யுள், வடிவிலான சங்கப் பாடலைப் புரிந்துக் கொள்ள மாணவர்கள்சிரமப்படுகின்றனர். | 579 | 536 | 310 | 300 | 75 | 1800 |
| 14. | சங்கப்பாடலை நடத்தும் போது வகுப்பறையில் கற்பித்தல் துணைக்கருவிகளைச் சில சமயங்களில் மட்டும் பயன்படுத்துகின்றனர். | 100 | 110 | 1195 | 200 | 195 | 1800 |
| 15. | சங்க இலக்கியத்தை இயற்றிய புலவர்களைப் பற்றி மாணவர்கள் அறிந்துள்ளனர். | 1235 | 300 | 115 | 100 | 50 | 1800 |
| 16. | சங்க இலக்கியம் தொடர்பாகச் சிந்திக்க ஆசிரியர் வாய்ப்பளிக்கின்றார். | 685 | 215 | 330 | 300 | 270 | 1800 |
| 17. | புறநானூற்றுப் பாடலில் பிசிராந்தையார் கோபெருஞ்சோழனின் நட்பின் மாண்பைப் பாடியுள்ளார் என்பதை ஆசிரியர் வகுப்பறையில் குறிப்பிடுகிறார். | 1300 | 100 | 150 | 175 | 75 | 1800 |

| வ. எண். | வினாக்கள் | எப்போதும் | அடிக்கடி | சில சமயங்களில் | எப்போதாவது | எப்போதும் இல்லை | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|
| 18. | கடினமான சங்கப்பாடல் அடிகளைப் பல்வேறு வழிகளில் ஆசிரியர் மாணவர்களுக்கு விளக்குகிறார். | 655 | 520 | 300 | 275 | 50 | 1800 |
| 19. | ஆசிரியர் சங்கப்பாடல்களைப் படிக்க வேண்டுமென்று கட்டாயப்படுத்துகிறார். | 230 | 170 | 550 | 565 | 385 | 1800 |
| 20. | சங்க இலக்கியம் தொடர்பான பொதுவான செய்திகளைப் பற்றி ஆசிரியர் பேசுகிறார். | 910 | 290 | 450 | 100 | 50 | 1800 |
| 21. | தங்களுடைய சொந்த அனுபவங்களிலிருந்து மாணவர்கள் சங்க இலக்கியம் தொடர்பான செய்திகளை மாணவர்கள் கற்க வேண்டுமென ஆசிரியர் நினைக்கின்றாரா? | 515 | 485 | 100 | 523 | 177 | 1800 |
| 22. | பட்டினப்பாலையில் காப்பியக்கூறுகள் இருக்கின்றன என்று ஆசிரியர் வகுப்பறையில் குறிப்பிடுகின்றாரா? | 56 | 35 | 111 | 615 | 983 | 1800 |
| 23. | ஆசிரியர் தாங்கள் கொடுக்கும் சங்க இலக்கியம் தொடர்பான குறிப்புகளை மட்டுமே படிக்க வேண்டுமென வற்புறுத்துகிறார். | 20 | 9 | 102 | 680 | 989 | 1800 |
| 24. | மாணவர்கள் சங்க இலக்கியம் தொடர்பான மாற்று கருத்துக்களைச் சுதந்திரமாகப் பல்வேறு வழிகளில் வெளிப்படுத்துகின்றார். | 16 | 13 | 200 | 679 | 992 | 1800 |

| வ. எண். | வினாக்கள் | எப்போதும் | அடிக்கடி | சில சமயங்களில் | எப்போதாவது | எப்போதும் இல்லை | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|
| 33. | லெமூரியாக் கண்டத்தைப் பற்றி ஆசிரியர் வகுப்பறையில் கூறுகிறார். | 715 | 301 | 452 | 219 | 113 | 1800 |
| 34. | தமிழ் மொழிக்கும், சமஸ்கிருத மொழிக்கும் உள்ள செம்மொழித் தன்மைகளை ஆசிரியர் மாணவர்களுக்கு எடுத்துரைக்கின்றார். | 73 | 51 | 417 | 918 | 341 | 1800 |
| 35. | சிந்துச் சமவெளி நாகரிகம் தமிழர்களின் நாகரிகம் என்று தகுந்த சான்றுகளுடன் ஆசிரியர் விளக்குகின்றார். | 432 | 374 | 619 | 73 | 302 | 1800 |
| 36. | சங்கப்பாடலில் அகம், புறம் பற்றிய வேறுபாடுகளை ஆசிரியர் மாணவர்களுக்கு விளக்குகிறார். | 793 | 451 | 263 | 86 | 207 | 1800 |
| 37. | சங்க இலக்கியத்தில் காணப்படும் காதல் வாழ்க்கையைப் பற்றிய செய்திகளை ஆசிரியர் குறிப்பிடுகிறார். | 908 | 463 | 281 | 207 | 141 | 1800 |
| 38. | புறநானூற்றில் புலவர்களின் எண்ணிக்கையைப் பற்றியும், அடிகளின் எண்ணிக்கைப் பற்றியும் ஆசிரியர் விளக்குகிறாரா? | 693 | 477 | 302 | 297 | 21 | 1800 |
| 39. | குறுந்தொகைப் பாடலை இயற்றிய புலவர்களைப் பற்றியும், பாடலடி எண்ணிக்கைப் பற்றியும் ஆசிரியர் கூறுகிறார். | 741 | 439 | 392 | 197 | 21 | 1800 |

| வ. எண். | வினாக்கள் | எப்போதும் | அடிக்கடி | சில சமயங்களில் | எப்போதாவது | எப்போதும் இல்லை | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|
| 40. | கலித்தொகை பாடிய புலவர்களைப் பற்றியும், பாடலடி எண்ணிக்கைப் பற்றியும் ஆசிரியர் கூறுகிறார். | 692 | 482 | 397 | 199 | 30 | 1800 |
| 41. | ஆசிரியர் சங்கப்பாடலைக் கற்பிக்கும்போதுமாணவர்களின் விருப்பத்தைப் புரிந்துள்ளனர். | 1015 | 395 | 290 | 75 | 25 | 1800 |
| 42. | பண்டைய தமிழர்களின் பழக்க வழக்கங்களை வகுப்பறையில் மாணவர்களுக்கு ஆசிரியர் விளக்குகிறார். | 1150 | 365 | 200 | 50 | 35 | 1800 |
| 43. | சங்க இலக்கியத்தில் காணப்படும் அழகுணர்ச்சிகளை மாணவர்கள் அறிந்துள்ளனர். | 35 | 15 | 163 | 752 | 835 | 1800 |
| 44. | மூன்று சங்க வரலாற்றைப் பற்றி மாணவர்கள் அறிந்துள்ளனர். | 1100 | 265 | 290 | 95 | 50 | 1800 |
| 45. | செம்மொழிப் பண்புகளைப் பற்றி மாணவர்களுக்கு ஆசிரியர் விளக்கியுள்ளார். | 157 | 123 | 120 | 415 | 985 | 1800 |
| 46. | ஐவகை நிலங்களைப் பற்றி மாணவர்கள் தெரிந்துள்ளன. | 1059 | 300 | 344 | 57 | 100 | 1800 |
| 47. | பெரும் பொழுதுகளைப் பற்றி தெரிந்துள்ளனர் | 850 | 450 | 200 | 100 | 100 | 1800 |
| 48. | சிறுபொழுதுகளைப் பற்றியும் மாணவர்கள் தெரிந்துள்ளனர். | 791 | 418 | 423 | 79 | 89 | 1800 |
| 49. | அகத்திணை மாந்தர்களைப் பற்றி மாணவர்கள் அறிந்துள்ளனர். | 977 | 538 | 246 | 25 | 14 | 1800 |
| 50. | சங்கப்பாடலில் உள்ள போர்ச் செய்திகளை மாணவர்கள் அறிந்துள்ளனர். | 1132 | 428 | 100 | 180 | 60 | 1800 |

மேற்கண்டவாறு மாணவர்களிடம் வினா நிரல் மூலம் செய்திகளைப் பெறப்பட்டன.

1) மாணவர்கள் செவ்வியல் இலக்கியங்களைப் பற்றி அதிகமாகவே அறிந்துள்ளனர். மேலும் மாணவர்கள் அக, புறத்துறைகளைப் பற்றி அதிகமாகவே அறிந்துள்ளனர். சங்கப்பாடல் எண்ணிக்கைப் பற்றி மேலோட்டமாகவே தெரிந்துள்ளனர். சங்கப் பாடல்களை மனப்பாடம் செய்யவும், சங்கப்பாடலில் உள்ள பல கருத்துக்களைத் தெரிந்துக் கொள்ளவும், மாணவர்கள் ஆர்வமுடன் இருக்கின்றார்கள். சங்கப்பாடல் வரிகளைப் படிப்பதற்கு மாணவர்கள் அதிகம் சிரமப்படுகின்றார்கள். பெரும்பாலும் கல்லூரிகளில் கற்பித்தல் துணைக்கருவிகளை ஆசிரியர்கள் பயன்படுத்துவதில்லை.

2) மூன்று சங்க வரலாற்றைப் பற்றியும், பண்டைய தமிழர்களின் பண்பாட்டையும், சங்கப்பாடலில் உள்ள நட்பின் மாந்தர்களைப் பற்றியும் ஐவகை நிலங்களைப் பற்றியும், பெரும் பொழுதுகளைப் பற்றியும், சிறும்பொழுதுகளைப் பற்றியும், போர்ச்செய்திகளைப் பற்றியும், மாணவர்கள் தெரிந்துள்ளனர். மேலும் செம்மொழி பண்புகளைப் பற்றியும், அழகுயுணர்ச்சிகளைப் பற்றியும், செய்திகள் மாணவர்கள் முறையாகத் தெரிந்துள்ளனர்.

3) ஆசிரியர்கள் வகுப்பறைக் கற்பித்தலின் போது மாணவர்களின் மனநிலையை அறிதல் வேண்டும். சங்கப்பாடல்களைப் பற்றிய கருத்துகளைக் கூற மாணவர்களுக்கு ஆசிரியர்கள் வாய்ப்பளிக்க வேண்டும். கல்லூரியில் சங்க இலக்கியம் தொடர்பாக நாடகம், விவாதம், கலந்துரையாடல் போன்றவற்றை நடத்துதல் வேண்டும். கறபித்தலின் போது இன்றைய நவீனத் துணைக்கருவிகள் மூலமாக வகுப்பறையை உயிரோட்டமாக இங்குச் செய்தல் வேண்டும்.

4) லெமூரிய கண்டங்களைப் பற்றியும், தமிழ் அறிஞர்களைப் பற்றியும், சிந்துச் சமவெளி நாகரிகங்களைப் பற்றியும், சங்கப் புலவர்களைப் பற்றியும், மாணவர்கள் அறிந்துள்ளனர்.

5) அகம், புறம் பற்றியச் செய்திகளையும், புறநானூற்றில் உள்ள புலவர்களின் எண்ணிக்கைப் பற்றியும் கலித்தொகையில் உள்ள புலவர்களைப் பற்றியும் மாணவர்கள் தெரிந்துள்ளனர்.

## அட்டவணை 4.27

## பேராசிரியர்களிடம் நேர்காணலின் போது கேட்கப்பட்ட வினாக்கள்

| வரிசை எண் | வாக்கியம் | ஆம் | இல்லை | மொத்தம் |
|---|---|---|---|---|
| 1. | மொழிப்பாடத்திட்டத்தில் சங்கப்பாடல்கள் தேவையா? | 98 | 2 | 100 |
| 2. | சங்க இலக்கியப் பாடல்களைப் பாடி நடத்துகிறீர்களா? | 25 | 75 | 100 |
| 3. | சங்கப் பாடலில் அகப்பொருள், புறப்பொருள் பற்றித் தெரிந்து கொள்கிறார்களா? | 98 | 2 | 100 |
| 4. | சங்கப் பாடல்களை ஓசையுடன் படித்துப் பாடம் நடத்துவதுண்டா? | 80 | 20 | 100 |
| 5. | சங்கப் பாடல் தொடர்பான வினாக்களை மாணவர்கள் கேட்கின்றனரா? | 79 | 21 | 100 |
| 6. | சங்க இலக்கியப் பாடல்களை மனப்பாடம் செய்வதற்கு மாணவர்கள் விரும்புகின்றனரா? | 80 | 80 | 100 |
| 7. | சங்கப் பாடலை மனப்பாடம் செய்வதற்கு எளிமையாக இருக்கின்றனவா? | 78 | 22 | 100 |
| 8. | உங்களுக்குச் சங்கப் பாடல் நடத்துவதற்கு எளிமையாக இருக்கின்றனவா? | 100 | – | 100 |
| 9. | சங்கப்பாடல்களை நடத்தும்போது மாணவர்கள் ஆர்வமுடன் கேட்கின்றார்களா? | 99 | 1 | 100 |
| 10. | சங்க இலக்கியம் படிப்பதால் அக்கால மொழிநடையை மாணவர்கள் அறிந்து கொள்கின்றனரா? | 70 | 30 | 100 |
| 11. | சங்கப் பாடல்களைப் பயில்வதன் வாயிலாகப் பழந்தமிழர்களின் பண்பாட்டினைத் தெரிந்துகொள்கிறார்களா? | 99 | 1 | 100 |
| 12. | சங்க இலக்கிய விழுமியங்கள் இக்காலத்திற்குப் பயன் உடையது என்று நினைக்கிறார்களா? | 85 | 15 | 100 |

| | | | | |
|---|---|---|---|---|
| 13. | செவ்வியல் தன்மைகளைப் பற்றி மாணவர்களுக்குச் சொல்வதுண்டா? | 78 | 2 | 100 |
| 14. | சங்கப் பாடல்களை நடத்தும் போது பல வரலாற்றுச் செய்திகளை மாணவர்களுக்குச் சொல்வதுண்டா? | 99 | 1 | 100 |
| 15. | தொகை நூல்களைப் பற்றிய செய்திகளை நீங்கள் மாணவர்களுக்கு அதிகமாகச் சொல்வதுண்டா? | 92 | 8 | 100 |
| 16. | சங்க இலக்கியம் தொடர்பாகக் கருத்தரங்குகளை நடத்துவதுண்டா? | 40 | 60 | 100 |
| 17. | சங்கப்பாடல்களில் இடம் பெறும் புலவர்கள் பற்றிய செய்திகளை மாணவர்களுக்கு விளக்குவீர்களா? | 98 | 2 | 100 |
| 18. | சங்க இலக்கியப் பாடல் சம்பந்தமாக மாணவர்கள் தங்களிடம் பல கருத்துகளைக் கேட்கின்றார்களா? | 80 | 80 | 100 |
| 19. | சங்கப்பாடல் நடத்தும் போது கற்பித்தல் துணைக்கருவிகளைப் பயன்படுத்துவதுண்டா? | 25 | 75 | 100 |
| 20. | சங்கப்பாடலில் இருக்கும் உள்ளுறை, இறைச்சியைப் பற்றிய செய்திகளை மாணவர்களுக்குச் சொல்வதுண்டா? | 88 | 12 | 100 |

100 பேராசிரியர்களிடம் நேர்காணல் நடத்தப்பட்டன. ஆம், இல்லை என்ற வினா வகைகள் கேட்டறியப்பட்டன. சங்கப்பாடல்களைப் பற்றி ஆசிரியர்கள் வகுப்பறையில் அதிகமாகவே குறிப்பிட்டுள்ளார். கற்றல் கற்பித்தல் கருவிகளைப் பெரும்பாலும் வகுப்பறையில் பயன்படுத்துவதில்லை.

## 4.4 தொகுப்புரை

இவ்இயலில் சென்னைப் பல்கலைக்கழக மொழிப் பாடத் திட்டத்தில் சங்க இலக்கியம் கற்பித்தலின் வினா நிரல்களை மாணவர்களிடம் இருந்து பெறப்பட்ட தகவல்களையும் உண்மை கூறுகளையும் அடிப்படையாக வைத்து புள்ளியியல் முறையில் பகுப்பாய்வு செய்யப்பட்டது. பாடத்திட்டத்தின் அட்டவணைகளும் இடம் பெற்றுள்ளன.

# இயல் - 5

# தொகுப்பாய்வுகளின் முடிவுகள்

# SUMMARY, FINDINGS AND CONCLUSION

## 5.1 முன்னுரை

கல்வி உலகில் விளைந்த புதுமைக்காரணமாக ஏற்பட்ட தொழில் நுட்பக் கருவிகள் இத்துறையில் பெரும் புரட்சியை ஏற்படுத்தி உள்ளன. குறிப்பாகக் கற்பித்தல் பெரும் புரட்சியை ஏற்படுத்தி உள்ளது. கற்பித்தலின் துணைக்கருவிகள் வியக்கத்தக்க ஒன்றாகும். சென்ற இயலில் சங்க இலக்கியம் கற்பித்தலின் விளைவாகக் கிடைக்கப்பெற்ற முடிவுகள் புள்ளிவிவர அடிப்படையில் பகுத்தாயப்பட்டன.

“தரவுகளைத் தொகுத்து அட்டவணைப்படுத்தி விளக்கும் போதுதான் ஆராய்ச்சி என்பது அர்த்தமுள்ளதாக அமைகிறது” என்கிறார் **ஜார்ஜ் மௌலி.**

## 5.2 சிக்கலுக்கான ஆய்வுத் தளங்கள் (Statement of the Problem)

சென்னைப் பல்கலைக்கழக மொழிப் பாடத்திட்டத்தில் சங்க இலக்கியம் கற்பித்தல் முறைகள் **(2000 முதல் 2010 வரை)**

## 5.3 கருதுகோள்கள் (Hypotheses)

1. செவ்வியல் இலக்கியம் பற்றிய செய்திகளை மாணவர்கள் அறிந்துள்ளனர்.
2. சங்கப்பாடலில் உள்ள திணை வகைகளை மாணவர்கள் தெரிந்துள்ளனர்.
3. சங்கப்பாடலை மனப்பாடம் செய்வதற்கு மாணவர்கள் ஆர்வமுடன் இருக்கின்றனர்.
4. சங்க இலக்கியங்களில் உள்ள அகத்துறைகளைப் பற்றியும், புறத்துறைகளையும் பற்றிய அடிப்படைகளை மாணவர்கள் தெரிந்துள்ளனர்.
5. தொகை நூல்களைப் பற்றி மாணவர்கள் அறிந்துள்ளனர்.

6. சங்கப்பாடல் தொடர்பான பல செய்திகளைப் பற்றி மாணவர்கள் ஆசிரியர்களுடன் கலந்துரையாடல் புரிகின்றனர்.

7. சங்க இலக்கியம் தொடர்பான பல கருத்துக்களைத் தெரிந்து கொள்ள மாணவர்கள் ஆர்வமுடன் இருக்கின்றனர்.

8. சங்கச் செய்யுள் வடிவிலான சங்க அகப்புறப் பாடலைப் புரிந்து கொள்ள மாணவர்கள் சிரமப்படுகின்றனர்.

9. ஆசிரியர்கள் சங்கப்பாடலை நடத்தும் போது வகுப்பறையில் கற்பித்தல் துணைக்கருவிகளைச் சில சமயங்களில் மட்டும் பயன்படுத்துகின்றனர்.

10. சங்க இலக்கியத்தை இயற்றிய புலவர்களைப் பற்றி மாணவர்கள் அறிந்துள்ளனர்.

11. புறநானூற்றுப் பாடலில் உள்ள நட்பின் மாந்தர்களைப் பற்றி மாணவர்கள் தெரிந்துள்ளனர்.

12. ஆசிரியர் சங்கப்பாடலைக் கற்பிக்கும் போது மாணவர்களின் விருப்பத்தைப் புரிந்துள்ளனர்.

13. பண்டைய தமிழர்களின் பழக்க வழக்கங்களை வகுப்பறையில் மாணவர்களுக்கு ஆசிரியர் விளக்குகிறார்.

14. சங்க இலக்கியத்தில் காணப்படும் அழகுணர்ச்சிகளை மாணவர்கள் அறிந்துள்ளனர்.

15. மூன்று தமிழ்ச் சங்க வரலாற்றைப் பற்றி மாணவர்கள் அறிந்துள்ளனர்.

16. செம்மொழிப் பண்புகளைப் பற்றி மாணவர்களுக்கு ஆசிரியர் விளக்கியுள்ளார்.

17. ஐவகை நிலங்களைப் பற்றி மாணவர்கள் தெரிந்துள்ளனர்.

18. திணை அடிப்படையிலான பெரும்பொழுதுகளைப் பற்றியும்,சிறுபொழுதுகளைப் பற்றியும் மாணவர்கள் தெரிந்துள்ளனர்.

19. தலைவன், தலைவி, தோழி, பாங்கன், செவிலி நற்றாய் ஆகிய அகத்திணை மாந்தர்களைப் பற்றி மாணவர்கள் அறிந்துள்ளனர்.

20. சங்கப்பாடலில் உள்ள போர்ச் செய்திகளை மாணவர்கள் அறிந்துள்ளனர்.

21. அரசு, தனியார், அரசு உதவி பெறும் கல்லூரிகளிடையே சங்க இலக்கியம் கற்பிக்கும் முறையில் வேறுபாடுகள் காணப்படுகின்றன.

22. கற்பித்தல் துணைக்கருவிகளின் முக்கியத்துவத்தினை அறியவில்லை.

23. மொழிப் பாடம் கற்பிக்கும் ஆசிரியர்களுக்குக் கணினி அறிவு போதுமானதாக இருக்கிறது.

## 5.4 கல்வியியல் தாக்கங்கள்

கல்வித் தொழில் நுட்பத்தில் பல்வேறு முன்னேற்றங்கள் ஏற்பட்டு வருகின்ற இக்காலத்தில் கணினி உள்ளிட்ட அதிநவீனக் கற்பித்தல் துணைக் கருவிகளைக் கொண்டு கற்பித்தலை மேற்கொள்வது மிகவும் முக்கியத்துவம் வாய்ந்ததாகும்.

நம் நாட்டில் கல்லூரிகளில் கற்பித்தல் துணைக்கருவிகளைக் கொண்டு கற்பித்தலை மேற்கொள்வது குறைவாகவே இருக்கின்றது. அதிலும் தமிழ்மொழிப் பாடம் கற்பித்தலில் 100% விழுக்காட்டிற்கு 2% விழுக்காடுகள் மட்டுமே இருக்கின்றது. கணினியைப் பயன்படுத்தித் தமிழ்மொழியைக் கற்பிக்கலாம். ஆனால் ஆசிரியர்கள் ஆர்வம் காட்டுவதில்லை. ஆசிரியர் பெருமக்களுக்கு அடிப்படைக் கணினி அறிவினை அளித்து இனிவரும் காலங்களில் அதிநவீன துணைக்கருவிகளைக் கொண்டு கற்பித்தலைச் செம்மைப் பெற செய்ய வேண்டும். உலகமே திரும்பிப் பார்க்கும் வகையில் தமிழில் வன்பொருட்களும், மென்பொருட்களும் பெருமளவில் உருவாக வேண்டும்.

தமிழில் பல்லூடகக் கணினி வழிக்கற்பித்தல், கணினியில் சுயகற்றல் உருவாதல் போன்றவற்றிற்கான வழிமுறைகள் மேற்கொள்ளப்பட வேண்டும், மாணவர்களுக்கும், ஆசிரியர்களுக்கும் கற்பித்தல் துணைக்கருவிகளையும்,

கணினியைத் தமிழில் பயன்படுத்துவதற்கான பயிற்சிகள் தரப்பட வேண்டும். அரசு, அரசு உதவி பெறும் கல்லூரிகள், தனியார் கல்லூரிகளில் ஆசிரியர்களுக்கும், மாணவர்களுக்கும், கட்டாயமாக ஆரம்ப நிலையிலேயே கணினிக்கல்வி அளித்தல் வேண்டும். இதனால் கணினிப் பற்றியும், கற்பித்தல் துணைக்கருவிகளைப் பற்றியும் நல்ல மனப்பான்மை ஏற்பட்டு, கல்வியில் கணினியின் பயன்பாடும் அதிகரிக்கும்.

மேலும் கற்றல் கற்பித்தல் செயல்பாட்டில் கணினியும், கற்பித்தல் துணைக்கருவிகளையும் பயன்படுத்துவதால் கல்லூரி மாணவர்களிடம் பெரும் மாற்றம் ஏற்பட்டுக் கற்றலில் மிகுத்திறன் பெற்றுச் சிறப்படைவார்கள்.

## 5.5 கல்விநுட்பவியல்

நவீன அறிவியல் மற்றும் தொழில் நுட்பம் கல்வியில் ஏற்படுத்தும் தாக்கம் கல்வி நுட்பவியல் அல்லது கல்வித் தொழில் நுட்பவியல் என்பதாகும். கல்வி நுட்பவியல் கல்வித்துறையில் உருவான ஓர் அறிவியல் அணுகுமுறையாகும். கல்வி நுட்பவியலில் கற்றலின் நோக்கங்களையும், கற்பித்தலின் ஒழுங்கு முறைகளையும் அறிவியல் நோக்கோடு பார்க்கப்படுவதாகும்.

கல்வி நுட்பவியலில் ஆசிரியருக்கு முக்கிய பங்கு உண்டு. கல்வி நுட்பவியலில் ஆசிரியர் கற்பித்தலுக்கு நவீனத் தொழில் நுட்பமான வீடியோ, கணிப்பொறி போன்ற சாதனங்களை உபயோகிக்கின்றார். மொழிப்பாடம் கற்பிக்கும் ஆசிரியர்களும் அதிநவீனக் கற்பித்தல் கருவிகளைப் பயன்படுத்த வேண்டும்.

கற்றல் மற்றும் கற்பித்தலின் தரத்தை உயர்த்த கல்வி நுட்பவியல் பயன்படுகிறது. மாணவர்கள் தானே கற்கவும் திட்டமிட்ட கற்பித்தலுக்கும் (Programmed Instruction) இது பெரிதும் உதவுகிறது.

## 5.6 கல்வி நுட்பவியல் தொடர்பான அறிஞர்களின் கருத்துக்கள்

### 1. அன்வின் (Unwin)

அன்வின் என்பவரின் கூற்றுப்படி "புதிய உத்திகள், புதிய ஆற்றல்கள் இவற்றைக் கல்விக்கும், கல்விப் பயிற்று முறைக்கும் எவ்வாறு பயன்படுத்தலாம் என்று விளக்குவதே கல்வி நுட்பவியல் ஆகும்".

### 2. ஜி.ஓ. லெயித் (G.O. Leith)

ஜி.ஒ. லெயித் என்பவரின் கருத்துப்படி கல்வி நுட்பவியல் என்பது "கற்றலையும், கற்றல் சூழ்நிலையையும் மேம்படுத்தி திறமையாகவும், தாக்கமுடையதாகவும் கற்பித்தலையும் கற்றலையும் வளமுடையதாக்கும் அறிவியல் பயன்பாடாகும்".

### 3. எஸ்.எஸ். குல்கானி (S.S. Kulkarni)

எஸ். எஸ். குல்கானி என்பவரின் கூற்றுப்படி கல்வி நுட்பவியல் என்பது கல்விச் செயல்முறை, தொழில்நுட்பம், விதிகளின் பயன்பாடு அறிவியலுடைய சமீபத்திய கண்டுபிடிப்புகள் என வரையறுக்கப் படுகின்றன.

### 4. ஜான். பி. டிசாக்கோ (John. P. Dececco)

ஜான். பி. டிசாக்கோ என்வரின் கருத்துப்படி கற்றல் உளவியலைக் கற்பித்தல் பிரச்சனைகளுக்குப் பயன்படுத்துவதன் வடிவமே கல்வி நுட்பவியல் ஆகும்.

### 5. ராபர்ட் எ. காக்ஸ் (Robert A. Cox)

ராபர்ட் எ. காக்ஸ் என்பவரின் கருத்துப்படி மனிதனின் கற்றல் நிபந்தனைகளுக்கு அறிவியல் செயல்முறைகளைப் பயன்படுத்துவதே கல்வி நுட்பவியல் ஆகும்.

### 6. டபிள்யூ. கேரிச்மாண்ட் (W. Kenneth Richmond)

டபிள்யூ. கேரிச்மாண்ட் என்பவரின் கருத்துப்படி கற்பித்தலின் நோக்கத்தைச் சிறந்த கற்பித்தல் முறையில் கொடுப்பதற்கு வடிவமைக்கப்படும் கற்றல் சூழ்நிலைச் சார்ந்திருப்பதே கல்வி நுட்பவியல் ஆகும்.

### 7. இ.இ. ஹேடன் (E.E. Hadden)

இ.இ. ஹேடன் என்பவரின் கூற்றுப்படி கல்வி நுட்பவியல் என்பது கல்விக் கோட்பாட்டின் ஒரு பிரிவு ஆகும். அதாவது பயிற்சி முறைகளைச் செய்பாடுகள் மூலம் வடிவமைத்துப் பயிற்சி அளிக்கும் கல்வியில் கோட்பாட்டின் ஒரு பிரிவு ஆகும்.

### 8. டக்காஷி சகநடோ (Takashi Sakanato)

டக்காஷி சகநடோ என்பவரின் கருத்துப்படி கல்வியின் தேவைகள், கல்விச்சூழ்நிலை, மாணவர்களின் நடத்தை, கற்பிப்பவர்களின் நடத்தை மற்றும் மாணவர்கள் மற்றும் கற்பிப்பவர்களுக்கிடையே உள்ள உறவுகள் ஆகியவற்றைச் சிறந்த கற்பித்தல் விளைவுகளுக்காகக் கட்டுப்படுத்துவதே கல்விநுட்பவியல் ஆகும்.

### 9. எஸ்.கே. மித்ரா (S.K. Mitra)

எஸ். கே. மித்ரா என்பவரின் கருத்துப்படி "கல்வியின் உண்மையான நோக்கத்தை அடைவதற்குப் பல்வேறு வழிமுறைகளில் அறிவியல் உத்திகளைப் டயன்படுத்துவது கல்வி நுட்பவியல்" ஆகும்.

மேற்கண்ட அறிஞர் பெருமக்கள் கூற்றுப்படி, வகுப்பறைக் கற்பித்தலில் கற்பித்தல் துணைக் கருவிகளின் முக்கியத்துவம் புலப்படுகிறது.

## 5.7 கற்பித்தல் துணைக்கருவிகள்

கற்பித்தலின் புதுமையான மாற்றங்களை நிகழ்த்துவது கற்பித்தல் துணைக்கருவிகள் ஆகும். கற்றலில் மாணவர்களின் இலக்கிணை அடைவதற்கு

துணையாக இருப்பது துணைக்கருவிகளாகும். ஆசிரியர் வகுப்பில் பயன்படுத்தும் கற்பித்தல் கருவிகளுக்குக் கற்பித்தல் துணைக்கருவிகள், கற்பித்தல் உபகரணங்கள், கற்பித்தல் பொருள்கள் எனப் பல பெயர்கள் உண்டு.

## 5.8 கற்பித்தல் துணைக்கருவிகளின் விளக்கங்கள்

- படச்சுருள் பிரதிபலிப்பான் வீழ்த்தி / நழுவ வீழ்த்தி (Film Strip Projector slide Projector)
- ஒளிபுகா / புகும் படங்கள் காட்டி (Epidiascope)
- தலைக்கு மேல் படவீழ்த்தி (Over Head Projector – OHP)
- அசைவுப் படங்கள் (Motion Pictures)
- வரைபடங்கள் (Graphic Aids)
- கல்வி தொலைக்காட்சி (Education Television)
- வானொலி கல்வி ஒலிபரப்புகள் (Radio)
- கரும்பலகை (Black Board)
- ஒலிப்பதிவு நாடா (Tape Recorder)

**படச்சுருள் பிரதிபலிப்பான் விழ்த்தி / நழுவ விழ்த்தி (FILM STRIP PROJECTOR SLIDE PROJECTOR)**

இதற்கு ஒலிப்படக்கருவி என்றும் சுருள் படக்கருவி என்றும் அழைக்கலாம். படச்சுருள் வீழ்த்தி படச்சுருள்களையும் **2”x2”** நழுவங்களையும் பிரதிபலிக்க உதவுகிறது. இதில் 1. 300 அல்லது 500 வாட்மின் விளக்கு, 2. பிரதிபலிப்பான், 3. அடர்த்தியான லென்ஸ், 4. படத்தைச் சரி செய்வதற்கான திருகி ஆகியவை அடங்கியுள்ளன.

மேற்கண்ட கருவிகளைக் கொண்டு சங்கப்பாடல் தொடர்பான இயற்கைக் காட்சிகள், தலைவன், தலைவி போன்றவர்களின் உருவங்களை நழுவல் மூலமாக மாணவர்களுக்கு விளக்கலாம்.

**ஒளிபுகா/புகும் படங்கள் காட்டி (EPIDIASCOPE)**

'Epi' என்றால் ஒளிப்புகாப் படங்களையும் 'Dia' என்றால் ஒளிபடும் படங்களையும் குறிக்கும். இக்கருவியின் கூடுதலான நிறை என்னவென்றால் இக்கருவி ஒளி ஊடுருவாத பொருட்களையும் ஒளி ஊடுருவக்கூடிய நழுவங்களையும் திரையில் பிரதிபலிக்கக் கூடியது.

சங்க இலக்கியப் பாடல்களையும், பாடலில் உள்ள கதை மாந்தர்களைப் பற்றியும் ஓவியமாக வரைந்து ஒளிபுகா கருவி மூலம் மாணவர்களின் கவனத்தை ஈர்க்கும் வகையில் விளக்குதல் வேண்டும்.

**தலைக்கு மேல் படவிழ்த்தி (OVER HEAD PROJECTOR – OHP)**

மாயவிளக்கு, படவீழ்த்தி, நழுவ வீழ்த்தி இவைகளை விட, மிகுந்த முன்னேற்றமடைந்த கருவி தலைக்குமேல் படப் பிம்பம் வீழ்த்தியாகும்.

OHP – சீட் மேல் பாடல் வரிகளை எழுதி, வண்ண மார்கர் மூலமும், பாடலின் முக்கிய சொற்களை எழுதி வகுப்பறையில் மாணவர்களுக்கு எளிமையாக விளக்கலாம்.

**அசைவுப் படங்கள் (MOTION PICTURES)**

இதில் ஒலியும் அசைவும் இருப்பதாலேயே (Sound and Motion) 16 மி.மீ திரைப்படங்கள் மாணவர்களைப் பெரிதும் கவர்கின்றன.

### வரைபடங்கள் (GRAPHIC AIDS) வகுப்பறையில் பயன்படும் முறைகள்

வரைபடங்கள் என்பது துணைப்படங்கள். ஆகவே இவை கற்பித்தல் உபகரணங்கள். இவை கருத்துக்களையும் மனக்கண்முன் தோற்றுவிக்கவும் எளிதாக்கவும் உதவுகிறது. இன்றைய நவீன வரைபடங்கள் மூலமாக, சங்க இலக்கியம் தொடர்பான கதை மாந்தர்களையும், இயற்கை அழகையும், Graphic மூலமாக வகுப்பறையில் மாணவர்களுக்கு எளிமையாக மனத்தில் பதியும்.

### கல்வி தொலைக்காட்சி (EDUCATION TELEVISION)

1. சங்கப்பாடல் தொடர்பான நிகழ்ச்சிகளைச் சிந்திக்க மாணவர்களுக்கு எளிமையாக இருக்கின்றது.
2. வரலாற்று நிகழ்ச்சிகளை நாடகம் மூலமாகக் காட்டுகிறது.
3. சங்கப்பாடல் கருத்துக்களைப் பாடமாகவும், உரையாடல் மூலமாகவும் தொலைக்காட்சி மூலமாக ஒளி பரப்பலாம்.
4. தலைவன், தலைவி போன்று வேடமிட்டுத் தொலைக்காட்சி மூலமாக நிகழ்ச்சிகளை ஒளிப்பரப்புச் செய்யலாம்.
5. ஒருவரே பேசிக்கொண்டிருக்கும் வகுப்பறைச் சூழலிருந்து தொலைக்காட்சி ஒரு புதுமாற்றத்தை ஏற்படுத்தும்.

### வானொலி கல்வி ஒலிபரப்புகள்

1. மாணவர்கள் கல்வி ஒலிபரப்பிற்குத் தயார்படுத்தும் போது அவர்களிடையே ஆற்றல் அனுபவம் மேம்படுகிறது.
2. வானொலி ஒலிபரப்பைக் கேட்பதற்கு முன்னால் அந்த ஒலிபரப்பின் மையக்கருத்து பற்றி கருத்துக்களை ஆசிரியர் விவரிக்க வேண்டும்.

3. சங்க இலக்கியம் பற்றி மாணவர்களும், மாணவிகளையும் கலந்துரையாடல் செய்யலாம்.

4. சங்க மாந்தர்களைப் பற்றியும், தமிழர்களின் பண்பாட்டைப் பற்றியும் வானொலியில் ஒலிப்பரப்பச் செய்யலாம்.

## கரும்பலகை (BLACK BOARD)

கரும்பலகைதான் பெரும்பாலும் வகுப்பறை கற்பித்தலுக்குப் பயன்படுத்தப்படும் கற்பித்தல் கருவியாகும். கரும்பலகைப் பல வகைப்படும். அவை சுழலும் கரும்பலகை, சுவர் கரும்பலகை, மடக்கும் கரும்பலகை, இன்னும் பலவகைக் கரும்பலகைகள் உள்ளன. காட்சிப் பலகைகளில் கரும்பலகைகளே மிக முக்கியமானவையாகும். கரும்பலகையைப் பயன்படுத்தாத வகுப்பறைகளே இல்லை. கற்பித்தலில் கரும்பலகை முக்கியமான கருவியாகும்.

## ஒலிப்பதிவு நாடா (TAPE RECORDER)

ஒலிப்பதிவு நாடா கற்பித்தல் கருவிகளின் ஒரு உன்னத இடத்தினைப் பெற்றுள்ளன. ஆசிரியர் வகுப்பறையில் பாடங்களை நடத்தும் போது ஒலிப்பதிவு நாடாவில் பதிவு செய்துக் கொள்ளலாம். வகுப்பறை முடிந்த பிறகு ஒலிப்பதிவு நாடாவைக் கேட்டு ஆசிரியர் எந்த அளவிற்கு வகுப்பறை கற்பித்தலில் சிறப்பினைப் பெற்றுள்ளார் என்பதை அவை மதிப்பீடு செய்துக் கொள்ள உதவுகின்றன. மாணவ, மாணவிகளைச் சங்கப்பாடல்களை சரியான உச்சரிப்புடன் படிக்கச் செய்தும், இசைப்பதிவுகளையும் பதிவு செய்ய பயன்படுகிறது.

இசை மற்றும் நாடகம் போன்றவற்றைக் கற்றுக் கொடுக்கவும் பயன்படுகின்றன.

ஒலிப்பதிவு நாடா மற்றும் தயார் செய்யப்பட்ட ஒலிப்பதிவு நாடா பிரதிகள் கல்வியை வளர்ப்பதற்குப் பயன்படுகின்றன. மாணவர்கள் எப்பொழுது

வேண்டுமானாலும் கேட்டுக் கொள்ளவும் தேவையில்லையென்றால் அதை அழித்துவிட்டுப் புதிய செய்திகளைப் பதிவு செய்து கொள்ளவும் அதன் மூலம் புதிய கல்விச் செய்திகளைக் கூறவும் பயன்படுகிறது.

## 5.9 கண்டுபிடிப்புகள்

- மாணவிகளை விட மாணவர்கள் அதிகமாக ஆய்வில் பங்கு பெற்றுள்ளனர்.
- மூன்று வகையான கல்லூரிகளில் சமமாகவே மாணவர்கள் பங்கு பெற்றுள்ளனர். இதில் எந்த மாற்றமும் காணப்படவில்லை. எனவே இன்மைக்கருதுகோள் நிராகரிக்கப்படுகிறது.
- கிராமத்தைக் காட்டிலும், நகர மாணவர்கள் குறைவாகவே பட்டப்படிப்பினை மேற்கொண்டு உள்ளனர்.
- கலை/அறிவியல் மாணவர்கள் சமநிலையில் இருக்கின்றனர். ஆகவே இன்மைக்கருதுகோள் ஏற்றுக்கொள்ளப்படுகிறது.
- மாணவர்களின் பெற்றோர்களின் ஆண்டு வருமானத்தில் மாற்றம் காணப்படுகின்றன. எனவே இன்மைக்கருதுகோள் நிராகரிக்கப்படுகிறது.
- பெற்றோர்களின் தொழிலில் சுயதொழிலை செய்பவர்கள் அதிகமாகவே இருக்கின்றனர்.
- மதங்கள் அடிப்படையில் இந்துமதத்தைச் சார்ந்தவர்கள் அதிகமாகவே இருக்கிறார்கள்.
- சங்க இலக்கியம் கற்பித்தலில் எந்த மாற்றமும் காணப்படவில்லை. ஆகவே இன்மைக்கருதுகோள் ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது.
- கற்பித்தலில் கிராம மாணவர்களை விட நகர மாணவர்கள் அதிகமாகவே சிறந்து விளங்குகின்றனர்.
- அறிவியல் பிரிவு மாணவர்களைக் காட்டிலும், கலை மாணவர்கள் கற்பித்தலில் அதிகம் நாட்டம் கொண்டுள்ளனர்.

- மதங்கள் அடிப்படையில் கற்பித்தலில் எந்த மாற்றமும் காணப் படவில்லை. ஆகவே இன்மைக்கருதுகோள் ஏற்றுக்கொள்ளப் பட்டுள்ளது.
- மூன்றுவகைக் கல்லூரிகளில் கற்பித்தலில் மாற்றம் காணப்படுகின்றன. ஆகவே இன்மைக்கருதுகோள் நிராகரிக்கப்பட்டுள்ளது.
- கல்லூரி வகை மற்றும் பாலின அடிப்படையில் கற்பித்தலில் மாற்றம் காணப்படுகின்றது. ஆகவே இன்மைக்கருதுகோள் நிராகரிக்கப் பட்டுள்ளது.
- கல்லூரி வகை மற்றும் முக்கிய பாடப்பிரிவில் கற்பித்தலில் மாற்றம் காணப்படுகின்றது. ஆகவே இன்மைக்கருதுகோள் நிராகரிக்கப் படுகிறது.
- பெற்றோர்கள் கல்வித்தகுதி மற்றும் முக்கியப் பாடப்பிரிவில் எந்த மாற்றமும் காணப்படவில்லை. ஆகவே இன்மைக்கருதுகோள் ஏற்றுக்கொள்ளப் படுகிறது.
- கல்லூரி வகை மற்றும் ஆண்டு வருமானத்தில் எந்த வேறுபாடும் காணப்படவில்லை. ஆகவே இன்மைக்கருதுகோள் நிராகரிக்கப்படுகிறது.
- பெற்றோர்களின் தொழில் மற்றும் கல்லூரிவகையில் எந்த மாற்றமும் இல்லை. எனவே இன்மைக்கருதுகோள் ஏற்றுக்கொள்ளப்படுகிறது.
- மதங்கள் மற்றும் கல்லூரிவகையில் கற்பித்தலில் எந்தமாற்றமும் காணப்படவில்லை. ஆகவே இன்மைக்கருதுகோள் ஏற்றுக்கொள்ளப் படுகிறது.
- பாலினம் மற்றும் சங்க இலக்கியம் கற்பித்தலில் மேற்கொண்ட சோதனையில் இன்மைக்கருதுகோள் ஏற்றுக்கொள்ளப்படுகிறது.
- கிராமம் மற்றும் நகரம், மாணவர்களிடையே சங்க இலக்கியம் கற்பித்தலில் மேற்கொண்ட சோதனையில் இன்மைக்கருதுகோள் நிராகரிக்கப்படுகிறது.
- பெற்றோர்களின் கல்வித்தகுதி மற்றும் சங்க இலக்கியம் கற்பித்தலில் மேற்கொண்ட சோதனையில் இன்மைக்கருதுகோள் ஏற்றுக்கொள்ளப் படுகிறது.

- பெற்றோர்கள் ஆண்டு வருமானம் மற்றும் சங்க இலக்கியம் கற்பித்தலில் மேற்கொண்ட ஆய்வில் இன்மைக்கருதுகோள் ஏற்றுக் கொள்ளப்படுகிறது.
- சங்க இலக்கியம் கற்பித்தல் மற்றும் பெற்றோர்களின் தொழில் அடிப்படையில் மேற்கொண்ட சோதனையில் இன்மைக்கருதுகோள் ஏற்றுக்கொள்ளப் படுகிறது.
- மதங்கள் மற்றும் சங்க இலக்கியம் கற்பித்தலில் மேற்கொண்ட ஆய்வில் இன்மைக்கருதுகோள் ஏற்றுக்கொள்ளப்படுகிறது.
- கல்லூரி வகை மற்றும் சங்க இலக்கியம் கற்பித்தலில் மேற்கொண்ட சோதனையில் இன்மைக்கருதுகோள் நிராகரிக்கப்படுகிறது.
- அரசு கல்லூரி மற்றும் அரசு உதவிபெறும் கல்லூரிகளில் கற்பித்தல் வேறுபாடுகள் காணப்படுகின்றது. ஆகவே இன்மைக்கருதுகோள் நிராகரிக்கப்படுகிறது.
- அரசு உதவிபெறும் கல்லூரிகள் மற்றும் தனியார் கல்லூரிகளில் கற்பித்தலில் வேறுபாடுகள் காணப்படுகின்றன. ஆகவே இன்மைக்கருதுகோள் நிராகரிக்கப்படுகிறது.
- பெற்றோர்களின் கல்வித்தகுதி மற்றும் கற்பித்தலில் மேற்கொண்ட சோதனையில் எந்த மாற்றமும் ஏற்படவில்லை. ஆகவே இன்மைக்கருதுகோள் ஏற்றுக்கொள்ளப்படுகிறது.

## 5.10 பரிந்துரைகள்

- ○ சென்னைப் பல்கலைக்கழக தமிழ் மொழிப் பாடத்திட்டத்தில் சங்கப்பாடல் பகுதியை அதிகப்படுத்துதல் வேண்டும்.
- ○ கற்றல்–கற்பித்தல் நவீனத் துணைக் கருவிகளை வகுப்பறையில் பயன்படுத்துதல் வேண்டும்.

- ஆசிரியர்கள் விரிவுரை மட்டுமல்லாமல் கலந்துரையாடல் மூலம் வகுப்பறைக் கற்பித்தலை மேற்கொள்ள வேண்டும்.
- ஆசிரியர்கள் கட்டாயம் கணினிப் பயிற்சிப் பெறுதல் வேண்டும்.
- மொழிப் பாடத்திட்டத்தில் முதலாம் ஆண்டிலேயே சங்க இலக்கியப் பாடத்தினை நடைமுறைப் படுத்த வேண்டும்.
- அரசு கல்லூரி, அரசு உதவி பெறும் கல்லூரி, தனியார் கல்லூரிகளில் கற்பித்தல் கருவிகளை வகுப்பறைகளில் பயன்படுத்த அரசு ஆணையிட வேண்டும்.

## 5.11 வருங்கால ஆய்வுகளுக்கான பரிந்துரைகள்

- மொழிப் பாடத்திட்ட மாணவர்களை தவிர இளங்கலைத் தமிழ், முதுகலைத் தமிழ் பயிலும் மாணவர்களின் பாடத்திட்டத்தையும் ஆய்விற்கு உட்படுத்தலாம்
- சென்னைப் பல்கலைக்கழக பாடத்திட்டம் மட்டுமன்றி தமிழ்நாட்டில் உள்ள அனைத்துப் பல்கலைக் கழக மொழிப் பாடத்திட்டத்திலும் சங்க இலக்கியம் கற்பித்தல் முறைகளை ஆய்வுக்குட்படுத்தலாம்.
- மருத்துவ, பொறியியல் கல்லூரிகளில் கட்டாயமாக மொழி பாடத்திட்டத்தினை நடைமுறைப் படுத்தவேண்டும்.

## 5.12 தொகுப்புரை

'சென்னைப் பல்கலைக்கழக மொழிப் பாடத்திட்டத்தில் சங்க இலக்கியம் கற்பித்தல் முறைகள்' (2000 முதல் 2010 வரை) என்ற தலைப்பின் கீழ் செய்யப்பட்ட இவ்வாய்வின் மூலம் சங்க இலக்கியம் குறித்த மனப்பான்மையை அறிய முடிகிறது. அறிஞர் பெருமக்கள் குறிப்பிடும் கல்வி நுட்பவியலின் கருத்துகள் இடம் பெற்றுள்ளன. இவ்இயலில், சங்க இலக்கியம் கற்பித்தலும் ஆய்வு கண்டுபிடிப்புகளும், பரிந்துரைகளும் இடம் பெற்றுள்ளன.

# நிறைவுரை

சென்னைப் பல்கலைக்கழக மொழிப் பாடத்திட்டத்தில் சங்க இலக்கியம் கற்பித்தல் முறைகள் (2000 முதல் 2010 வரை) என்ற தலைப்பில் அமைந்த இந்த ஆய்வேட்டில் கற்பித்தல் கோட்பாடுகள் தொடங்கி தொகுப்பாய்வுகளின் முடிவுகள் என்ற இயல் ஈறாக மேற்கொள்ளப்பட்ட ஆய்வுகளின் முடிவுகளாக இந்த நிறைவுரைப் பகுதி அமைகின்றது.

- சென்னைப் பல்கலைக்கழக மொழிப் பாடத்திட்டத்தில் அமைந்துள்ள சங்க இலக்கியப் பாடப்பகுதிகளைக் கற்கும் முறை குறித்து சில புதிய ஆய்வு முடிவுகள் வழங்கப்பட்டுள்ளன.
- கற்பித்தல் தொடர்பான கோட்பாடுகளைப் பற்றிய செய்திகள் தொகுத்து வழங்கப்பட்டு கற்பித்தலுக்கான பொது விளக்கங்கள் இங்கு தரப்பட்டுள்ளன. கற்பித்தலின் உளவியல் கோட்பாடுகள் பெறும் பங்கு குறித்து விளக்கப்பட்டுள்ளன.
- ஆசிரியர்களின் செயல்பாடுகள், கற்பித்தலின் நோக்கங்கள், ஐம்புலன் பயிற்சி மற்றும் உணர்தல் கோட்பாடுகள் பற்றிய செய்திகள் விவரிக்கப்பட்டுள்ளன.
- ஆலை–பாசி அவர்களின் நுண்ணிலைக் கற்பித்தலும் அவை தொடர்பான செய்திகளும் திறன்களும் ஆய்வுமுறையில் விரிவாக விளக்கப்பட்டுள்ளன.
- ஆசிரியரின் கற்பித்தலின் அடிப்படைத்திறன்களும், வகுப்பறையில் மாணவர்களிடையே கற்பித்தலுக்கான உளவியல் பாங்கும் விவரிக்கப்பட்டுள்ளன.
- கற்றல் கற்பித்தல் தொடர்பான அயல்நாட்டு அறிஞர்களின் சார்பிலக்கியங்களும், இந்திய நாட்டு அறிஞர்களின் சார்பிலக்கியங்களும் ஆய்வுநோக்கில் அணுகப்பட்டு கற்றல் கற்பித்தல் தொடர்பான புதுமைமுறைகள் விவரிக்கப்பட்டுள்ளன.

- சார்பு இலக்கியங்கள் தொடர்பான செய்திகள் நூல்களிலிருந்தும், இத்துறை தொடர்பானை முன்னைய ஆய்வேடுகளிலிருந்தும், இணையதளத்தில் இருந்தும், இதழ்களில் இருந்தும், தரவுகளைச் சேகரிக்கப்பட்டு ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டுள்ளன.
- கற்பித்தல் தொடர்பாக கல்வியியல் துறையில் மேலைநாடுகளில் மேற்கொண்ட ஆய்வுகளும், இந்தியாவில் மேற்கொண்ட ஆய்வுகளும் ஒருங்கிணைத்துப் பார்க்கப்பட்டு இவை தொடர்பான செய்திகள் விவரிக்கப்பட்டுள்ளன.
- ஆய்வு நெறிமுறைகள் அரசு கல்லூரிகள், அரசு உதவி பெறும் கல்லூரிகள், தனியார் கல்லூரிகளில் சங்க இலக்கியம் கற்பிக்கும் முறைகள் குறித்து தரவுகள் சேகரிக்கப்பட்டு அவை தொடர்பான முடிவுகள் வெளியிடப்பட்டுள்ளன.
- கல்வியியல் ஆய்வு நெறிமுறைகளின் அடிப்படையில் சங்க இலக்கியம் கற்பிக்கும் முறைகள் தொடர்பான செய்திகள் பகுப்பாய்வு செய்யப்பட்டுள்ளது.
- ஆய்வின் நம்பகத்தன்மை குறித்து வரைபடங்களின் வழி விளக்கப்பட்டுள்ளது.
- கல்லூரிகளிடையே உள்ள கற்பித்தல் வேறுபாடுகளும் ஆராய புள்ளியியல் நுட்பங்கள் பயன்படுத்தி முடிவுகள் பெறப்பட்டுள்ளன.
- புள்ளியியல் ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட மூன்று வகையான கல்லூரிகளிலும் வினா நிரல் மூலம் சேகரிக்கப்பட்டு ஆய்வுக்கு உட்படுத்தி முடிவுகள் தரப்பட்டுள்ளன.
- பாலின அடிப்படையில் மாணவி, மாணவர்களிடையே கற்றலில் காணப்படும் வேறுபாடுகளை கண்டறியப்பட்டுள்ளன.

- அரசு கல்லூரிகள், அரசு உதவி பெறும் கல்லூரிகள், தனியார் கல்லூரிகளுக்கு இடையே உள்ள கற்பித்தல் வேறுபாடுகள் வினா நிரல் மூலம் கண்டறியப்பட்டுள்ளன.
- பெற்றோர்களின், கல்வித்தகுதி, பெற்றோர்களின் தொழில்வகை, ஆண்டு வருமானம் மற்றும் சமயம் தொடர்பான செய்திகள் மாணவர்களின் கற்றலுக்கு எவ்வகையில் உறுதுணை புரிகின்றன என்ற செய்திகள் கண்டறியப்பட்டுள்ளன.
- கற்கும் மாணவர்களின் பாலின அடிப்படையிலும், வசிப்பிட அடிப்படையிலும் தரவுகள் சேகரிக்கப்பட்டு ஆய்வுக்குட்படுத்தி கற்றலில் சிலவற்றின் பங்கு எவ்வகையில் உள்ளது என்பது கண்டறியப்பட்டுள்ளது.
- கல்வி நுட்பவியல் பற்றிய அணுகுமுறைகளின் அடிப்படையில் சங்க இலக்கியம் எவ்வாறு கற்பிக்கப்படுகிறது என்பது கண்டறியப்பட்டுள்ளது.
- மாணவர்களின் கற்றல் திறன் மேம்பட சங்க இலக்கியத்தை எப்படி புதிய அணுகுமுறையில் கற்பிக்கலாம் என்பதற்கான பரிந்துரைகள் இவ்வாய்வில் முன் வைக்கப்பட்டுள்ளன.

# துணைநூற்பட்டியல்


1. அண்ணா அறிஞர் – ஏ! தாழ்ந்த தமிழகமே,
முல்லை நிலையம்,
தி.நகர்,
சென்னை,
பதிப்பு 2009.

2. அட்கின்ஸன், டேரி. – மொழிக் கற்பித்தல் வகுப்புகளில்
தகவல் தொழில் நுட்பம்
மொழிக் கற்பித்தல் மற்றும்
ஆய்வு தகவல் மையம்,
இங்கிலாந்து,
பதிப்பு 1992.

3. அபுசிலிக், அலி பர்ஹான் – கணினி துணையோடு
குழுவினராக ஒருங்கிணைந்து
மொழிக் கற்றல்
கருத்துச்சுருக்கம்,
எரிக்,
பதிப்பு 1992.

4. இராமலிங்கம், பாஞ். – **கல்வியும் உளவியலும்,**
சாரதா பதிப்பகம்,
இராயப்பேட்டை,
சென்னை,
பதிப்பு 2007.

5. இராஜேஸ்வரி, என். – **கலைத்திட்டச் செயல்பாட்டின் கோட்பாடுகள்,**
சாந்தா பப்ளிஷர்ஸ்,
இராயப்பேட்டை,
சென்னை–14.
பதிப்பு 2006.

6. இரத்தினசபாபதி – **செம்மொழிக்கல்வி,**
சாந்தா பப்ளிஷர்ஸ்,
இராயப்பேட்டை,
சென்னை–14.
பதிப்பு 2007.

7. இராஜம்மாள் ராஜகோபால் – **கற்பித்தல் மாதிரிகள்**

**ஓர் அணுகுமுறை,**

சாந்தா பப்ளிஷர்ஸ்,

இராயப்பேட்டை,

சென்னை,

பதிப்பு 2008.

8. கணபதி, வி. – **நற்றமிழ் கற்பிக்கும் முறைகள்,**

சாந்தா பப்ளிஷர்ஸ்,

இராயப்பேட்டை,

சென்னை,

பதிப்பு 2006.

9. மேலது – **தமிழ் ஐவகைப்பாடங்களும்**

**திறன் அடிப்படையில்**

**கற்பித்தலும்,**

சாந்தா பப்ளிஷர்ஸ்,

இராயப்பேட்டை,

சென்னை,

பதிப்பு 2006.

10. சிவத்தம்பி கார்த்திகேசு – **தமிழ் கற்பித்தல்,**
குமரன் புத்த இல்லம்,
கொழும்பு,
பதிப்பு 2007.

11. கென்னடி ஜெரால்டைன் – **கணினி துணையோடு மொழிக்கற்றல் கருத்துச்சுருக்கம்,**
எரிக்,
பதிப்பு 1992.

12. கோதண்டராமன், பொன். – **தமிழ் உணர்ச்சி, தமிழ் வளர்ச்சி, தமிழ் ஆட்சி,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
அம்பத்தூர்,
சென்னை,
பதிப்பு 1994.

13. கோவிந்தராசன், மு. – **திறன்மிகு கற்பித்தல்,**
எம்.எஸ். பப்ளிகேஷன்ஸ்,
திருவல்லிக்கேணி,
சென்னை,
பதிப்பு 1984.

14. .... – **தமிழ்மொழி கற்பித்தல் வளநூல் – முதலாமாண்டு,**
தமிழ்நாட்டுப் பாடநூல் கழகம்,
சென்னை,
பதிப்பு 2010.

15. **சந்திரசேகரன், சோ.** – **சமகாலக் கல்வி முறைகள் ஒரு விரிவுநிலை நோக்கு,**
பத்மம் பதிப்பகம்,
மண்ணச்ச நல்லூர்,
திருச்சி,
பதிப்பு 2009.

16. **சுப்புரெட்டியார், ந.,** – **தமிழ் பயிற்றும் முறை**
மெய்யப்பன் பதிப்பகம்,
சிதம்பரம்,
பதிப்பு 2008.

17. **திண்ணப்பன்** – **கணினியும் தமிழ் கற்பித்தலும்**
புலமை வெளியீடு,
ஆழ்வார்பேட்டை,
சென்னை,
பதிப்பு 1995.

18. செல்வராசு, சிலம்பு நா. – **தமிழியல் ஆய்வுகள் பன்முகப்பார்வை,**
காவ்யா,
பெங்களூர்,
பதிப்பு 2001.

19. துரைக்கண்ணு, ப. – **கல்விக்கலை,**
அமுதநிலையம் பிரைவேட் லிமிடெட்,
தேனாம்பேட்டை,
சென்னை,
பதிப்பு 1962.

20. நாகராஜன், கி. – **கல்விப் புள்ளியியல்–II,**
இராம் பதிப்பகம்,
சாலிகிராமம்,
சென்னை,
பதிப்பு 2009.

21. நாகராஜன், கி. – **கல்வி ஆராய்ச்சி நெறிமுறைகள்,**
இராம் பதிப்பகம்,
சாலிகிராமம்,
சென்னை,
பதிப்பு 2009.

22. நாகராஜன், கி. – **கல்வி உளவியல்,**
இராம் பதிப்பகம்,
சாலிகிராமம்,
சென்னை,
பதிப்பு 2007.

23. பரந்தாமனார், அ.கி. – **தமிழ் இலக்கியம் கற்க,**
அல்லி நிலையம்,
சென்னை,
பதிப்பு 1994.

24. மாணிக்கம், வ.சுப. – **கம்பர்,**
மெய்யப்பன் பதிப்பகம்,
சிதம்பரம்–1,
பதிப்பு 2001.

25. மீனாட்சிசுந்தரம், அ. – **ஆசிரியர் கல்வி,**
காவ்யமாலா பப்ளிஷர்ஸ்,
திண்டுக்கல்,
பதிப்பு 2010.

26. மீராபால் – பிரிட்டன் நாட்டில் நவீன மொழிகளைப் பயிலும் கல்லூரி பல்கலைக்கழக மாணவர்களிடையே நடத்திய புள்ளியியல் ஆய்வு, ரௌதாம்டன் பல்கலைக்கழகம், பதிப்பு 1995.

27. வேணுகோபால், இ.பா. சாந்தகுமாரி, கே. – பொதுத்தமிழ் கற்பித்தல், சாரதா பதிப்பகம், இராயப்பேட்டை, சென்னை, பதிப்பு 2009.

28. விஜயலட்சுமி இராமசாமி – கற்பித்தலில் சிக்கல்கள்–தீர்வுகள், சாரதா பதிப்பகம், இராயப்பேட்டை, சென்னை, பதிப்பு 2007.

29. ஜெயராசா, சபா. – **தாய்மொழிக் கல்வியும் கற்பிக்கும் கலையும்,**
சேமமடு பதிப்பகம்,
தத்தார்ச்சரியார் தோட்டம்,
திருச்சி,
பதிப்பு 2009.

**இதழியல்**

1. ஆனந்த கிருஷ்ணன், மு. – **தமிழ்மொழி வளர்ச்சியில் இணையத்தின் பங்கு,**
உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு,
ஆய்வு சிறப்பு மலர்,
கோவை,
பதிப்பு 2010.

2. கல்பனா செல்வராஜ், கே. – **ஊடகங்களில் தமிழ், தொலைக்காட்சியில் தமிழ்,**
உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு,
ஆய்வு சிறப்பு மலர்,
கோவை,
பதிப்பு 2010.

3. கேல்ம் – ஒர்லாண்டே – இரண்டாம் மொழிக் கற்பித்தலில் கணினி
அயல்நாட்டு தொடர்பு மொழிகள் இதழ்,
பதிப்பு 1992.

4. திருவாசகம், க. – கணினித் தமிழ் வளர்ச்சி,
உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு,
ஆய்வு சிறப்பு மலர்.
கோவை,
பதிப்பு 2010.

5. மணவை முஸ்தபா – கணினிக் கலைச்சொல்லாக்கம்,
உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு,
ஆய்வு சிறப்பு மலர்,
கோவை,
பதிப்பு 2010.

6. மதிவாணன், பா. சேரன் – தமிழ் இனி – 2000 மாநாட்டுக் கட்டுரைகள், நாகர்கோவில், பதிப்பு 2000.

7. நக்கீரன், ப.அர. – இணையத் தமிழ் வளர்ச்சி, உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு, ஆய்வுச் சிறப்பு மலர். கோவை, பதிப்பு 2010.

8. ஆண்டோபீட்டர், மா. – கணினித் தமிழின் வளர்ச்சியும் சாதனைகளும், உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு, ஆய்வுச் சிறப்பு மலர், கோவை, பதிப்பு 2010.

9. இராமையா, கா. – சிங்கப்பூரில் தமிழ் கற்றல் கற்பித்தல் தொடர்பான ஆய்வுகள்,
உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு,
ஆய்வுச் சிறப்பு மலர்,
கோவை,
பதிப்பு 2010.

## JOURNALS

1. .... - **Mastery of Service,**
Kwansei Gakuin University,
Japan,
Testing as an a Educational too Vol.16/ 2011.

2. .... - **Mastery of Service,**
Kwansei Gakuin University,
Japan,
Peer Teaching and Learner Responsibility Vol.16, 2011.

3. **Skinner, B.F.** - **The Technology of Teaching,**

4. **Brumfit, CJ** - **Communicative methodology in Language Teaching the Role of Fluency and Accuracy Cambridge,** Cambridge University Press. 1984.

5. Rober, P. Tayler - **The Computer in the School: Tutor, Tool, Tutee, Newyork, Teaching College Press**, 1980.

**இணையதளம்**

1. http://www.cmu.edu/teaching/principles

2. www.ictnt.org/om/warschaluer.htm

## தன்விவர பட்டியல்

1. ஆசிரியர் பெயர் :

2. வகுப்புகள் : B.A. ☐☐☐ B.Sc. ☐☐☐

3. கல்லூரியின் பெயரும் முகவரியும் :

4. கல்லூரி வகை : அரசு கல்லூரி / அரசு உதவிப்பெறும் கல்லூரி / தனியார் கல்லூரி

5. இனம் : ஆண் / பெண்

6. கல்வித் தகுதி :

### சங்க இலக்கியம் கற்பித்தல் ஆய்வு

**கீழே குறிப்பிட்ட தகவல்களைத் தருக**

**குறிப்புகள்:**

உங்கள் கல்லூரியில் சங்க இலக்கியம் கற்பித்தல், நிகழ்வுகள் இங்குத் தரப்பட்டுள்ளன என்பதை முடிவு செய்து கொடுக்கப்பட்டுள்ள 2 பதில்களில் ஏதாவது ஒன்றில் ☑ குறிப்பிடவும்.

நீங்கள் கொடுக்கும் தகவல்கள் இரகசியமாக வைக்கப்பட்டு ஆராய்ச்சிக்கு மட்டும் பயன்படுத்தப்படும். எல்லாக் கேள்விகளுக்கும் விடையளிக்கவும்.

| வரிசை எண் | வாக்கியம் | ஆம் | இல்லை |
|---|---|---|---|
| 1. | மொழிப்பாடத்திட்டத்தில் சங்கப்பாடல்கள் தேவையா? | | |
| 2. | சங்க இலக்கியப் பாடல்களைப் பாடி நடத்துகிறீர்களா? | | |
| 3. | சங்கப் பாடலில் அகப்பொருள், புறப்பொருள் பற்றித் தெரிந்து கொள்கிறார்களா? | | |
| 4. | சங்கப் பாடல்களை ஓசையுடன் படித்துப் பாடம் நடத்துவதுண்டா? | | |
| 5. | சங்கப் பாடல் தொடர்பான வினாக்களை மாணவர்கள் கேட்கின்றனரா? | | |
| 6. | சங்க இலக்கியப் பாடல்களை மனப்பாடம் செய்வதற்கு மாணவர்கள் விரும்புகின்றனரா? | | |
| 7. | சங்கப் பாடலை மனப்பாடம் செய்வதற்கு எளிமையாக இருக்கின்றனவா? | | |
| 8. | உங்களுக்குச் சங்கப் பாடல் நடத்துவதற்கு எளிமையாக இருக்கின்றனவா? | | |
| 9. | சங்கப்பாடல்களை நடத்தும்போது மாணவர்கள் ஆர்வமுடன் கேட்கின்றார்களா? | | |
| 10. | சங்க இலக்கியம் படிப்பதால் அக்கால மொழிநடையை மாணவர்கள் அறிந்து கொள்கின்றனரா? | | |
| 11. | சங்கப் பாடல்களைப் பயில்வதன் வாயிலாகப் பழந்தமிழர்களின் பண்பாட்டினைத் தெரிந்துகொள்கிறார்களா? | | |
| 12. | சங்க இலக்கிய விழுமியங்கள் இக்காலத்திற்குப் பயன் உடையது என்று நினைக்கிறார்களா? | | |
| 13. | செவ்வியல் தன்மைகளைப் பற்றி மாணவர்களுக்குச் சொல்வதுண்டா? | | |
| 14. | சங்கப் பாடல்களை நடத்தும் போது பல வரலாற்றுச் செய்திகளை மாணவர்களுக்குச் சொல்வதுண்டா? | | |

| | | | |
|---|---|---|---|
| 15. | தொகை நூல்களைப் பற்றிய செய்திகளை நீங்கள் மாணவர்களுக்கு அதிகமாகச் சொல்வதுண்டா? | | |
| 16. | சங்க இலக்கியம் தொடர்பாகக் கருத்தரங்குகளை நடத்துவதுண்டா? | | |
| 17. | சங்கப்பாடல்களில் இடம் பெறும் புலவர்கள் பற்றிய செய்திகளை மாணவர்களுக்கு விளக்குவீர்களா? | | |
| 18. | சங்க இலக்கியப் பாடல் சம்பந்தமாக மாணவர்கள் தங்களிடம் பல கருத்துகளைக் கேட்கின்றார்களா? | | |
| 19. | சங்கப்பாடல் நடத்தும் போது கற்பித்தல் துணைக்கருவிகளைப் பயன்படுத்துவதுண்டா? | | |
| 20. | சங்கப்பாடலில் இருக்கும் உள்ளுறை, இறைச்சியைப் பற்றிய செய்திகளை மாணவர்களுக்குச் சொல்வதுண்டா? | | |

# பொது விவரம்

1. மாணவர் பெயர் :

2. வகுப்பும் பிரிவும் :

3. கல்லூரியின் பெயரும் முகவரியும் :

4. கல்லூரி வகை : அரசு கல்லூரி / அரசு உதவிப்பெறும் கல்லூரி / தனியார் கல்லூரி

5. இனம் : ஆண் / பெண்

6. மதம் : இந்து / முஸ்லீம் / கிறிஸ்துவம்

7. இருப்பிடம் : கிராமம் / நகரம்

8. முக்கியப்பாடப் பிரிவு : அறிவியல் / கலை

9. பெற்றோர்களின் கல்வித்தகுதி : 1 ☐ 2 ☐ 3 ☐

10. பெற்றோர்களின் தொழில் :

11. பெற்றோர்களின் ஆண்டு வருமானம் :

## சங்க இலக்கியம் கற்பித்தல் ஆய்வு

**கீழே குறிப்பிட்ட தகவல்களைத் தருக**

**குறிப்புகள்:**

உங்கள் கல்லூரியில் சங்க இலக்கியம் கற்பித்தல், நிகழ்வுகள் இங்குத் தரப்பட்டுள்ளன. எத்தனை முறை உங்கள் ஆசிரியர்கள் பயன்படுத்தியுள்ளார் என்பதை முடிவு செய்து கொடுக்கப்பட்டுள்ள 5 பதில்களில் ஏதாவது ஒன்றில் ☑ குறிப்பிடவும்.

நீங்கள் கொடுக்கும் தகவல்கள் இரகசியமாக வைக்கப்பட்டு ஆராய்ச்சிக்கு மட்டும் பயன்படுத்தப்படும்.

எல்லாக் கேள்விகளுக்கும் விடையளிக்கவும்.

| வ. எண். | வினாக்கள் | எப்போதும் | அடிக்கடி | சில சமயங்களில் | எப்போதாவது | எப்போதும் இல்லை | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|
| 1. | செவ்வியல் இலக்கியம் பற்றிய செய்திகள் ஆசிரியர் சொல்வதுண்டா? | | | | | | |
| 2. | சங்க இலக்கியப் பாடல்களில் உள்ள திணை வகைகளை ஆசிரியர் எடுத்துரைக்கின்றாரா? | | | | | | |
| 3. | பாடம் தொடங்கும் போது பாடல் சூழலைப் பற்றி ஆசிரியர் விளக்குகின்றாரா? | | | | | | |
| 4. | சங்க இலக்கியப் பாடலை நீங்கள் மனப்பாடம் செய்வதுண்டா? | | | | | | |
| 5. | சங்க அகத்துறைகளைப் பற்றி ஆசிரியர் சொல்வதுண்டா? | | | | | | |
| 6. | சங்கபுறத் துறைகளைப் பற்றி பொது அறிவுகளை ஆசிரியர் சொல்வதுண்டா? | | | | | | |
| 7. | தொகை நூல்களை வரிசையாக படிக்க வேண்டுமென்று ஆசிரியர் ஊக்கப்படுத்துகின்றாரா? | | | | | | |
| 8. | சங்க இலக்கியப்பாடம் தொடர்பான பல செய்திகளைப் பற்றி ஆசிரியருடன் கலந்து ஆலோசிப்பதுண்டா? | | | | | | |
| 9. | சங்க இலக்கியம் தொடர்பான கருத்துகளைத் வளர்த்துக் கொள்ள ஆசிரியர் ஊக்கப்படுத்துகின்றாரா? | | | | | | |
| 10. | இலக்கியங்கள் தொடர்பான கருத்துகளைப் பற்றி ஆசிரியர் சொல்வதுண்டா? | | | | | | |
| 11. | ஆசிரியர் தரும் ஊக்கத்தினால் சங்கப் பாடலைப் படிப்பதற்கு எளிமையாக இருக்கின்றனவா? | | | | | | |
| 12. | சங்க இலக்கியப் பாடலை ஆசிரியர் உங்களுக்குப் புரியும் வகையில் நடத்துகின்றாரா? | | | | | | |
| 13. | செய்யுள் வடிவிலான சங்கப்பாடல்களை உங்களால் எளிமையாகப் புரிந்து கொள்ள முடிகின்றதா? | | | | | | |
| 14. | சங்கப்பாடல்களை வகுப்பறையில் நடத்தும்போது கற்பித்தல் கருவிகளைப் பயன்படுத்துகின்றாரா? | | | | | | |

| வ. எண். | வினாக்கள் | எப்போதும் | அடிக்கடி | சில சமயங்களில் | எப்போதாவது | எப்போதும் இல்லை | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|
| 15. | சங்க இலக்கியத்தை இயற்றிய புலவர்களைப் பற்றிய செய்திகளை ஆசிரியர் கூறுகின்றாரா? | | | | | | |
| 16. | புறநானூற்றுப் பாடலில் பிசிராந்தையார் கோப்பெருஞ்சோழனின் நட்பின் மாண்பைப் பாடியுள்ளார் என்பதை ஆசிரியர் வகுப்பறையில் குறிப்பிடுகிறார். | | | | | | |
| 17. | சங்க இலக்கியம் தொடர்பாகச் சிந்திக்க ஆசிரியர் வாய்ப்பளிக்கின்றாரா? | | | | | | |
| 18. | கடினமான சங்கப்பாடல் அடிகளைப் பல்வேறு வழிகளில் ஆசிரியர் மாணவர்களுக்கு விளக்குகிறாரா? | | | | | | |
| 19. | ஆசிரியர் சங்கப்பாடல்களைப் படிக்க வேண்டுமென்று கட்டாயப்படுத்துகின்றாரா? | | | | | | |
| 20. | சங்க இலக்கியம் தொடர்பான பொதுவான செய்திகளைப் பற்றி ஆசிரியர் பேசுகின்றாரா? | | | | | | |
| 21. | தங்களுடைய சொந்த அனுபவங்களிலிருந்து சங்க இலக்கியம் தொடர்பான செய்திகளை மாணவர்கள் கற்க வேண்டுமென ஆசிரியர் நினைக்கின்றாரா? | | | | | | |
| 22. | ஆசிரியர் சங்கப்பாடல்களைக் கற்பிக்கும்போது மாணவர்களின் விருப்பத்தைக் கருத்தில் கொள்வதுண்டா? | | | | | | |
| 23. | பட்டினப்பாலையில் காப்பியக் கூறுகள் இருக்கின்றன என்று ஆசிரியர் வகுப்பறையில் குறிப்பிடுகின்றாரா? | | | | | | |
| 24. | ஆசிரியர் தாங்கள் கொடுக்கும் சங்க இலக்கியம் தொடர்பான குறிப்புகளை மட்டுமே படிக்க வேண்டுமென வற்புறுத்துவதுண்டா? | | | | | | |
| 25. | மாணவர்கள் சங்க இலக்கியம் தொடர்பான மாற்று கருத்துக்களைச் சுதந்திரமாகப் பல்வேறு வழிகளில் வெளிப்படுத்துகின்றாரா? | | | | | | |

| வ. எண். | வினாக்கள் | எப்போதும் | அடிக்கடி | சில சமயங்களில் | எப்போதாவது | எப்போதும் இல்லை | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|
| 26. | கல்வி சார்ந்த நிகழ்வுகளில் (விவாதம், நாடகம், கலந்துரையாடல்) பங்கேற்க ஆசிரியர் மாணவர்களை ஊக்கப்படுத்துகின்றாரா? | | | | | | |
| 27. | சங்கப்பாடல்களை நடத்தும் போது பிற இலக்கியங்களையும் படிக்க ஆசிரியர் ஊக்கப்படுத்துகின்றாரா? | | | | | | |
| 28. | சங்க இலக்கிய பாடம் நடத்தும்போது கற்பித்தல் துணைக்கருவிகளைப் பயன்படுத்துகின்றார். | | | | | | |
| 29. | சங்க இலக்கியம் சார்ந்த பல சிறப்புக் கருத்துகளை ஆசிரியர் வெளிப்படுத்துகின்றார். | | | | | | |
| 30. | பண்டைய தமிழர்களின் பழக்க வழக்கங்களை வகுப்பறையில் ஆசிரியர் கூறுகின்றாரா? | | | | | | |
| 31. | சங்கப்பாடல்களை எளிமையாகப் படிப்பதற்குப் பல ஆலோசனைகளை ஆசிரியர் வழங்குகின்றாரா? | | | | | | |
| 32. | எட்டுத்தொகை, பத்துப்பாட்டுப் பற்றி ஆசிரியர் குறிப்பிடுகின்றாரா? | | | | | | |
| 33. | சங்கஇலக்கியத்தில் அழகுணர்ச்சியை ஆசிரியர்கள் வெளிப்படுத்துகின்றனரா? | | | | | | |
| 34. | கல்லூரியின் முதலாம் ஆண்டில் சங்கப்பாடல்களைப் படிக்க வேண்டுமென்று விரும்பியதுண்டா? | | | | | | |
| 35. | மூன்று சங்கங்களில் உள்ள புலவர்களின் எண்ணிக்கைகளைப் பற்றி ஆசிரியர் கூறுகின்றாரா? | | | | | | |
| 36. | மூன்று சங்கங்களில் வரலாற்றைப் பற்றி ஆசிரியர் வகுப்பறையில் கூறுகின்றாரா? | | | | | | |
| 37. | உலக அறிஞர் சொல்கின்ற தமிழ் மொழியின் சிறப்புகளை ஆசிரியர் வகுப்பறையில் எடுத்துரைக்கின்றாரா? | | | | | | |
| 38. | லெமூரியாக் கண்டத்தைப் பற்றி ஆசிரியர் வகுப்பறையில் கூறுகின்றாரா? | | | | | | |

| வ. எண். | வினாக்கள் | எப்போதும் | அடிக்கடி | சில சமயங்களில் | எப்போதாவது | எப்போதும் இல்லை | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|
| 39. | தமிழ் மொழிக்கும், சமஸ்கிருத மொழிக்கும் உள்ள செம்மொழித் தன்மைகளை ஆசிரியர் மாணவர்களுக்கு எடுத்துரைக்கின்றாரா? | | | | | | |
| 40. | சிந்து சமவெளி நாகரிகம் தமிழர்களின் நாகரிகம் என்று தகுந்த சான்றுகளுடன் ஆசிரியர் விளக்குகின்றாரா? | | | | | | |
| 41. | ஐவகை நிலங்களைப் பற்றி வகுப்பறையில் ஆசிரியர் பேசுகின்றாரா? | | | | | | |
| 42. | பெரும் பொழுதுகளைப் பற்றி ஆசிரியர் வகுப்பறையில் கூறுகின்றாரா? | | | | | | |
| 43. | சிறு பொருளைப் பற்றி ஆசிரியர் வகுப்பறையில் கூறுகின்றாரா? | | | | | | |
| 44. | அகத்திணை மாந்தர் கூற்றுகளைப் பற்றி ஆசிரியர் வகுப்பறையில் குறிப்பிடுகின்றாரா? | | | | | | |
| 45. | சங்கப்பாடலில் அகம், புறம் பற்றிய வேறுபாடுகளை ஆசிரியர் மாணவர்களுக்கு விளக்குகின்றாரா? | | | | | | |
| 46. | சங்க இலக்கியப் பாடலில் போர்ச் செய்திகளைப் பற்றி ஆசிரியர் மாணவர்களுக்கு விளக்குகின்றாரா? | | | | | | |
| 47. | சங்க இலக்கியத்தில் காணப்படும் காதல் வாழ்க்கையைப் பற்றிய செய்திகளை ஆசிரியர் குறிப்பிடுகின்றாரா? | | | | | | |
| 48. | புறநானூற்றில் புலவர்களின் எண்ணிக்கையைப் பற்றியும், அடிகளின் எண்ணிக்கைப் பற்றியும் ஆசிரியர் விளக்குகின்றாரா? | | | | | | |
| 49. | குறுந்தொகைப் பாடலை இயற்றிய புலவர்களைப் பற்றியும், பாடலடி எண்ணிக்கைப் பற்றியும் ஆசிரியர் கூறுகின்றாரா? | | | | | | |
| 50. | கலித்தொகை பாடிய புலவர்களைப் பற்றியும், பாடல் அடிகளின் எண்ணிக்கைப் பற்றியும் ஆசிரியர் குறிப்பிடுகின்றாரா? | | | | | | |

# சென்னைப் பல்கலைக்கழக மொழிப்பாடத்திட்டத்தில் சங்க இலக்கியம் கற்பித்தல் முறைகள் (2000 முதல் 2010 வரை)

சென்னைப் பல்கலைக்கழக
முழுநேர முனைவர் (பிஎச்.டி.) பட்டப் பேற்றிற்காக
அளிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்
**வீ. அர்ச்சுணன்,** எம்.ஏ., எம்.எட்., எம்.ஃபில்.,
தமிழ்த்துறை
மாநிலக்கல்லூரி (தன்னாட்சி)
சென்னை–600 005

மேற்பார்வையாளர்
முனைவர் **ஜே.ஆர். இலட்சுமி**
எம்.ஏ., எம்.ஃபில்., எம்.எட்., பிஎச்.டி. (தமிழ்)
எம்.ஏ., (வரலாறு & சுற்றுலாவியல்) பிஎச்.டி., (கல்வியியல்)
தமிழ் இணைப்பேராசிரியர்
மாநிலக் கல்லூரி (தன்னாட்சி)
சென்னை–600 005




தமிழ்த்துறை
**மாநிலக் கல்லூரி (தன்னாட்சி)**
சென்னை - 600 005

**அக்டோபர் - 2012**

# நிறைவுரை

சென்னைப் பல்கலைக்கழக மொழிப் பாடத்திட்டத்தில் சங்க இலக்கியம் கற்பித்தல் முறைகள் (2000 முதல் 2010 வரை) என்ற தலைப்பில் அமைந்த இந்த ஆய்வேட்டில் கற்பித்தல் கோட்பாடுகள் தொடங்கி தொகுப்பாய்வுகளின் முடிவுகள் என்ற இயல் ஈறாக மேற்கொள்ளப்பட்ட ஆய்வுகளின் முடிவுகளாக இந்த நிறைவுரைப் பகுதி அமைகின்றது.

- சென்னைப் பல்கலைக்கழக மொழிப் பாடத்திட்டத்தில் அமைந்துள்ள சங்க இலக்கியப் பாடப்பகுதிகளைக் கற்கும் முறை குறித்து சில புதிய ஆய்வு முடிவுகள் வழங்கப்பட்டுள்ளன.
- கற்பித்தல் தொடர்பான கோட்பாடுகளைப் பற்றிய செய்திகள் தொகுத்து வழங்கப்பட்டு கற்பித்தலுக்கான பொது விளக்கங்கள் இங்கு தரப்பட்டுள்ளன. கற்பித்தலின் உளவியல் கோட்பாடுகள் பெறும் பங்கு குறித்து விளக்கப்பட்டுள்ளன.
- ஆசிரியர்களின் செயல்பாடுகள், கற்பித்தலின் நோக்கங்கள், ஐம்புலன் பயிற்சி மற்றும் உணர்தல் கோட்பாடுகள் பற்றிய செய்திகள் விவரிக்கப்பட்டுள்ளன.
- ஆலை–பாசி அவர்களின் நுண்ணிலைக் கற்பித்தலும் அவை தொடர்பான செய்திகளும் திறன்களும் ஆய்வுமுறையில் விரிவாக விளக்கப்பட்டுள்ளன.
- ஆசிரியரின் கற்பித்தலின் அடிப்படைத்திறன்களும், வகுப்பறையில் மாணவர்களிடையே கற்பித்தலுக்கான உளவியல் பாங்கும் விவரிக்கப்பட்டுள்ளன.
- கற்றல் கற்பித்தல் தொடர்பான அயல்நாட்டு அறிஞர்களின் சார்பிலக்கியங்களும், இந்திய நாட்டு அறிஞர்களின் சார்பிலக்கியங்களும் ஆய்வுநோக்கில் அணுகப்பட்டு கற்றல் கற்பித்தல் தொடர்பான புதுமைமுறைகள் விவரிக்கப்பட்டுள்ளன.

- சார்பு இலக்கியங்கள் தொடர்பான செய்திகள் நூல்களிலிருந்தும், இத்துறை தொடர்பானை முன்னைய ஆய்வேடுகளிலிருந்தும், இணையதளத்தில் இருந்தும், இதழ்களில் இருந்தும், தரவுகளைச் சேகரிக்கப்பட்டு ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டுள்ளன.
- கற்பித்தல் தொடர்பாக கல்வியியல் துறையில் மேலைநாடுகளில் மேற்கொண்ட ஆய்வுகளும், இந்தியாவில் மேற்கொண்ட ஆய்வுகளும் ஒருங்கிணைத்துப் பார்க்கப்பட்டு இவை தொடர்பான செய்திகள் விவரிக்கப்பட்டுள்ளன.
- ஆய்வு நெறிமுறைகள் அரசு கல்லூரிகள், அரசு உதவி பெறும் கல்லூரிகள், தனியார் கல்லூரிகளில் சங்க இலக்கியம் கற்பிக்கும் முறைகள் குறித்து தரவுகள் சேகரிக்கப்பட்டு அவை தொடர்பான முடிவுகள் வெளியிடப்பட்டுள்ளன.
- கல்வியியல் ஆய்வு நெறிமுறைகளின் அடிப்படையில் சங்க இலக்கியம் கற்பிக்கும் முறைகள் தொடர்பான செய்திகள் பகுப்பாய்வு செய்யப்பட்டுள்ளது.
- ஆய்வின் நம்பகத்தன்மை குறித்து வரைபடங்களின் வழி விளக்கப்பட்டுள்ளது.
- கல்லூரிகளிடையே உள்ள கற்பித்தல் வேறுபாடுகளும் ஆராய புள்ளியியல் நுட்பங்கள் பயன்படுத்தி முடிவுகள் பெறப்பட்டுள்ளன.
- புள்ளியியல் ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட மூன்று வகையான கல்லூரிகளிலும் வினா நிரல் மூலம் சேகரிக்கப்பட்டு ஆய்வுக்கு உட்படுத்தி முடிவுகள் தரப்பட்டுள்ளன.
- பாலின அடிப்படையில் மாணவி, மாணவர்களிடையே கற்றலில் காணப்படும் வேறுபாடுகளை கண்டறியப்பட்டுள்ளன.

- அரசு கல்லூரிகள், அரசு உதவி பெறும் கல்லூரிகள், தனியார் கல்லூரிகளுக்கு இடையே உள்ள கற்பித்தல் வேறுபாடுகள் வினா நிரல் மூலம் கண்டறியப்பட்டுள்ளன.
- பெற்றோர்களின், கல்வித்தகுதி, பெற்றோர்களின் தொழில்வகை, ஆண்டு வருமானம் மற்றும் சமயம் தொடர்பான செய்திகள் மாணவர்களின் கற்றலுக்கு எவ்வகையில் உறுதுணை புரிகின்றன என்ற செய்திகள் கண்டறியப்பட்டுள்ளன.
- கற்கும் மாணவர்களின் பாலின அடிப்படையிலும், வசிப்பிட அடிப்படையிலும் தரவுகள் சேகரிக்கப்பட்டு ஆய்வுக்குட்படுத்தி கற்றலில் சிலவற்றின் பங்கு எவ்வகையில் உள்ளது என்பது கண்டறியப்பட்டுள்ளது.
- கல்வி நுட்பவியல் பற்றிய அணுகுமுறைகளின் அடிப்படையில் சங்க இலக்கியம் எவ்வாறு கற்பிக்கப்படுகிறது என்பது கண்டறியப்பட்டுள்ளது.
- மாணவர்களின் கற்றல் திறன் மேம்பட சங்க இலக்கியத்தை எப்படி புதிய அணுகுமுறையில் கற்பிக்கலாம் என்பதற்கான பரிந்துரைகள் இவ்வாய்வில் முன் வைக்கப்பட்டுள்ளன.